# கல்கி

KALKI 30.4.2000 ரூ. 5.00



'கூட்டணி' ஜாலி;
கூடாரம் காலி!
– ஸ்பெஷல் ரிப்போர்ட்

"இது வாழ்க்கையாச்சு!"

– விக்ரம்

கடந்த ஜனவரி மாதம் பதினெட்டாம் தேதியிலிருந்து, இன்று வரை கிண்டியிலுள்ள டான்ஸி வளாகத்தில் கிட்டத்தட்ட ஒரு லட்சம் தொண்டர்களைச் சந்தித்திருக்கிறார் ஜெயலலிதா. 'அவர்கள் சொன்ன' குற்றச்சாட்டுக்களின் அடிப்படையில் முப்பதுக்கும் மேற்பட்ட மாவட்டச் செயலாளர்கள், அறுபதுக்கும் மேற்பட்ட ஒன்றியச் செயலாளர்கள் மற்றும் நூற்றுக்கணக்கான இளைக் கழகச் செயலாளர்களைப் பொறுப்பிலிருந்து நீக்கியிருக்கிறார். செங்கோட்டையன், சின்னசாமி ஆகியோரிடம் கட்சிப்



# 'கூட்டணி' ஜாலி; கூடாரம் காலி!

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



• ஜெயராம்



• சேடபட்டி முத்தையா



• ரகுபதி

பொறுப்பைப் பிடுங்கி விட்ட நிலையில் உச்சகட்டமாக சேடப்பட்டி முத்தையா, ரகுபதி, கருப்பசாமி பாண்டியன் ஆகியோரைக் கட்சியை விட்டே தூக்கியடித்து விட்டார் ஜெயலலிதா.

எம்.ஜி.ஆர். கூட எந்தக் கட்டத்திலும், கட்சியின் செயல்பாடுகளை நிர்ணயிக்கும் இரண்டாம் கட்டத் தலைவர்களை இப்படி ஒட்டுமொத்தமாக வெளியேற்றியதில்லை. ஜெயலலிதாவின் இந்த அதிரடிப் போக்கு மாற்றுக் கட்சித் தலைவர்களிடையே கூட, 'அட என்ன இது... இப்படிப் பொளந்து கட்டறாங்களே' என்று வியக்க வைத்திருக்கிறது.

ஜெ – சசி கூட்டணிதான் ஜாலியாக இருக்கிறதே தவிர, அ.தி.மு.க. கூட்டணிக் கட்சிகள் மொத்தமே ஆடிப் போயிருக்கின்றன.

''கூட்டணியில் முக்கியமான கட்சி அ.தி.மு.க.தான். அதற்கு ஏதாவது பிரச்னை என்றால் ஒட்டுமொத்த செல்வாக்கும் பாதிக்கப்படும். அதுவும் தேர்தல் இன்னமும் சில மாதங்களில் வர இருக்கும் நிலையில் அந்தம்மா இப்படிச் செயல்படுவது கட்சியை மிகவும் பாதிக்கத்தான் செய்யும்'' என்றார் ஒரு கூட்டணிக் கட்சியின் செயலாளர். இதற்கிடையில், ''என்னால் தூக்கியெறியப்பட்டவர்கள் பத்து நாட்களுக்குப் பத்திரிகைகளில் பரபரப்பு காட்டுவார்கள். அப்புறம் மூலையில் உட்கார வைக்கப்படுவார்கள்'' என்று ஜெயலலிதா சொல்லியிருக்கிறார்.

''மூன்று பேரை வெளியேற்றியதன் காரணம் அவர்கள் கட்சிக்குச் செய்த துரோகம்தான்'' என்று ஜெயலலிதா குற்றச்சாட்டு படித்தாலும், ''எங்களை அவர் நீக்கியதற்குக் காரணம் மன்னார்குடிக் கூட்டம் (சசிகலா மற்றும் அவரது சுற்றம்)தான். தினகரனைக் கட்சியின் பொதுச்செயலாளராக்கும் நோக்கத்தில் இருக்கும் அந்தக் கூட்டம், எங்களைப் போன்றவர்கள் அந்த முயற்சிக்குத் தடையாக இருக்கப் போகிறோம் என்று கருதி, ஜெயலலிதாவிடம் (கோள்) சொல்லி நீக்கிவிட்டனர்'' என்கிறார்கள் விலக்கப்பட்ட மூன்று பேரும்.

''1998 பாராளுமன்றத் தேர்தல்களில் அமோக வெற்றி பெற்ற கழகம் 1999ல் எதிர்பார்த்த அளவு வெற்றி பெறாததற்குக் காரணம் தி.மு.க.விடம் உறவு வைத்துக் கொண்டு சில துரோகிகள் செயல்படாது போனதுதான்'' என்கிறார் ஜெயலலிதா.

ஆனால், ''அ.இ.அ.தி.மு.க. தேர்தல்களில் கடந்த காலங்களில் வெற்றி பெற்று வந்தது என்றால் அதற்கு அடிப்படைக் காரணம் எம்.ஜி.ஆரும் இரட்டை இலையும்தானே தவிர, ஜெயலலிதா அல்ல. இவருக்கு செல்வாக்கு இருக்கிறது என்றால் 1989ல் சேவல் சின்னத்தில் போட்டியிட்டோமே! அப்போது வெற்றி பெறவில்லையே. 1991ல் ராஜீவ்காந்தியின் இறப்பால் எழுந்த அனுதாப அலையில் வென்றோம். 1996ல் தோல்வி. 1998 பாராளுமன்றத் தேர்தல்களில் வென்ற காரணம், வாஜ்பாயின் பெயருக்காக மக்கள் வோட்டு போட்டதுதான். 1999 பாராளுமன்றத் தேர்தலில் மறுபடி தோல்வி. எனவே இவர் தொடர்ந்து அ.இ.அ.தி.மு.க.வின் தலைமைப் பொறுப்பில் இருந்தால் இன்னும் சிறிது காலத்தில் கட்சியே காணாமல் போய்விடும்'' என்று நம்மிடம் சொன்னார் ரகுபதி.

''உட்கட்சித் தேர்தல்களில் நாங்கள் ஏதோ முறைகேடுகள் செய்து விட்டதாகச் சொல்கிறார். 'இந்தந்த ஆளை மாவட்டச் செயலாளரா போடுங்க; அவர் சொல்லும் ஆட்களுக்கு மாவட்டப் பொறுப்புகள் கொடுங்க' என்று இவரே ஆணையிடும்போது நாங்கள் எப்படி முறைகேடுகள் செய்ய முடியும்?'' என்று கேட்கிறார் ரகுபதி.

''கருப்பசாமி பாண்டியனும், ரகுபதியும் தி.மு.க.வுக்குப் போய் விடுவார்கள்'' என்று

திருப்பித் திருப்பி அந்தம்மா சொல்வதற்குக் காரணம் தொண்டர்கள் அவர்களைச் சுற்றி அணிவகுக்கக் கூடாது என்பதால்தான்" என்கிறார் நீக்கப்பட்ட நெல்லை டவுன் கழக செயலாளரான வேலாயுதம். கருப்பசாமி பாண்டியனின் தீவிர ஆதரவாளர் இவர்.

வழக்கமாக நீக்கப்பட்ட தலைவர்கள் சில நாட்கள் பத்திரிகைகளில் பரபரப்பாக அறிக்கை விடுவார்கள். அப்புறம் வெளியே உள்ள, ஏற்கெனவே நீக்கப்பட்ட பிரமுகர்களுடன் தொடர்பு கொள்வார்கள். ஆனால் அவர்களுக்குள் தலைமைப் பொறுப்பு என்பதில் பிரச்னை உண்டாகும். உடனே தனித்தனியாக 'ஆஃப்'ஆகி விடுவார்கள். அ.இ.அ.தி.மு.க. கடல். அது குளமல்ல வற்றிப் போவதற்கு" என்கிறார் இப்போது ஜெயலலிதாவின் அருட்பார்வையில் இருக்கும் மூத்த தலைவர் ஒருவர்.

ரகுபதி மேல் ஜெவுக்குக் கோபம் வரக் காரணம் ஜெயா தொலைக்காட்சிக்கு 'பண உதவி' செய்யாததுதான் என்கிறார்கள். இது பற்றி நாம் நேரடியாக ரகுபதியிடம் கேட்ட போது, அவர் இதை மறுக்கவில்லை.

• 'மூவர்' கூட்டம்

ரகுபதிக்கு சினிமா உலகத் தொடர்புண்டு. குறிப்பாக ரஜினிகாந்த் ரகுபதியின் நண்பராம்.

நீக்கப்பட்டவர்களில் சேடப்பட்டியின் நிலைதான் பரிதாபம். தனி நீதிமன்றத்தால் தண்டனை விதிக்கப்பட்டுள்ள அவரை எந்தக் கட்சியிலும் ஏற்றுக் கொள்ளும் நிலை இல்லை. திருநாவுக்கரசுவின் எம்.ஜி.ஆர். அ.தி.மு.க.வில் சேடப்பட்டி சேர வாய்ப்புகள் இருப்பதாகச் சொல்கிறார்கள்.

"கொஞ்ச காலம் பேசாமல் இருங்கள். மீண்டும் அம்மாவோடு இணைந்து கொள்ளலாம் என்று அவரது சமுதாயத்தைச் சேர்ந்த தலைவர்கள் சேடப்பட்டியிடம் சொல்லியிருக்கிறார்கள். 'குறிப்பாக சட்டமன்றத் தேர்தல் அறிவிக்கப்பட்ட பின் போய் சேர்ந்து கொள்ளலாம்' என்கிறார்களாம். "யோசித்துத்தான் முடிவு செய்ய வேண்டும்; ஆனால் பா.ஜ.க.விடம் ஐந்து கோடி வாங்கி விட்டதாக என் மீது அபாண்டமாகப் பழி போட்டிருக்கிறார்கள். கட்சிக்கு எந்தக் காலத்திலும் துரோகம் செய்தது கிடையாது" என்று நம்மிடம் சொன்னார் சேடப்பட்டி.

சில மாதங்களுக்கு முன்னர் இவர் மகன் திருமணத்தில் ஜெ. பேசும் போது, "விசுவாசம் என்றால் சேடப்பட்டி என்று அர்த்தம்" என்று சொன்னது குறிப்பிடத்தக்கது.

தமது நம்பிக்கையிலிருந்து நழுவி விட்ட மூத்த தலைவர்களின் பதவியைப் பிடுங்கவும், கட்சியிலிருந்து நீக்கவும் ஜெயலலிதா கையாண்ட முறையைப் பற்றித்தான் கட்சியில் பேசி மாளவில்லை. டான்ஸி வளாகத்தில் நடக்கும் கூட்டங்களில் 'யாரை வெளியேற்ற வேண்டும்' என்று நினைக்கிறாரோ, அவரைப் பற்றிய குற்றச்சாட்டுகளைச் சொல்லுமாறு கட்சிக்காரர்கள் கேட்டுக் கொள்ளப்படுவார்களாம். உதாரணமாக நெல்லைத் தொகுதி கூட்டம் நடக்கும் போது புலவர் சங்கரலிங்கம் என்பவர் மூலம் (இவர் இப்போது தலைமை நிலையப் பொறுப்பாளர்) நெல்லை பிரமுகர்களான முத்துக்கருப்பன், நைனா ராமசுந்தரம், ராஜசேகர் ஆகியோரிடம் முன்னதாகவே 'கருப்பசாமி பாண்டியனைத் தாக்கி நீங்கள் பேச வேண்டும்' என்று அம்மா விரும்புகிறார் என்று சொல்லப்பட்டதாம். அவர்களும் அப்படியே பேசினார்கள். அவர்களுக்குக் கருப்பசாமி பாண்டியனின் ஆட்கள் பதில் சொல்ல முயலும் போது, "நீங்க உங்க கருத்தைப் பேசுங்க. மற்றவர்களைக் குறை சொல்லிப் பேசாதீங்க" என்று ஜெ.வால் மேடையிலிருந்து இறக்கி விடப்பட்டார்களாம்!

சேடப்பட்டி, தொண்டர்களுக்கு வணக்கம் சொல்வதில்லை என்பது கூட பெரிய புகாராகச் சொல்லப்பட்டது.

"இவுங்களுக்காக எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்கோம். ஜெயிலுக்குப் போயிருக்கோம். கடைசியில் விசுவாசிகளை நீக்கி விட்டு ஊர் பேர் தெரியாதவர்கள், கட்சிக்கும், தலைமைக்கும் துரோகம் செய்தவர்களுக்குக் கட்சிப் பொறுப்பு கொடுத்திருக்கிறார்கள். இந்தம்மா செய்வதைப் பார்த்தால் இவர்தான் கலைஞரிடம் காசு வாங்கிக் கொண்டு அல்லது வழக்குகள் சம்பந்தமாக ஏதாவது பேரம் பேசி அந்த அடிப்படையில் கட்சியை பலவீனமாக்குகிறாரோ என்று கூட சமயத்தில் எண்ணத் தோன்றுகிறது. அ.இ.அ.தி.மு.க.




**சித்ரா பௌர்ணமியன்று மாமல்லபுரத்தில் நடந்த பா.ம.க இளைஞர் சங்கக் கூட்டத்தில் ராமதாஸ் பேசிய பேச்சு சர்ச்சையாகியிருக்கிறது.**

**வன்னிய சமுதாயத்துக்கு, பலமுறை கேட்டுக் கொண்ட பிறகும் கலைஞர் ஒன்றுமே செய்யவில்லை என்கிற விஷயத்தைக் கடும் குற்றச்சாட்டாக முன் வைத்தார் ராமதாஸ்.**

**இதனால் 'தி.மு.க. கூட்டணியிலிருந்து விலகி, அ.தி.மு.க. பக்கம் போய்விடுவார் ராமதாஸ்' என்கிற வதந்திகள் எழுந்திருக்கின்றன.**

**வட மாவட்டங்களில் டாக்டருக்கு உள்ள செல்வாக்கைக் கருதி, அவரைக் கூட்டணியில் இடம் பெறச் செய்வதற்காக, த.மா.கா, காங்கிரஸைக் கழற்றி விடக்கூட ஜெ. தயங்க மாட்டார் என்று சொல்கிறார்கள்.**

**— கௌசி**

பலவீனமானால் கலைஞருக்குத்தானே கொண்டாட்டம்'' என்று சொன்னார் நீக்கப்பட்ட மூவர் ஆலோசனைக் கூட்டத்துக்கு வந்திருந்த விழுப்புரம் மாவட்டத்தைச் சேர்ந்த கருணாகரன்!

புதிதாக நியமிக்கப்பட்ட அமைப்புச் செயலாளரான தனபால் என்பவரை 1997ல் ஜெயலலிதாவைக் கைது செய்த போது தடுப்புக் காவலில் போலீஸ் பிடித்தது. 'உடனே கட்சிக்கும் எனக்கும் எந்தத் தொடர்புமில்லை' என்று எழுதிக் கொடுத்து விட்டு வந்து விட்டவராம். அதுபோல் கட்சித் தேர்தல்களில் வெற்றி பெற முடியாதவர்களுக்குப் பதவிகளை வழங்கியிருக்கிறார். உதாரணமாக நாமக்கல் மாவட்டம் சின்னசாமி என்பவர் ஒன்றியத் தேர்தலில் தோற்றவர். இவருக்குக் கழக அமைப்புச் செயலாளர் பொறுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. 'போலீஸ்காரர் வேலைக்கு லாயக்கில்லாதவரை, ஐ.ஜி. பொறுப்புக்குக் கொண்டு வருவது போன்றது இது' என்கிறார்கள் தொண்டர்கள்.

இந்த ஆலோசனைக் கூட்டங்களில் நடக்கும் இன்னொரு விஷயத்தையும் மறக்காமல் குறிப்பிடுகிறார்கள் தொண்டர்கள். அதாவது, ஆட்சியில் இருந்த போது நடந்த தவறுகளுக்கெல்லாம் காரணம் அமைச்சர்கள்தான். நம்பி பொறுப்பைக் கொடுத்த அம்மாவை ஏமாற்றி விட்டார்கள் என்று தொண்டர்களைப் பேசச் சொல்கிறார்களாம்.

''இதையெல்லாம் வீடியோ எடுத்து என்ன கோணத்தில் பயன்படுத்தப் போகிறார்கள் என்பதைத் தேர்தலின் போதுதான் பார்க்க வேண்டும். ஆனால் இந்தம்மா படிக்காம எந்தக் கோப்பிலும் கையெழுத்திட மாட்டாங்க. அதனால் இவருக்குத் தெரியாமல், ஏமாற்றி, கையெழுத்து வாங்க முடியவே முடியாது'' என்றார் ரகுபதி.

''இப்படி, 'எடுத்தேன்; கவிழ்த்தேன்' என்று ஜெ. செயல்படக் காரணம், மற்றவர்களை விட எம்.ஜி.ஆர். பெயரைச் சொல்லி வோட்டுக் கேட்கும் தனக்குத்தான் மக்கள் வாக்களிப்பார்கள் என்ற அசைக்க முடியாத நம்பிக்கைதான். வெளியேறிய தலைவர்களால் ஜெ.வின் தலைமைக்கு உடனடி ஆபத்து எதுவும் இருக்காது. ஆனால் நூற்றுக்கணக்கான கிளைச் செயலாளர்கள் துணைச் செயலாளர்கள் நீக்கப்பட்டுள்ளதால் தேர்தலின் போது வேலை செய்ய ஆள் இருக்காது. வரும் சட்டமன்றத் தேர்தலில் அதனால் கட்சிக்குத் தோல்வி வருமானால் தொண்டன் அப்போதுதான் காரணத்தை நினைத்துப் பார்ப்பான். சசிகலா குடும்பத்தினர்தான் காரணம் என்று நினைத்தால் அவர்களுக்கெதிராகத் திரள தயங்க மாட்டான்'' என்று சொல்கிறார் எம்.ஜி.ஆர். காலத்திலிருந்து இருக்கும் மூத்த பிரமுகர் ஒருவர்.

இதற்கிடையில் தினகரன், கட்சியில் தன் செல்வாக்கை உறுதிப்படுத்திக்கொண்டு காரியங்கள் ஆற்றி வருகிறார். தேர்தல் காலங்கள் தவிர மற்ற நேரங்களில் ஜெ.வால் சுற்றுப் பயணம் செய்ய முடியாது என்பதால், தினகரன் தமிழகமெங்கும் சுற்றி வந்து அம்மா புகழைப் பரப்பி வருகிறார்; தமக்கு நம்பிக்கையாக இருப்பவர்களைப் பொறுப்புகளில் அமர்த்தி வருகிறார். தேர்தலில் நிற்க முடியாத அளவு தனி நீதிமன்றத்தால், ஜெ., தண்டிக்கப்படும் பட்சத்தில், தினகரன் கட்சியின் முக்கியமான இடத்தைப் பிடிப்பதற்கான ஏற்பாடுகள் முடிந்து விட்டன என்கிறார்கள்!

**— ப்ரியன்**



# இப்ப எம்.ஏ. படிக்கறேன்!

"ஒரு தனிப்பட்ட மனிதனின் விருப்பம் அல்லது ஆசை நிறைவேறு கிறதோ இல்லையோ, அதனால் உண் டாகும் லாப நஷ்டங்கள் அவன் ஒரு வனோடு போய் விடும்; சமுதாயத்திற்கு எந்தப் பயனும் இல்லை. எனவே சமுதாயத்தையொட்டி நமது விருப் பத்தை அமைத்துக்கொண்டு அதற்காக முயல்வது சரியாக இருக்கும் என்பது என் கருத்து. அப்படிப் பார்க்கப் போனால் நான் முன்னுரிமை கொடுக் கக் கூடிய அம்சம் கல்விதான்!

"1947ல் நாம் சுதந்தரம் பெற்றபோது கல்வியறிவு பெற்றிருந்தவர்கள் 14 சதவீதம்தான். நான்கு குழந்தைகளில் ஒருவர்தான் பள்ளிக்குச் சென்றார்கள். இத்தனை வருட காலத்தில் முன்னேறி யிருக்கிறோம். அதில் சந்தேகமில்லை. மத்திய, மாநில அரசுகள் சேர்ந்து கல்விக்காக, சுமார் 20000 கோடி ரூபாய் இப்போது செலவழிக்கிறார்கள். பள்ளி யில் படிக்கும் சிறுவர்கள் எண்ணிக்கை 11 கோடியாக உயர்ந்திருக்கிறது. இருந் தாலும் கிடு, கிடுவென வளர்கின்ற மக்கள் தொகைக்கு ஏற்ப, சரியான விகிதாசாரத்தில் கல்வியறிவு பெற்றவர் களின் எண்ணிக்கை வளர்ந்திருக் கிறதா? இல்லை!

''தமிழ்நாடு, கேரளா போன்ற மாநிலங்களில் எண்பது சதவீதத்திற்கு மேல் கல்வியறிவு பெற்றிருக்கிறார்கள். ஆனால் பீகார், ராஜஸ்தான் போன்ற மாநிலங்களில் 30, 35 சதவீதம்தான்.

''வறுமை மற்றும் வாய்ப்புகள் இல்லாததன் காரணமாக லட்சக்கணக் கான குழந்தைகள் பள்ளிக்கூடம் பக்கம் எட்டிப் பார்க்க முடியாதவர் களாக இருக்கிறார்கள். எனவே என் ஆசை, எல்லா குழந்தைகளுக்கும் கட்டாயமாகக் கல்வி கொடுக்க வேண்டுமென்பதுதான். ஒரு குழந்தை கூடப் பள்ளிக்குச் செல்லாமல் இருக்கக்கூடாது.

"தனிப்பட்ட முறையில் கேட்டால் அதுவும் கல்வி சம்பந்தப்பட்ட ஆசைதான். கல்லூரிக்குச் சென்று படிக்க வேண்டுமென்பது என் கனவு. முடியவில்லை. இப்போது தபாலில் எம்.ஏ பயின்று வருகிறேன்."

பேட்டி: ரமா

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!



**முதல் பரிசு – ரூ. 5000**
**இரண்டாம் பரிசு – ரூ. 3000**
**மூன்றாம் பரிசு – ரூ. 2000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசிலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**— ஆசிரியர்**

# விக்ரம் பேட்டி

மிக நீண்ட போராட்டத்துக்குப் பிறகு 'சேது' மூலம் மறுபடியும் பேசப்பட்டவர் விக்ரம். காத்திருந்த வருடங்களின் கண்ணீர்க்கதை முதல் இப்போது வந்து குவியும் அழைப்புகள் வரை மிக வெளிப்படையாக மனம் விட்டு இரண்டு மணி நேரம் பேசினார், நம்முடன்.



“எனக்குச் சொந்த ஊர் பரமக்குடி. நடுத்தரக் குடும்பம். ஏற்காட்ல போர்டிங் ஸ்கூல்ல தங்கிப் படிச்சேன். அப்புறம் சென்னை லயோலா கல்லூரியில் பி.ஏ இங்கிலீஷ் லிட்ரேச்சர். அங்கேயே எம்.பி.ஏ படிச்சேன். அப்புறம் லிண்டாஸ் விளம்பர நிறுவனத்திலே 'காப்பிரைட்டராகச் சேர்ந்தேன். அப்போதான் டீவி விளம்பரங்களில் நடிச்சேன். கிரவுன் காய கல்பம், டி.வி.எஸ். சுஸுகி, சோழா டீ இப்படி நிறைய. இந்தச் சமயத்திலேதான் டைரக்டர் ஸ்ரீதர் அறிமுகம் கிடைச்சது. அவர் இயக்கத்திலேதான்

நான் சினிமாவில் அறிமுகம் ஆனேன். அந்தப் படம் 'தந்து விட்டேன் என்னை' செம பிளாப்! அப்புறம் பி.சி. ஸ்ரீராமின் மீரா படம். இந்தப் படம்தான் விக்ரம்ன்னு ஒருத்தன் இருக் கான்கிறதை ரசிகர்களுக்கு அடையாளப்படுத்தின படம்" என்று ஆரம்பித்தார்.

**"உங்க நடிப்பு ஆர்வத்துக்கும், குடும்பப் பின்னணிக்கும் தொடர்பு உண்டா?"**

"நிறைய. ஒரு பெரிய நடிகனாகனும்கிற லட்சியத்தோடு ஊரிலிருந்து ஓடி வந்தவர் என் அப்பா. 'சிவப்பு நிறத்தில் ஒரு சின்னப்பூ', 'எங்கேயோ கேட்ட குரல்', 'சிறையில் பூத்த சின்ன மலர்' – இதுலயெல்லாம் வில்லனாக செஞ்சுருக்கார். அப்பா நினைச்ச இடத்தை அடைய முடியலியேங்கிற ஆதங்கம் என் மனசுலேயும் இருந்தது. இது தவிர நான் பள்ளில படிச்சபோது மூணாம் வகுப்பிலேயே நாடகங்கள்ல நடிக்க ஆரம்பிச்சேன். நடிப்புல ஆர்வம் வந்தபிறகு, முதல் ரேங்க் வந்து கிட்டிருந்த நான் இருபத்தஞ்சாவது ரேங்க் போனேன். ஸ்கூல்ல ஹார்ஸ் ரைடிங், கராத்தே, பில்லியர்ட்ஸ்னு திறமைகளை வளர்த்துக்க ஆரம்பிச்சேன். ஒன்பதாம் வகுப்புல முதல் முதல் ஹீரோவா நடிச்சேன். அந்த நாடகத்துக்குப் பிறகு ஸ்கூல்ல நான்தான் ஸ்டார்...! காலேஜ் வரைக்கும் டிராமாவை விடலே. இண்டர் காலேஜ் டிராமா போட்டில ஜெயிச்சுட்டு நண்பர்களோட

# ஓங்கியாச்சு!"



வரும்போது கார் ஆக்ஸிடெண்ட் ஆயிடுச்சு. மூணு வருஷம் ஹாஸ்பிடல்லே இருந்தேன். நடிப்பு எனக்கு ராசியில்லேன்னு சொன்னாங்க... ஆனா நடிப்பு தான் நமக்கு எல்லாம்னு முடிவு செஞ்சேன்!"

**"மூன்றாம் வகுப்பில், நடிக்க ஆரம்பிச்சிங்க சரி; 'நடிக்க' வரும்ன்னு எப்ப புரிஞ்சிக் கிட்டீங்க?"**

"லயோலாவில சேர்ந்த பிறகுதான், நான் ஒரு அமெச்சூர் நடிகன்கிறதையே புரிஞ்சிக்கிட்டேன்'. இறுக்கமா மூஞ்சிய வெச்சுக்கிட்டு, மாடுலேஷன் இல்லாம வசனத்தைப் பேசினது பெரிய சாத னைன்னு நினைச்சுக்கிட்டு இருந்த என்னோட 'பாடி லாங்குவேஜ்' மாத்திக் கிட்டது இங்கேதான். எப்படியிருந்தாலும் எனக்குள்ளே இருக்கிற அந்த மென்மையான முரட்டுத் தனம் இன்னும் போகலே. அதான் என்னோட ஸ்பெஷாலிடின்னு எல்லோரும் சொல்றாங்க. யதார்த்தம்னா என்னென்னு தெரிஞ்சது, மலையாள சினிமாவுக்குப் போனபோதுதான். அங்கே ஒரு சின்ன துண்டு ரோலா இருந்தாலும், இரண்டு வார்த்தை பேசுற துணை நடிகராக இருந்தாலும் யதார்த்தமா நடிக்கறாங்க..."

**"மலையாள சினிமாவா? எப்ப போனீங்க?"**

"மீரா படம் முடியற நேரத்தில்! அந்தப் படம் பற்றி வெளியிலே பெரிய பேச்சு இருந்தது. ரொம்ப எதிர்பார்த்தாங்க. கிட்டத்திட்ட இரு

## க்ளீன் போல்ட்!

ஒரு கவிதை எழுதவென
உன் கண்களை
இரவல் கேட்டேன்.
ஓவியம் பயிலுதற்குக்
கூந்தலைக் குத்தகை கேட்டேன்
முற்றுப்புள்ளிகள் இல்லா
என் முயற்சிகள் யாவும்
உன் நெற்றிப் பொட்டில் மோதி
நிலைகுலைந்து நின்றன.
பாதிமுகம் நீ மறைத்தால்
என் பாதைகள்
அடைபடுகின்றன.
பார்வையில் தெரிவது
பரிவா? முறைப்பா?
பதில் தெரியாமல்
பாதியில் நிற்கிறது
பாழாய்ப் போன இக்
கவிதை முயற்சி.

— குரோம்பேட்டை கவிராயர்



பத்தஞ்சு படங்களுக்கு வாய்ப்பு வந்தது. ஆனால் மீரா வெளிவந்த பிறகுதான் புதிய படம் ஒத்துக்கலாம்னு இருந்தேன். ஆனா மீரா ரிசல்ட் தலைகிழா மாறிப் போனதுலே ரொம்ப அமைதி யாயிட்டேன்! 'மீரா' ஸ்டில்லைப் பார்த்துட்டு, மலையாள இயக்குனர் 'ஜோஷி' என்னைத் தேடிப் பிடிச்சு அழைச்சிட்டு வரச் சொல்லி யிருக்கார். சுரேஷ் கோபி பண்ண இருந்த ரோலுக்கு நான் ரொம்ப பொருத்தமா இருப் பேன்னு என்னைப் போட்டார். பத்ரிங்கிற அந்த கேரக்டர் ரொம்ப பேசப்பட் டது. தமிழ்ல கூட அந்தப் படம் 'நரசிம்ம நாயக்கர்'ன்னு டப்பாகி வந்தது. அதுக்கு அப்புறம் செகண்ட் ஹீரோவா செஞ்ச எல்லா மலையாளப் படமும் சில்வர் ஜூப்ளி. மலை யாள பீல்டுல நல்ல ஆத்ம திருப்தி கிடைச்சது. தெலுங்குலேயும் முப்பது படங்களுக்கு மேல நடிச்சிருக்கேன். ஆனால் எல்லாம் பாம்பு படம், சாமி படம்! தவிர, நிறைய ஆக்ஷன் படங்கள்லேயும் நடிச்சேன். அங்கே பணத்துக் காகத்தான் நடிச்சேன்."

**"மீராவுக்கும் சேதுவுக்கும் இடையில் விழுந்த மிகப் பெரிய இடைவெளியை எப்படி சகித்துக் கொண்டீர்கள்?"**

"அந்த இடைவெளி என் வாழ்க்கைல ஒரு சத்தியசோதனை மாதிரி. தீவிரமா நடிப்பை எந்த அளவு நேசிச்சேனோ அதே அளவு நடிப்பை விட்டுட்டுப் போயிடலாமான்னுகூட யோசிக்க ஆரம்பிச்சேன். அந்தப் பத்து வரு ஷத்துல வெறும் எட்டுப்படம் கிறது எந்த ஹீரோவுக்கும் வரக் கூடாத நிலை! மீராவுக்குப் பிறகு 'புதிய மன்னர்கள்' பேசப்பட் டிருந்தாலாவது எனக்கு ஒரு பிரேக் கிடைச்சிருக்கும். அப் புறம் உல்லாசம். இந்தப் படத் தையும் ரொம்பவே நம்பி னேன். அதுவும் வீண்! ஹவுஸ்ஃபுல் படத்தில் ஒரு நல்ல கேரக்டர்ங்கிற திருப்தி தான் கிடைச்சது. இந்தப் படங்கள் வெற்றிப் படங்களா இல்லாமல் போனாலும், என்னோட பர்ஃபாமென்ஸ் சரியில்லைன்னு யாரும் சொல்லலே. இது ஒண்ணுதான், நான் நடிப்பை விட்டுட்டுப் போகாமல் இருந்ததுக்கு ஒரே காரணம். என்னதான் மலையாளம், தெலுங்குப் படங்கள் இந்த நேரத்துல எனக்கு கை கொடுத்தாலும், நம்ம தாய் மொழியில சோபிக்க முடியலியேங்கிற ஏக்கம் எனக்கு நிறையவே இருந்தது. எந்தெந்த பெரிய டைரக்டர் படத்துலயெல்லாம் நடிக்கணும்னு நினைச்சேனோ, அங்கெல்லாம் டப்பிங் பேசக் கூப்பிட்டாங்க. அதுக்காக தயங்கலை! பேசினேன். இப்படித்தான் 'கண்டுகொண் டேன் கண்டுகொண்டேன்' படத்தில் அப்பாசுக்கு டப்பிங் பேசியிருக்கேன். சரி இப்படியே இருந்துட வேண்டியதுதான் போல இருக்கு... சினிமாவும் கைவிட்டுட்டா இருக்கவே இருக்கு டெலிசீரியல்ஸ்... இப் படித்தான் மனசைத் தேத்திக்கிட்டு இருந்தேன். இதுக்கு இடையிலே சில தேர்ட் கிளாஸ் படங்கள்ல நடிக்கக் கூப்பிட்டாங்க. ஆனால் அந்த மாதிரி தப்பைப் பண்ண நான் விரும் பலை!"

**"சேது சான்ஸ் எப்படி வந்தது?"**

"டைரக்டர் பாலா என்னைத் தேடி வந்து, இந்தக் கதைக்கு நீங்கதான் பொருத்தமா இருப் பீங்க. முதல்லே கதையைக் கேளுங்க... நடிக் கறதைப் பத்தி அப்புறம் முடிவெடுக்கலாம்னு கதையைச் சொன்னார். ஒவ்வொரு ஃபிரே மாகக் கதையைச் சொன்னபோது பிரண்டு போனேன். இந்தப் படம் ஓகோன்னு ஓடுதோ இல்லியோ, ரசிகர்கள் மத்தியில் நல்ல பெயர் கிடைக்கும்னு தெரிஞ்சு போச்சு. ஒரு வரு ஷம் கால்ஷீட் கொடுத்தேன். சேதுல நான் இரண்டு கேரக்டர் செய்திருக்கேன். முதல் பாதி படத்துல ரொம்ப துடிப்பான சேது. இரண்டாவது பாதில அப்படியே நேரெதிர்! இந்தக் கேரக்டர்தான் இப்போ என்னை ரசிகர்கள்கிட்ட கொண்டு போய் சேர்த் திருக்கு!"

**"சேது படம் முடிந்து ஆறு மாதங்கள் ஆகியும் விநியோகஸ்தர்கள் கண்டு கொள்**

பாதுகாப்பான முதலீடு - நிலையான வருமானம்

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

### முதலீடுகளுக்கு திருத்தியமைக்கப்பட்ட வட்டி விகிதங்கள் (15-4-2000 முதல்)

| காலம் | முறையான வட்டி வழங்கும் திட்டம் (RIPS) | | திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - I | |
|---|---|---|---|---|
| | வழங்கப்பட உள்ள ஆண்டு வட்டி விகிதம் | | முதிர்வுத் தொகை ரூ. 5,000/-த்திற்கு | ஒரு ஆண்டிற்கு பெறக்கூடிய வருவாய் விகிதம் |
| | மாதத்திற்கு | காலாண்டிற்கு | | |
| 12 மாதங்கள் & 1 நாள் | — | 11.10% | ரூ. 5,580/- | 11.57% |
| 25 மாதங்கள் | — | 11.61% | ரூ. 6,346/- | 12.92% |
| 36 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 7,261/- | 15.07% |
| 48 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 8,222/- | 16.11% |
| 60 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 9,311/- | 17.24% |

### திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - II

| காலம் | குறைந்த அளவு டெபாசிட் ரூ. | முதிர்வுத் தொகை ரூ. | ஒரு ஆண்டிற்கு பெறக் கூடிய வட்டி விகிதம் |
|---|---|---|---|
| 60 மாதங்கள் | 537/- | 1,000/- | 17.24% |

டெல்லி
தமிழ்ச்சங்கத்தில்
எங்கள்
டெபாசிட் திரட்டும்
முகாமை
விரைவில்
எதிர்பாருங்கள்.




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)** (தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே. சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ∴பேக்ஸ் : 044-4982894
மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in
Visit us at: www.tnpowerfinance.com / www.tninfrafinance.com

28-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

"Also available on the Internet" www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com



**தமிழ்நாட்டை முந்திக் கொண்டு விட்டார்கள் குவைத் தமிழர்கள். நாற்பதாண்டு கால திரையுலக சேவையைப் பாராட்டி, டைரக்டர் கே. பாலசந்தரை குவைத்துக்கு வரவழைத்து, பிரமாதமாக ஒரு பாராட்டு விழா நடத்தி, அமர்க்களப்படுத்தி விட்டார்கள். குவைத் தமிழர்களுக்கு, பத்து நிமிடத்துக்கு ஒரு வீடியோப் படம் எடுக்கிற போட்டியும் நடத்தப்பட்டது. போட்டியில் பங்கேற்றவர்கள் எடுத்த வீடியோ படங்கள் அனைத்தையும் பார்த்துவிட்டு, சிறந்ததாகத் தேர்ந்தெடுத்த ஒன்றுக்கு விழாவில் பாலசந்தர் பெயரிலேயே உருவாக்கப்பட்டுள்ள 'கே.பி அவார்டு' வழங்கப்பட்டது. உறுப்பு தானம் பற்றிய வீடியோ படம் அது. பெயர், புதிய உறவு.**

— மௌலி

**ணாமல் இருந்தது ஏன்?"**

"அதைத்தான் என்னாலயும் இன்னும் புரிஞ்சுக்கவே முடியலை. சென்னையில மட்டும் கிட்டத்தட்ட அறுபது ப்ரிவியூ ஷோ போட்டோம். விநியோகஸ்தர், தயாரிப்பாளர், காலேஜ் ஸ்டுடண்ட்ஸ்னு, ஆயிரக்கணக்குல படம் பார்த்துட்டு நல்லா பண்ணியிருக்கீங்கன்னு கை குலுக்கிட்டுப் போனாங்க. இவ்வளவு பேர் பார்த்துட்டாங்க சிட்டில; இனிமே ஓடுமான்னு ஒரு சந்தேகமே வந்துடுச்சி. படத்தோட இயக்குனர் பாலாவுக்கு படம் ஓடினாத்தான் வாழ்க்கை. எனக்கும் கிட்டத்தட்ட அதே நிலைதான். ரிலீஸ் டேட் அறிவிச்சு அறிவிச்சு, ஒரு முப்பது முறை தள்ளிப் போயிருக்கு... இந்த நேரத்துல மலையாள, தெலுங்கு படமும் இல்லே... பணத்துக்கும் ரொம்ப கஷ்டமாயிடுச்சு! பாரின்ல பிரெண்டு இருக்கான். 'மல்டி மீடியா' படிச்சுட்டு அமெரிக்கா போயிடலாம்னு முடிவு செஞ்சுட்டேன். இதுக்கு மேலேயும் நம்மள சோதிக்கக் கூடாதுன்னு கடவுள் நினைச்சாரோ என்னவோ, சென்னையில தியேட்டருங்க கிடைச்சது. அப்புறம் நடந்ததுதான் உங்களுக்கே தெரியுமே!"

**"சேது வெற்றிக்குப் பிறகும் பல மாதங்கள் மௌனமா இருந்தீங்க... அடுத்தப் பட வாய்ப்புகள் வரவில்லையா?"**

"அப்படியெல்லாம் இல்லே! நிறைய வாய்ப்பு வந்தாலும் கண்மூடித்தனமா எல்லாத்தையும் ஒத்துக்கலை. கதை விஷயத்திலே கண் மூடித்தனமாக இருக்க விரும்பலை. அதனால கதை கேட்கத்தான் இத்தனை காலம் எடுத்துகிட்டேன். முதல்லே அப்பா கதை கேட்கிறார். அவர் ஓகே செய்த கதைகளை நான் கேட்கிறேன். இப்படிக் கேட்டதில் ஒரு ஐந்தாறு கதைகள் கிடைத்திருக்கின்றன. ஒவ்வொரு கதையும் சேது போலவே ரசிகர்கள் மனசுல இடம் பிடிக்கும்னு நம்பறேன்"

**"இப்போ நடிக்கிற படத்தில் நீங்க இரண்டாவது ஹீரோன்னு கேள்விப்பட்டோம்... ஏன் இப்படியொரு முடிவுக்கு வந்தீங்க...?"**

"இல்லே! ராஜகுமாரன் இயக்கத்துல நடிக்கிற 'விண்ணுக்கும் மண்ணுக்கும்' தான் இந்தப் படம். இதுல ஹீரோ நான்தான். சரத்குமார் எனக்கு அண்ணனாக நடிக்கிறார்; அவ்வளவுதான். இந்தப்படம், நாட்டாமை, சின்ன கவுண்டர் மாதிரி ஒரு வில்லேஜ் ஆக்ஷன் பேஸ்டு கிளாசிக்கல். சென்னையில் மட்டும் படம் ஓடினா பத்தாது. விக்ரமால கிராமத்து சப்ஜெக்டும் பண்ண முடியும்னு ரசிகர்களுக்குத் தெரியப்படுத்தவே இது மாதிரி ஒரு சில படங்கள். ஆனா சேதுக்குப் பிறகு வரப்போற அடுத்தப்படம் ஆலயம். ஷங்கர் கிட்டே உதவி இயக்குனரா இருந்த பாலாஜி டைரக்ஷன் அது. அதுக்கும் ஷூட்டிங் நடந்துகிட்டு இருக்கு. அப்புறம் மலையாள இயக்குனர் வினயன் டைரக்ஷன்ல ஒரு தமிழ் படம். அப்புறம் 'கண்ணோடு காண்பதெல்லாம்' இப்படி 2001 மார்ச் வரைக்கும் கமிட் ஆகி இருக்கேன்."

**"சேது படத்துக்கு தேசிய விருது கிடைக்கும்னு நம்புறீங்களா?"**

"எனக்கு ஏற்கெனவே விருது கிடைச்சிடுச்சி. சிவக்குமார் நான் மதிக்கிற ஒரு பெரிய ஆர்ட்டிஸ்ட். 'என்னோட நாற்பது வருஷ சினிமா வாழ்க்கையில கேரக்டருக்காகத் தன்னை ரொம்ப வருத்திக்கிட்டவர் நடிகர் நாகேஸ்வரராவ். தேவதாஸ் படத்தோட க்ளைமாக்ஸ்க்காக அவர் அவ்வளவு கஷ்டப்பட்டார். அவருக்கு பிறகு கேரக்டருக்காக ரொம்ப வருத்திக்கிட்டது நீதான்'னு பாராட்டினார், இதைத்தான் பெரிய விருதா நினைக்கிறேன். படத்தைப் பார்த்துட்டு என்னைக் கட்டிப் பிடிச்சி வாழ்த்தின ரஜினி, படம் பார்க்காமலேயே முதல்வன் பட விழாவிலே பாராட்டின கமல், இவங்க பெருந்தன்மைக்கு முன்னால விருது ஒரு விஷயமே இல்லை!"

சந்திப்பு: **விஷ்வல்தாசன்**

அட்டை வண்ணப்படம், படங்கள்:
**வெங்கடேஷ்**



• அமைந்தக்கரை மார்க்கெட்டில்...



• சிவனாண்டி

“நாங்க பாட்டுக்கு எங்கப் பொழப்பைப் பார்த்துக்கிட்டு, மூணு வேளை சாப்பிட்டுக்கிட்டு இருந்தோம். எங்கப் பார்த்தாலும் எய்ட்ஸ் பரவுது, இந்த பாவத்துலேர்ந்து வெளி வந்துடுங்கன்னு சிவனாண்டி ஐயாதான் (அண்ணாநகர் போலீஸ் துணை கமிஷனர்) இந்தப் பொழப்புக்கு வழி பண்ணினாரு. ஆனா என்ன பிரயோஜனம்? இருபது ரூபாய்க்கு மேல வியாபாரம் நடக்க மாட்டேங்குது. எல்லாரும் வேடிக்கைதான் பாக்குறாங்க” என்கிறார் அமைந்த கரை புல்லா காய்கறி அங்காடியில் கடை போட்டிருக்கும் கலைச் செல்வி.

‘சமுதாய போலீஸ்’ திட்டத்தின் மூலம் பத்து அரவானிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் காய்கறிக் கடைகளில் புதிய வாழ்க்கையைத் தொடங்கியவர்களில் இவரும் ஒருவர்.

பத்திரிகை என்றதுமே துக்கத்தை பகிர்ந்து கொள்ள நெருக்கமான ஒருவர் கிடைத்து விட்டது போல் பொலபொலவென்று கண்ணீர் வடித்தார், அரவானிகளில் மூத்தவர் போல் தென்பட்ட கலைச்செல்வி.

“வியாபாரம் இல்லாததுனால, வெங்காயம், தக்காளி அழுகிப் போகுது. மூணு நாளா பழைய கஞ்சிதான் குடிக்கிறோம். வீட்டு வாடகை பத்து தேதி ஆகியும் இன்னும் குடுக்க முடியலை. எப்போ யாவாரம் பிக்அப்ஆகி எப்போ வயித்தக் கழுவுறது? கோயம்பேடு மார்க்கெட்ல கடை போட்டுத் தரேன்னு சொன்னாங்க. இப்போ ஒரு தராசும், முன்னூறு ரூபா பணமும் குடுத்து காய்கறி யாவாரம் பண்ணச் சொல்றாங்க. யாவாரம் முடிஞ்சு ராத்திரிக்கு காய்கறிய இங்கே போட்டுட்டுப் போகலாம்னா... இங்க உள்ள குடோன்ல எங்களை மட்டும் ஒதுக்கறாங்க. இதையெல்லாம் யாருகிட்ட போய்ச் சொல்றது?’’ என்ற

# குப்பை அள்ள நாங்க ரெடி!



• வியாபாரம் 'டல்'தான்!

குப்பை அள்ளுறதுக்கு யூனிஃபார்ம் கொடுத்து வேலைக்கு அமத்துறாங்களே, அந்த வேலை கொடுத்தா ரொம்பப் புண்ணியமாப் போகும்..."

நமக்கும் நியாயமான கோரிக்கையாகவே பட்டது. அதற்குள் கடையை விட்டுவிட்டு வந்த தேவகி, "அறுபது வயசு ஆகிப் போச்சு. ஒண்ணும் முடியலை. பம்பாயில இருந்த வரைக்கும் ஒரு குறையும் இல்லே. அங்கே வீட்டுக்காரரும் நானும் 'முஞ்சத் லோபன்' (கடை கடையாக சாம்பிராணி போடுதல்) போடுவோம். குடிசையெல்லாம் இடிச்சப்போ இங்கே வந்துட்டோம். காய்கறி நமக்கு வேணாம். தேங்காய்க் கடை வெச்சுக் கொடுத்தா அழுகாமயாவது இருக்கும்" என்றபடி மூச்சிரைத்தார்.

அரவாணிகள் புனர் வாழ்வுத் திட்டத்தின் காரணகர்த்தாவான அண்ணாநகர் காவல் துறை துணை ஆணையர் சிவனாண்டியை சந்தித்தோம்.

"சமுதாய போலீஸ் திட்டத்தின் ஒரு பகுதிதான் அரவாணிகள் புனர்வாழ்வுத் திட்டம். குற்றவாளிகளைப் பிடிக்க, மக்களோடு நெருக்கமான உறவை ஏற்படுத்திக்கிட்டாத்தான் முடியும்கிற நிலையில இந்தச் சமுதாய போலீஸ் திட்டத்தைத் தொடங்கியிருக்கோம். இதுக்கு இப்போ நல்ல பலன் கிடைச்சிருக்கு. இதுல பல குறைகள் ஆரம்பத்துல இருக்கத்தான் செய்யும். அதை உடனடியா களைவோம். இன்னும் ஆறு மாசத்துல எல்லா அரவாண்களும் பயனடையணும்கிறதுதான் நம்ம திட்டம். குறிப்பா இந்தக் குப்பை அள்ளும் வேலையை இவங்களுக்குக் கொடுக்கலாம்கிறது நல்ல கோரிக்கைதான். இதைப் பத்தி மேலிடத்துல பேசுவேன். அதுவரைக்கும் அரவாணிகள் கொஞ்சம் பொறுமையா ஒத்துழைக்கணும்" என்றார்.

வரிடம் இப்படியொரு ஆரோக்கியமான திருப்பம் வந்திருக்கும்போது கொஞ்சம் பொறுமையாக இருந்து சமாளிக்கலாமே என்றோம். "அதுவரைக்கும் நீ சோறு போடுவியா?" என்று கொஞ்சம் டென்ஷனாகவே கேட்டார்.

இங்குள்ள குறைகளை சம்பந்தப்பட்ட அதிகாரியிடமே கூறலாமே என்றோம். "நீயே போய்ச் சொல்லு" என்றவருக்கு மௌனமாகத் தலையாட்டினோம்.

அடுத்து நம்மிடம் பேசியவர் சுதா. "எங்களால மட்டும்தான் எய்ட்ஸ் பரவுதுன்னு இங்க உக்கார வெச்சிட்டாங்க. அதுக்காக எங்களுக்கு இந்த ஏற்பாடு செஞ்சு கொடுத்ததை தப்பாச் சொல்லலை. பொதுமக்கள் எங்களைப் பார்த்து கூச்சப்படுறாங்க. இந்த மாதிரி வியாபாரம் செய்யறதை விட, இப்போ

— ஆர்.சி. ஜெயந்தன்

படங்கள் : வெங்கடேஷ்



• க. ராசாராமன்

**பாட்டி கதை சொல்லிக் குழந்தைகளைத் தூங்க வைத்த காலங்கள் மலையேறி விட்டன! தாங்கள் கேட்ட பாட்டிக் கதைகளை இங்கே சிலர் நினைவு கூர்கிறார்கள்:**

# கதை கேளு! கதை கேளு!

**க. ராசாராம் (முன்னாள் அமைச்சர்)**

பாட்டி கதை சொன்னாத்தான் எனக்கு சோறே இறங்கும். எண்பத்தாறு வயசு வரைக்கும் பல் கொட்டாம திடகாத்திரமா வாழ்ந்தவங்க. சோறு ஊட்டும்போது நிலவைக் காட்டி. 'அங்கே அவ்வைப் பாட்டி குழந்தைகளுக்கு சோறு ஊட்டுறா. உனக்கு நான் ஊட்டுறேன்னு சொல்லிட்டு அவ்வையார் சொன்ன கதை சொல்றேன் சமத்தா சாப்பிடணும்'னு ஆத்திச்சூடி கதை சொல்வாங்க. ஆத்திச்சூடில வர்ற ஒவ்வொரு வரிக்கும் ஒரு கதை வெச்சிருப்பாங்க. அதுல அறம்செய்ய விரும்புக்கு சொன்ன கதையை எப்பவும் மறக்க முடியாது.



ஒரு காட்டுக்கு நடுவுல ஆறு அண்ணன் தம்பிகளும் ஒரு அருக்காணி தங்கையும் வாழ்ந்து வந்தாங்க. அண்ணன் எல்லோரும் தங்கையை தனியா குடிசையில விட்டுட்டு, விறகு வெட்டி வர போயிடுவாங்க. அப்போ அந்தக் காட்டு ராஜாவான சிங்கம், நொண்டிக்கிட்டே குடிசைக்குள்ள புகுந்தது. சிங்கத்தோட கால்லே பெரிய அம்பு தைச்சு, இரத்தம்! உடனே தங்கை அம்பைப் பிடுங்கி வைத்தியம் செஞ்சு, தனக்கிருந்த சாப்பாடை சிங்க ராஜாவுக்குப் போட்டு அனுப்பினாள். மறுநாள் ஒரு நரி வந்தது. அதுக்கு மனிதக்கறி சாப்பிடணும்'னு ஆசை. உடனே நரி தந்திரம் பண்ணினது. 'ஏ பொண்ணே உன்னோட அண்ணன் ஆறு பேரையும், நீ வைத்தியம் பார்த்தியே அந்தக் காட்டு ராஜா, சிங்கம் தன்னோட குகையில புடிச்சிக்கிட்டுப் போயி திங்கப் போகுதுன்னு பொய் சொன்னது. உடனே தங்கைக்கு ஒரே கோபம். 'நன்றி கெட்ட சிங்கத்தை விட மாட்டேன். குகையைக் காட்டுன்னு' நரி கூட தங்கை போனாள். நரி தன்னோட குகைக்கு அழைச்சுக்கிட்டுப் போச்சு. குகையில நுழைஞ்சதும் நரிக்கு நாக்குல எச்சில் ஊறிச்சு. அதுக்குள்ளே நரி முதுகுல பளார்ன்னு ஒரு அடி! அடிச்சது சிங்கராஜா. நரியோட சாயம் வெளுத்தது. சிங்கத்



• ரவி ஆறுமுகம்

தோட முதுகுல ஏறிக்கிட்டு தங்கை வீடு வந்து சேர்ந்தது.

நாம மத்தவங்களுக்கு நல்லது செஞ்சா நமக்கும் நல்லது நடக்கும்கிறதுதான் இந்தக் கதையோட நீதி!

**ரவி ஆறுமுகம் (காவல் துறை அதிகாரி):**

எனது பாட்டி சிவனம்மாள் ஆறுமுகம் கதை சொல்லத் தொடங்கினா நாங்க மட்டு மில்ல, அப்பா அம்மான்னு பெரிய ஆட்களும் உட்கார்ந்து கேட்பாங்க. கதை சொல்லும்போது அடுத்தவங்களை நகர விடாமல் கட்டிப் போடுறது ஒரு பெரிய கலை. அதுக்கு நிறைய பயிற்சி வேணும். பாட்டி அதுல எக்ஸ்பர்ட்! குறிப்பா பாட்டுப் பாடி கதை சொல்வாங்க. அதுல நான் மறக்காத ஒரு கதையோட பாட்டு இதுதான்.

"புலிக்கு பயந்த பசங்களெல்லாம், பொந்தன் மேலே விழுங்கடா! கிலி அடிச்சு சாக வேணாம் புலியடிச்சு போங்கடா"- அதாவது புலியை முறத்தால் அடிச்சு விரட்டிய பொண்ணுங்க நம்ம நாட்டுல இருந்ததாச் சொன்னாலும், புலி வருதுன்னா மனுஷன் ஓடி ஒளிஞ்சுகடுவான். அப்படித்தான் 'பொந்தன்'கிற பேர்ல ஒரு பெரிய தொடை நடுங்கி இருந்தான். எங்க புலி அடிச்சு செத்துடுவோமோன்னு அவனுக்குப் பயம். அந்த ஊருக்குள்ள அடிக்கடி புலி புகுந்து பல பேரை தின்னுடுச்சி. பொந்தன் பார்த்தான். புலிக்கு பயந்த பசங்க என் மேலே ஏறிக்கலாம்ன்னான். புலி வந்துச்சு. எல்லாரும் பொந்தன் மேலே ஏறிக்கிட்டாங்க. புலி பொந்தன் மேல இருந்தவனுங்களைப் புடிச்சிக்கிட்டு போச்சு. பொந்தன் சூழ்ச்சியால தப்பிச்சான். இப்படி வீரன்கிற பேருக்குப் பேரும் கிடைச்சு, உயிரும் கிடைச்சு பொந்தன் பயமில்லாம இருந்தான். அப்படிப்பட்ட பொந்தன் ஒருநாள் புலிகிட்டே தனியா மாட்டிக்கிட்டான். ஊர் ஜனங்க கூடிட்டாங்க. இப்போ வீரன்னு நிரூபிக்க முடியாது. புலி அடிச்சு தின்னுடும். பார்த்தான்... ஒரே ஓட்டம். புலி விடலை. கண்ணு மண்ணு தெரியாமல் ஓடுனதுல வழியில இருந்த கிணத்துல விழுந்து செத்துட்டான். இதுதான் புலியடிச்சு சாகாமல், கிலி அடிச்சு செத்த பொந்தன் கதை!

"லாட்டரியில் உனக்குத்தான் ஒரு கோடி விழுந்திருக்கே... அப்புறமும் ஏன் திருடினே?"

"அதுக்காகத் தொழிலை உதாசீனப் படுத்த முடியுங்களா...?"

– அரவக்குறிச்சிப்பட்டி அசோக்ராஜா

**ஐஸ்வர்யா (நடிகை):**

நான் அம்மாகிட்டே வளர்ந்தேன்னு சொல்றதை விட பாட்டி ருக்மணிகிட்டே கதை கேட்டு வளர்ந்தேன்னு சொல்லணும்.

எனக்கு பாட்டி சொன்ன கதைகள்லே ரொம்ப பசுமையா ஒரு கதை ஞாபகம் இருக்கு. அது ஒரு எகிப்து கதை. அந்த நாட்டுப் பாலைவனத்துல ஒரு அதிசயமான மிருகம் இருந்தது. சிங்க உடம்பு, ஒரு பெண் தலை, இரண்டு இறக்கைகள், பாலைவனத்துல அந்த வழியா போற வியாபாரிகளை வழிமறிச்சு அந்த மிருகம் ஒரு விடுகதை போடும். அதுக்கு அவங்க சரியான விடை சொல்லலேன்னா அடிச்சு தின்னுடும். இது மாதிரி நிறைய வியாபாரிங்களைத் தின்னுடுச்சி. இதைக் கேள்விப்பட்டு 'இடிபஸ்'ன்னு ஒரு வீர இளைஞன் அந்த மிருகத்தைப் பார்த்தான். மிருகம் விடுகதையைச் சொன்னது. 'காலையில் நான்கு கால், மதியம் இரண்டு கால், மாலையில் மூன்று கால்! அது என்ன?' கேட்டதும் இடிபஸ் ஹஹான்னு சிரிச்சுட்டு பதில் சொன்னான்.

'அது வேறு யாருமில்லை. மனிதன் தான்னு. குழந்தையா இருக்கும்போது மனிதன் தவழ்கிறான். அப்போ அவனுக்கு கையும் காலா பயன்படுது. அவன் மனிதனாகும் போது இரண்டு காலால் நடக்கிறான். முதுமை வந்ததும் தடியூன்றி நடக்கிறான். அப்போ அவனுக்கு மூணு கால் - இப்படி சரியான பதில் சொன்னதும் அந்த மிருகம் கல்லாயிடுச்சி. இன்னைக்கும் அந்த மிருகம் எகிப்திலே நிக்குது. அதுதான் மூக்கு உடைஞ்ச 'ஸ்பிங்ஸ்' சிலை.-இதோ பாருன்னு என்சைக்ளோபீடியாவை புரட்டி ஸ்பிங்ஸ் படத்தைக் காட்டினாங்க பாட்டி. அதனால இந்தக் கதை என் மனசுல ஆழமா பதிஞ்சுடுச்சி.

— ஜெ.

படங்கள் : வெங்கடேஷ்






2000 ஏப்ரல் 30
விக்ரம சித்திரை 18
மலர் : 58
இதழ் : 40

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கோர்ட்டுத் தீர்ப்பும் கோணல் அரசியலும்

முன்னாள் மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் தாக்கப்பட்ட வழக்கில் 11 அ.தி.மு.க. பிரமுகர்களுக்குக் கடுங்காவல் தண்டனை கிடைத்திருக்கிறது. திருச்சி மாஜிஸ்திரேட் கோர்ட் வழங்கியுள்ள இத் தண்டனையைப் பெறுபவர்களுள் ஒருவர் அ.தி.மு.க.வின் மாவட்டச் செயலாளர் டி. ரத்தினவேல்.

கடந்த இடைத்தேர்தலில், ரத்தினவேல் திருச்சி-II தொகுதியில் அ.தி.மு.க. வேட்பாளராக நிறுத்தப்பட்டுத் தோற்றவர். அந்தத் தேர்தலில் தமிழ் மாநில காங்கிரஸ் அந்தர்பல்டியடித்து அ.தி.மு.க.வுடன் கூட்டணி வைத்துக் கொண்டது என்பதைத் தமிழக மக்கள் மறந்துவிடவில்லை.

'தாக்கிய கட்சியுடன் கூட்டணியா?' என்ற கேள்வி எழுந்தபோது, ப. சிதம்பரம் தம்மைத் தாக்கியவர்களை 'அப்போதே' மன்னித்து விட்டதாகச் சொன்னார்!

சிதம்பரத்தின் தயாளத்தால் மன்னிக்கப்பட்டவர்கள்தான் இன்று நீதியின் கரங்களால் தண்டிக்கப்படுகிறார்கள்.

தவறு புரிந்தவர்களை மன்னிப்பதும் மறப்பதும் தனிப்பட்ட விஷயங்கள். ஆனால் பொது வாழ்வில் அக்கிரமமும், அநீதியும் செய்பவர்களை மன்னித்து விடுவிக்க யாருக்கும் உரிமை கிடையாது. அன்று சிதம்பரத்தின்பேரில் நடத்தப்பட்ட தாக்குதலானது அரசியல் காழ்ப்புணர்ச்சியின் விளைவான அராஜக நடவடிக்கை. இன்று அரசியல்ரீதியாக அ.தி.மு.கவும் த.மா.காவும்




நெருங்கி வந்திருப்பதால் அந்த அராஜகமோ, குற்றமோ பொய்யாகிவிட முடியாது.

ஆனால் த.மா.கா. இந்த உண்மையைச் சந்திக்க மறுப்பதோடு கேவலமாக சப்பைக்கட்டும் கட்டுகிறது. 'அ.தி.மு.க. தொண்டர்களுக்கு வழங்கப்பட்டுள்ள தண்டனை அக்கட்சியுடனான எங்கள் அரசியல் உறவை பாதிக்காது' என்று பகிரங்கமாகவே பேசுகிறார் மூப்பனார்.

நடந்து முடிந்திருப்பது கிரிமினல் வழக்கு என்பதைத் த.மா.கா. தலைவர் எப்படி மறந்தார்? தாக்கப்பட்டவர் தமது கட்சியின் முக்கிய தலைவர் என்பதை எப்படி மறந்தார்?

'இடைத்தேர்தல் கூட்டணி தற்காலிகமானதுதான்'; 'பி.ஜே.பியை ஆதரிக்கும் தி.மு.க.வுடன் நாங்கள் தொடர்பு வைத்துக் கொள்ள விரும்பவில்லை'; 'மூன்றாவது அணியை மக்கள் புறக்கணித்துள்ளார்கள், அதனால்தான் அ.தி.மு.க.வுடன் தேர்தல் உடன்பாடு' என்றெல்லாம் பல காரணங்களை அடுக்கியவர்தான் மூப்பனார். 'மக்கள் ஜெயலலிதாவை ஏற்கெனவே ஒரு தேர்தலில் தோல்வியுறச் செய்து தண்டித்து விட்டார்கள்; அதுவே போதும்' என்று கூட சொன்னார். ஆனால், அ.தி.மு.க. நல்ல கொள்கைகளையுடைய உயர்ந்த கட்சி என்று அவரால் கூற முடிந்ததா?!

இப்போது அக் கட்சியின் வன்முறைப் போக்குக்கும் அராஜகத்துக்கும் பட்டவர்த்தனமான சான்று கிடைத்துள்ள நிலையில், த.மா.கா. தலைமை பேசுவதைக் கேட்க அருவருப்பாகி இருக்கிறது.

இன்று சிதம்பரம் தாக்குதல் தொடர்பான வழக்கின் தீர்ப்பு இவர்களைப் பாதிக்கவில்லை. இதே ரீதியில் நாளை, ஜெயலலிதா பேரிலான வழக்குகளில் தீர்ப்பு அவருக்கு எதிராக அமையுமேயானால், அப்போதும் இதே 'பாதிக்கவில்லை' பல்லவியைத் த.மா.கா. பாடாது என்பது என்ன நிச்சயம்?

'ஜெயலலிதா வருமானத்துக்குத் தொடர்பில்லாத வகையில் சொத்து சேர்த்தால் என்ன..? எங்கள் கூட்டணி அ.தி.மு.க. என்கிற கட்சியோடுதான்' என்று கூட மூப்பனாரும் அவரது பரிவாரங்களும் வாதாடக்கூடும்!




இந்தச் சூழ்நிலையில் ஜெ., அ.தி.மு.க.வில் களையெடுப்பு நாடகம் நடத்துவது ஒரு தனி காமெடி டிராக்!

சேடப்பட்டி முத்தையாவுக்கு எதிராகத் தீர்ப்பு வந்தபோது சிவனே என்றிருந்தவர் இப்போதுதான் விழித்துக் கொண்டு அவரையும் வேறு இருவரையும் கட்சியிலிருந்து விலக்கியிருக்கிறார். விலக்கப்பட்ட மூவரும் (சேடப்பட்டி, கருப்பசாமி பாண்டியன், ரகுபதி) தாங்கள் மிகவும் யோக்கியர்கள் என்றும் அ.தி.மு.க. தலைவிதான் ஊழலின் இருப்பிடம் என்றும் இப்போது குற்றச்சாட்டுகளை அள்ளி வீசுகிறார்கள்!

'எதிர்க்கட்சியைச் சேர்ந்த கருணாநிதி கூட என் பேரில் சில லட்சம் ஊழல் செய்ததாகத் தான் வழக்குத் தொடுத்துள்ளார். ஆனால், அ.தி.மு.க. தலைவியோ நான் ஐந்து கோடி லஞ்சம் வாங்கிக் கொண்டு கட்சிக் கொரடாவை மீறிச் செயல்பட்டதாகக் குற்றம்சாட்டுகிறார். இது என்ன அநீதி!' என்று சேடப்பட்டியின் புலம்பல் ஒருபுறம்.

'இத்தனை நாட்களாக இந்த மூன்று பேரையும் நம்பி செயல்பட்டேன், அவர்கள் எனக்கு நம்பிக்கை துரோகம் இழைத்துவிட்டதற்கான ஆதாரங்கள் இப்போதுதான் கிடைத்தன' என்ற ஜெயலலிதாவின் புலம்பல் இன்னொருபுறம்!

மொத்தத்தில் இந்த பரஸ்பர குற்றச்சாட்டுகளால் அ.தி.மு.க.வின் ஊழல்களும் ஆட்சியில் இருந்தபோது நடந்த அக்கிரமங்களும் நீதிமன்ற விசாரணையின்றியே வெளிப்பட்டுக் கொண் டிருக்கின்றன.

அநியாயத்துக்கும் அக்கிரமத்துக்கும் துணைபோகாமல் தமது கட்சியை மாற்றுப் பாதையில் திசை திருப்பும் ஒரு நல்ல தருணமாக இதை மூப்பனார் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் ஊழலை எதிர்ப்பதற்காக உருவான கட்சி, தனது நான்காவது ஆண்டு நிறைவின் போது ஊழலுக்குப் பக்கபலமாக இருக்கவே முடிவு செய்துள்ளது. இது த.மா.கா.வின் துரதிர்ஷ்டம் மட்டுமல்ல; தமிழகத்தின் துரதிர்ஷ்டமும் கூட. ○

"என்னை விட்டு எங்கயும் போயிடாத மச்சான்! எங்கயாவது கடன் வாங்கிக்கு வோம்..."

"யாருகிட்டே போயி வாங்குவ புள்ள? நான் வண்டிக்குப் போனாதான் கூலி! பயப் படாமே இரு. நாளைக்கு வந்துடறேன். அதுக் குள்ள வலி வந்துட்டா அம்மாவையும், மச்சா னையும் கூட்டிக்கிட்டுப் போ. இந்த நூறு ரூவாயை வெச்சு சமாளி. அதுக்குள்ளே வந்துடுறேன்."

"இல்லைய்யா... இப்பவே வலிக்க ஆரம்பிச்சுட்டு. நான் சொல்றதைக் கேளு..."

ஆயிரம் ஆயிரம் தொழிலாளர்களில் இருவர். நூறு ரூபாயை வைத்துக் கொண்டு, அரசு மருத்துவமனையில் பிரசவம் பார்த்து விட லாம் என ஆழமாக நம்பியவர்கள்.

ஆனால் கடலூர் அரசுப் பொது மருத்துவ மனையில் சரஸ்வதிக்குக் கொடுக்கப்பட்டது சிவப்புக் கம்பள வரவேற்பு! மருத்துவர்களும் மருத்துவச் செவிலியர்களும் அவரை ஓடி ஓடி கவனித்து மருத்துவ சேவைக்கே முன்னுதார ணமாக, வரலாற்றில் தங்களை வரவு வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

கணவன் புறப்பட்டுப் போனபிறகு,




"கவலைப்படாமே போ... இந்த முறை ஆம்பளைப் புள்ளதான்."

ஏழ்மையிலும் கொஞ்சம் சந்தோஷத் தோடு புறப்பட்டார் விக்டர். தின பேட்டா வுக்கு லாரி ஓட்டும் விக்டரின் மனைவி சரஸ் வதிக்கு இது மூன்றாவது பிரசவம். கையோடு குடும்பநல அறுவைச் சிகிச்சையும் செய்து கொண்டு விடலாம் எனத் தெளிவாக இருந்த விக்டரும் சரஸ்வதியும் கடலூர் மாவட்டம் குறிஞ்சிப்பாடி அருகே உள்ள 'விழப்பள்ளம் காலனி' கிராமத்தைச் சேர்ந்தவர்கள். வறுமைக் கோட்டுக்குக் கீழே, ரேஷன் அரிசியையும், மண்ணெண்ணெயையும் நம்பி வாழ்ந்து வரும்

பிரசவ வலி தீவிரமாக, காது கேளாத தனது மாமியார் உண்ணாமலையுடன் டவுன் பஸ் ஸில் குறிஞ்சிப்பாடி வந்திருக்கிறார் சரஸ்வதி. வலி இன்னும் அதிகமானவுடன் அங்கிருந்து பஸ்ஸிலேயே புறப்பட்டுக் கடலூர் மருத்துவ மனைக்கு வந்து சேர்ந்தனர்.

அப்போது இரவு 8:30 மணி. பிரசவ வார்டில் டியூட்டி டாக்டராக இருந்த கலா, சரஸ்வதியைப் பரிசோதனை செய்திருக்கிறார்.

• சரஸ்வதி, விக்டர்

"குழந்தை கர்ப்பப்பையை விட்டு சில சென்டிமீட்டர் இறங்கி வெளியே வராமல் நின்று விட்டது. எனவே சிசேரியன்தான் செய்ய வேண்டும். ரத்தம் தேவை. உடனே புதுவை கோரிமேடு ஜிப்மர் மருத்துவமனைக்குக் கொண்டு செல்லுங்கள்" என்று எழுதிக் கொடுத்திருக்கிறார்.

ஆனால் ஓர் அடி கூட எடுத்து வைக்க முடியாத நிலையில் வலியை அனுபவித்துக் கொண்டிருந்த சரஸ்வதிக்கு டாக்டர் சொன்னது எதுவும் புரியவில்லை. ஏற்கெனவே பணமில்லாத சூழ்நிலையில் காது கேட்காத மாமியாருக்கும் எதுவும் புரியாததால், வார்டுக்கு வெளியே இருந்த மரத்தடியில் சரஸ்வதியைப் படுக்க வைத்திருக்கிறார். இந்த நேரத்தில் சரஸ்வதிக்கும், அவரது வயிற்றில் இருந்த குழந்தைக்கும் ஜீவமரணப் போராட்டம் தொடங்கியிருக்கிறது.

மெல்ல முனகிக் கத்திக் கொண்டிருந்த சரஸ்வதியை மயக்கம் முழுவதுமாக ஆக்கிரமித்துக் கொள்ள, மூச்சுப் பேச்சற்று மரத்தடியிலேயே கிடந்திருக்கிறார்.

விஷயம் கேள்விப்பட்டு மருத்துவமனை வந்து, சரஸ்வதியின் நிலையைப் பார்த்துக் கொதித்த அவரது அண்ணன் சண்முகம், அங்கிருந்த செவிலியர்களிடம் 'ஏன் அட்மிஷன் போடவில்லை' எனக் கேட்க, "ஜிப்மர் போகச் சொல்லி அப்பவே எழுதிக் கொடுத்திட்டோமே" என்று பதில் சொல்லியிருக்கிறார்கள்.



மனை வந்த ஜோதிநிர்மலா மயங்கிய நிலையில் இருந்த சரஸ்வதியைப் பார்த்து அதிர்ச்சி அடைந்திருக்கிறார்.

உடன் பிரசவ வார்டுக்குள் நுழைந்து சம்பந்தப்பட்ட டியூட்டி டாக்டரோடும் செவிலியர்களோடும் வாக்குவாதம் நடத்தியிருக்கிறார். பிரச்னை பூதாகாரமாக உருவெடுக்கும் சூழ்நிலை உருவானதும், மயங்கிய நிலையில் இருந்த சரஸ்வதிக்கு உடன் அறுவைச் சிகிச்சை செய்யப்பட்

# மருத்துவமனை!

டிருக்கிறது. ஆனால் குழந்தை இறந்தே பிறந்திருக்கிறது!

ஓர் ஏழைக் குடிமகளின் குழந்தை, அரசு மருத்துவமனை வளாகத்திலேயே கேட்பாரற்றுத் தனது மூச்சை முடித்துக் கொண்டிருக்கிறது.

உயிர்காக்கும் அரசு மருத்துவமனைகள், பலி கேட்கும் மருத்துவமனைகளாக மாறிவரும் அவலம் தமிழகத்திற்குப் புதிதில்லை என்றாலும், கடலூர் மருத்துவமனை தொடக்கத்திலிருந்தே, நோயாளிகள் மீது 'அதிகப் பரிவு' காட்டி வருவதாகச் சொல்கிறார்கள் பொது மக்கள்.

"பணம் இல்லாமத் தானே இங்கே வந்தோம்? அப்புறம் பாண்டிச்சேரி எப்படிப் போக?" என்று சத்தம் போட்டுப் பார்த்திருக்கிறார். இதற்கிடையில் டியூட்டி டாக்டர் கலா இந்த விவகாரம் பற்றி எதுவும் தெரியாதவராக – மருத்துவமனையில் மரணமடைந்த ஒருவரது உடலை சோதனை செய்யப் போய் விட்டாராம்.

செய்வதறியாது திகைத்த சண்முகம், தனக்குத் தெரிந்த நண்பர் மூலம் கடலூர் மாவட்ட வருவாய் அலுவலர் ஜோதிநிர்மலாவுக்கு போன் செய்திருக்கிறார். அடுத்த அரைமணி நேரத்தில் மோட்டார் சைக்கிளில் மருத்துவ

'தமிழகத்திலேயே இப்படியொரு மோசமான மருத்துவமனையை நான் பார்த்ததில்லை' என்று அமைச்சர் ஆற்காடு வீராச்சாமியால் சர்ட்டிபிகேட் வழங்கப்பட்ட இந்த

– அதிர்ச்சி ரிப்போர்ட்

மருத்துவமனை முப்பது ஏக்கர் பரப்பளவில், 464 படுக்கை வசதியுடன், 51 டாக்டர்கள், 71 நர்ஸ்கள், 150க்கும் மேற்பட்ட இதரப் பணியாளர்களைக் கொண்டு இயங்கி வருகிறது.

"எல்லா வசதியும் இருக்குன்னு தான் பேரு. ஏழைங்க ஸ்கேன் எடுக்கணும்னு போனா ரிப்பேர்னு சொல்றாங்க! ஒரு எக்ஸ்ரேவுக்கே பதினைஞ்சு ரூபா கொடுக்க வேண்டியிருக்கு. விசிட்டிங் அவர்ஸ் தவிர மத்த நேரத்துல உள்ளே போகணும்னா ஒரு ஆளுக்கு ரெண்டு ரூபா கேட்டல குடுக்கணும். ஒரு பேஷண்டைக் கொண்டு சேர்க்கும் போது சீட்டு வாங்குற இடத்துல ஐந்து ரூபா, ஸ்ட்ரெச்சர் தள்ளுறவனுக்கு இருபது, உள்ளே டிரிப்ஸ் போடுற நர்சுக்கு முப்பது கொடுக்கணும்! எத்தனை நாள் பெட்ல இருந்தாலும் ரெண்டு நாளைக்கு ஒருதரம் முப்பது ரூபா கொடுக்கணும். எல்லா வார்டுலயும் இதுதான் நிலைமை. பிரசவ வார்டுல ஆம்பளை பிள்ளைன்னா ஐந்நூறு, பொம்பளை பிள்ளைன்னா முன்னூறு இப்படிச் சொல்லிக்கிட்டே போகலாம் சார்! இத்தனை ஆம்புலன்ஸ் கிடக்கு. எனக்குத் தெரிஞ்சு ரெண்டு வருஷமா அதை எங்கேயும் அதிகம் எடுத்துக்கிட்டுப் போறதில்லே" என்கிறார், மருத்துவமனை வளாகத்திலேயே சைக்கிளில் டீ விற்கும் தனசேகர்.


• டாக்டர் கலா

**ச**ரஸ்வதி விவகாரத்தில் கொதிப்படைந்த கடலூர் வட்டார இந்திய கம்யூனிஸ்ட் கட்சியினர் மருத்துவமனையின் வலப்புற வாயிலில் ஆர்ப்பாட்டம் நடத்திக் கொண்டிருக்க, இடப்புற வாயிலில் மாவட்ட மருந்தாளுனர்கள், பதவி உயர்வும், சம்பள உயர்வும் கேட்டு ஆர்ப்பாட்டம் நடத்திக் கொண்டிருந்தார்கள்!

சரஸ்வதி விவகாரத்தில் மருத்துவமனையின் அலட்சியப் போக்கு குறித்து இணை இயக்குனர் ஏழுமலையிடம் பேசினோம் :

"டியூட்டி டாக்டர் சோதனை செய்யும் போது குழந்தையின் நாடித் துடிப்பு கிட்டத்தட்ட நின்று போன நிலையில் இருந்திருக்கிறது. ஜிப்மர் மருத்துவமனைக்கு அனுப்பினால் இதைவிட நல்ல மருத்துவம் கிடைக்கும் என்று பரிந்துரை செய்திருக்கலாம். டாக்டரின் கோணத்தில் இது சரியாக இருந்தாலும், சரஸ்வதியை அட்மிஷன் போடாதது தவறு என்று ஒத்துக் கொள்வதைத் தவிர வேறுவழியில்லை. நோயாளியின் தரப்பில் ஆண் ஒருவர் வராததும் தவறு. லேட்டாக வந்த சண்முகம் குடித்துவிட்டு மருத்துவமனையிலேயே படுத்துத் தூங்கியதையும் நானே நேரில் பார்த்தேன்" என்கிறார்.


• ஏழுமலை

பிரச்னையோடு சம்பந்தப்பட்ட டாக்டர் கலாவையும் சந்தித்தோம்.

"நான் நல்லது செய்யப் போயி அதுவே எனக்குப் பாதகமாப் போச்சு" என்று அழவே ஆரம்பித்து விட்டார்.

"கர்ப்பப்பையை விட்டு குழந்தை இறங்கி இருந்தது. பனிக்குடம் உடைஞ்சு இருந்ததால, கர்ப்பப் பையே செப்டிக் ஆகியிருந்தது. இந்த நிலையில மயக்க மருந்து கொடுத்தா உயிருக்கே ஆபத்து. இதனால ரெகுலேட்டர் வசதியோட சிசேரியன் செஞ்சா கவலையில்லேன்னு தோணிச்சு. ரெகுலேட்டர் வசதி ஜிப்மர்ல இருக்கு. இரத்தத்திற்கும் அங்கே பஞ்சமில்லை. அதனால அங்கே போக சீட்டு எழுதிக் கொடுத்தேன். அவங்க போயிருப்பாங்கன்னு நினைச்சேன். ஆனா போகலேங்கிறது மாவட்ட வருவாய் அதிகாரி வந்தப்புறம்தான் எனக்கே தெரிஞ்சுது. நான் என்ன செய்ய? அதுக்கப்புறம் நானே ஆபரேஷன் செஞ்சேன். காலை பத்து மணியிலேர்ந்து அஞ்சு சிசேரியன். ஓய்வேயில்லை! சோர்வான முகத்தோட இருந்த என்னைத் தூங்கி எழுந்து வர்றேன்னு சொல்றது என்ன நியாயம்?" என்றார்.

**பி**ரச்னையை மாவட்ட ஆட்சித் தலைவர் வரையிலும் எடுத்துச் சென்ற மாவட்ட வருவாய் அலுவலர் ஜோதி நிர்மலாவைச் சந்தித்தோம்.

"சுயநினைவு இல்லாம ஒரு கர்ப்பிணிப் பெண் மரத்தடியில படுத்திருக்கிறது எங்களுக்குத் தெரியலைன்னு சொல்றதை எப்படி ஏத்துக்க முடியும்? ஜிப்மருக்குப் போகச் சொன்னவங்க, பணம் இல்லேன்னு தெரிஞ்சதும், ஹாஸ்பிடல் ஆம்புலன்ஸ்ல நோயாளியை அனுப்பியிருக்கலாம். அதைச் செய்யலை. ஒட்டுமொத்த ஆஸ்பத்திரி நிர்வாகமும் சீரழிஞ்சு கிடக்குதுங்கறதுதான் உண்மை. நியாயத்தைக் கேக்கப் போனா, பப்ளிசிட்டி தேடுறேன்னு சொல்றாங்க!" என்று கொதித்தார்.

கடலூர் பொது மருத்துவமனை மாவட்டப் பொது 'பலி மனையாக'த் தன்னை வளர்த்துக் கொண்டிருப்பது சரஸ்வதிக்கு நேர்ந்த கொடுமை மூலம் தெளிவாகி விட்டது. இங்கு நடக்கும் நிர்வாகச் சீர்கேடுகளைக் கண்டு தேசிகன் என்ற மருத்துவர் தமது பதவியை ராஜினாமா செய்து விட்டுப் போனதும் இதற்குச் சாட்சி என்கிறார்கள், கடலூர் மக்கள்.

**— ஆர். சி. ஜெயந்தன்**

படங்கள் : **வெங்கடேஷ்**

# வேரைத் தேடியவருக்கு விருது!

ஜும்பா லாஹிரி என்ற பெயரை நம்மவர்கள் கேள்விப்படுவதே அநேகமாக இதுவே முதல் முறையாக இருக்கலாம். இவ்வாண்டு புலிட்ஸர் விருது பெறும், அமெரிக்க இந்தியர்.

புலிட்ஸர் விருது எத்தனை பெரிய கௌரவம் என்று அறிந்தவர்களுக்கு லாஹிரியின் வயது வெறும் முப்பத்துமூன்று தான் என்பது பெருவியப்பாயிருக்கும்.

சிறந்த நாவல்களுக்கு மட்டுமே பெரும் பாலும் அளிக்கப்படும் இக்கௌரவம் லாஹிரியின் சிறுகதைத் தொகுப்புக்குக் (Interpreter of Maladies) கிடைத்திருக்கிறது என்பது இன்னொரு சிறப்பு.

லாஹிரி, இதற்கு முன்பே பல அமெரிக்க இலக்கியப் பரிசுகளை வென்றவர்தான் எனினும் புலிட்ஸரைக் கனவிலும் நினைக்கவில்லை. தம் முதல் நாவலை மும்முரமாக எழுதிக் கொண்டிருக்கும் போது வந்த புலிட்ஸர் பட்டியலில் தம் பெயர் இடம் பெற்றிருப்பதைக் கூட கவனிக்கவில்லை!

பரிசு பெற்ற லாஹிரியின் தொகுப்பில் மொத்தம் ஒன்பது கதைகள். தம் வேர்களை விட்டுவிட்டு, அந்நிய மண்ணில் வசிப்பவர்களின் குழப்பங்கள், கலக்கங்கள், தவிப்பு-தடுமாற்றங்கள், வாட்டும் தனிமை உணர்வு ஆகியவற்றைத் திறமையாகப் பதிவு செய்கிறார் லாஹிரி. தாய் நாட்டிலேயே தனிமையின் தகிப்பை அறிந்தவர்களும் சமூகத்தால் உதறி எறியப்பட்டவர்களும் கூட லாஹிரியின் பார்வையிலிருந்து தப்பவில்லை!

லாஹிரியின் ஆங்கிலம் மிக எளிமையானது. சல்மான் ருஷ்டி போன்ற பிற இந்தோ-ஆங்கில எழுத்தாளர்களைப் போல இவர் மொழியைச் சுழற்றி விளையாடுவதில்லை. மனித உணர்வுகளை அறிவால் இனம் கண்டு கொண்ட எளிமை; அந்த எளிமையிலும் கூர்மை-இதுதான் லாஹிரியின் ஸ்பெஷாலிடி!

''நான் சிறுமியாக இருந்தபோது வெள்ளையர்கள் நிறைந்த பள்ளியில் என்னை மிகவும் வித்தியாசமாக உணர்ந்தேன். அவர்களையும் என்னையும்-வாழ்க்கையின் இருப்பையும் புரிந்து கொள்ளும் முயற்சியாகத்தான் கதை எழுதத் தொடங்கினேன்''



என்று கூறும் லாஹிரி, பாஸ்டன் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர்.

அமெரிக்காவிலேயே பிறந்து, வளர்ந்தவர் என்றாலும் 'நான் யார்?' என்ற கேள்வியுடன் விடுமுறை நாட்களிலெல்லாம் கல்கத்தாவுக்கு வந்துவிடுவார் லாஹிரி.

அங்கே, உறவினர்களே கூட அந்நியர்கள் மாதிரி தெரிந்தாலும் "என் வேர்களைத் தொடர்ந்து தேடாமலிருக்க முடியவில்லை" என்கிறார்.

லாஹிரியின் இத்தொகுப்பிலுள்ள 'Temporary Matters' என்கிற கதையை மீரா நாயர் விரைவில் படமாக்கவிருக்கிறார். மார்க்யூஸ், வி.எஸ். நைபால் போன்ற மிகச்சில இலக்கிய ராட்சஸர்களால் மட்டுமே பிரசுரம் காண முடிகிற 'நியூயார்க்கர்' என்கிற உலகத்தரமான இதழில் வெளிவந்த கதை இது!

அமெரிக்காவின் தலைசிறந்த இருபது எழுத்தாளர்களில் ஒருவராக 'நியூயார்க்கர்', லாஹிரியைத் தேர்ந்தெடுத்திருக்கிறது.

அவரது முதல் நாவல் எப்போது வரும் என்பதுதான் இன்றைய உலக இலக்கிய ரசிகர்களின் பிரதான எதிர்பார்ப்பு.

**— கௌரி ராம்நாராயண்**

66

**ய**ம ஸ்ம்ருதியைப் பற்றிச் சொன்னேன். அது எத்தனையோ காரண – காரியங்களை விவரிக்கிறது. யக்ஞ பிரகரணத்தை விவரிக்கிறது.

ஒருத்தர் உட்கார்ந்து காலை ஆறு மணியிலேயிருந்து ஹோமம் பண்ணிக் கொண்டேயிருக்கிறார். பெரிய யக்ஞம்! சுற்றிலும் எல்லோரும் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். 'நாராயணா' என்று யக்ஞம் முடிந்தபாடில்லை! அக்னியே அந்த யக்ஞம் பண்ணுபவரிடம் வந்தது.

"இந்த மாதிரி உட்கார்ந்து அஹோராத்ரம் பண்ணிக் கொண்டிருக்கிறாயே – இதெல்லாம் அந்த தேவதைக்குப் போகிறதா, தெரியுமா?" என்று கேட்டான் அக்னி!

"தெரியாது. போகிறதோ இல்லையோ தெரியாது. ஆனால் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது என்பதால் பண்ணுகிறேன்."

"போவது தெரியாது என்றாய்; நீ அக்னியிலே சேர்க்கிறது அந்த தேவதைக்குப் போதுமா? அதுவாவது தெரியுமா?"

"போதுமா என்றும் தெரியாது. ஏதோ கொஞ்சம் சேர்க்கிறேன்."

"போதுமா என்றும் தெரியாது; போகிறதா என்றும் தெரியாது. இப்படி அஞ்ஞானியாக ஒரு காரியத்தைப் பிராத: காலத்திலிருந்து ஆரம்பித்துச் செய்து கொண்டிருக்கிறாயே! நீயும் சிரமப்பட்டு இதராளையும் சிரமப்படுத்தி இப்படி யக்ஞம் பண்ணாவிட்டால் என்ன? இதை நிறுத்து. இதனால் பிரயோஜனமே இல்லை. அக்னி குண்டத்திலே ஒரு குடம் ஜலத்தைக் கொண்டு வந்து கொட்டு!"

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

– உடனே இவர் என்ன பண்ணினார் – 'வேதமே சொல்லி விட்டதாலே, யக்ஞத்தால் பிரயோஜனமில்லை போலிருக்கிறது!' என்று முடிவு செய்தார். குடத்தை எடுத்துக் கொண்டு கிருஷ்ணா நதியிலே இறங்கி விட்டார்!

ஜலத்தை மொண்டு எடுத்துக்கொண்டு வேகமாக வந்தார். உடனே அவர் கையைப் பிடித்துக் கொண்டது வேதம்.

"என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டது.

"அணைக்கப் போகிறேன், அக்னியை..."

"இப்படிக் கூட ஒரு மூடாத்மா உண்டா? யக்ஞத்தோடு சம்பந்தம் இல்லையென்றால் நமக்கு வாழ்வு ஏது? நான் ஒன்று சொல்லி விட்டேன் என்பதற்காக குடத்தை எடுத்துக் கொண்டு போய் விட்டாயே!" என்று அவனைத் தடுத்தது.

ஆகையினால், பாருங்கள் ஒரு காரியத்தை 'வேண்டாம்' என்று பின்வாங்குவதில்தான் மனிதர்களுக்கு வேகம் ஜாஸ்தி!

"அணைப்பது என்றவுடனேயே வேக வேகமாக வந்து விட்டாயே; கொஞ்சம் யோசனை பண்ண வேண்டாமா? யக்ஞத்தோடு சம்பந்தமில்லையென்றால் நமக்கு வாழ்வு ஏது? யக்ஞம்தானே நமக்குப் பிராணன். நீ நினைப்பது சரியல்ல. அப்படி நினைக்காதே. பரிமிதமாகக் கொஞ்சம் நெய்யை வாங்கி யக்ஞத்திலே சமர்ப்பிக்கிறோம். அப்படி சமர்ப்பித்தவுடனே எந்த தேவதையை உத்தேசித்து அதைச் சமர்ப்பித்தோமோ அந்த தேவதைக்கு 'உத்தேச்ய தியாகம்' நாம் செய்ததாக ஆகிறது.

"உலகம் உண்ட பெருவாயன் சமஸ்தத்தையும் விழுங்கியவன். அவனுக்கு ஒரு உத்திரிணி நெய்யா! ஒரு காலத்தில் சமர்ப்பிக்கக் கூடிய, ஒரு லௌகீகக் கணக்கிலே அடங்கக்கூடிய நெய்யானது அவ

னுக்குப் போதுமா? எல்லாவற்றையும் விழுங்கியவனுக்கு அது போதுமா? என்று கேட்டால், அப்படி நாம் நினைக்கலாகாது. உன்னுடைய சக்திக்கு ஏற்றதை நீ சமர்ப்பித்தாயானால் அந்த தேவதைக்கு எவ்வளவு இருந்தால் அது போதுமோ, அந்த அளவாக அது மாறிச் செல்கிறது. அதுதான் யக்ஞத்திலே இருக்கும்படியான ஒரு ஏற்றம் - நாம் கொஞ்சம் சமர்ப்பித்தாலும் அது பன்மடங்கு விருத்தி ஆகிவிடுகிறது. அக்னியானவன் அதை தேவதைகளிடத்திலே சேர்க்கிறான்."

"சரி, விருத்தியாகிறது என்பது எப்படித் தெரியும்?'' என்று கேட்டார் யக்ஞத்தை அணைக்க முற்பட்டவர். ''விருத்தியாவது கண்ணுக்குத் தெரிவதில்லையே அதை எப்படி ஒப்புக் கொள்வது?''

அதற்கும் வேதமே பதில் சொல்கிறது :

"இரண்டு ஏக்கரா நிலத்திலே ஒரு விவசாயி ஆறு மரக்கால் நெல்லை நாற்று விட்டு நடவு நடுகிறார். மூன்று மாத காலம் அதை சம்ரக்ஷித்து, அதற்கப்புறம் அறுவடை பண்ணுகிறார். களத்திலே



போட்டு கட்டை அடித்து, அதைத் தூற்றி அளக்கிறபோது 36 கலம் நெல் வந்துவிடுகிறது. பூமியிலே தியாகம் பண்ணிய நெல் ஆறு மரக்கால். கிடைத்தது 36 கலம்! ஆறு மரக்காலே திரும்பக் கிடைப்பதாக இருந்தால் விவசாயம் என்கிற காரியம் எதற்கு? பன்மடங்கு விருத்தியாவதால்தான் அது நடக்கிறது!"

இதைக் கேட்டுக் கொண்டிருந்தவர், "அக்னியில் போட்டதைப் பற்றிக் கேட்டால் நீர் பூமியில் போடுவதைப் பற்றிச் சொல்லுகிறீரே!" என்றார்.

"பூமியில் போட்டது கண்ணுக்குத் தெரியாமல் மறைவதால் நீ நம்ப மாட்டேனென்கிறாய். அக்னி யார்? பூமி யார்? என்பதைத் தெரிந்து கொண்டாயானால் இந்தச் சந்தேகமே வராது. உபநிஷத் என்ன சொல்கிறது பார் – 'ஆகாசத்திலிருந்து வாயு தோன்றிற்று, வாயுவிலிருந்து அக்னி தோன்றிற்று, அக்னியிலிருந்து ஜலம் தோன்றிற்று, ஜலத்திலிருந்து பூமி தோன்றிற்று' என்கிறது. பூமியில் போட்டது விருத்தியாகிறது என்பது எல்லோருக்கும் தெரிகிறது. பூமிக்கு மூலம் எது? தீர்த்தம். அதற்கு மூலம் எது? அக்னி. ஆகவே பூமிக்குக் காரணம் அக்னி. அக்னிக்கு இருக்கும் குணம் பூமிக்கு இருக்காதா...? இதைப் பார்க்க முடிகிறது என்பதால் நம்புகிறாய். பார்க்க முடியாததால் மட்டும் இல்லை என்று சொல்லிவிட முடியுமா...?"

– வேதம் இப்படிச் சொன்னவுடனே ஜலத்தைக் கொண்டு போய் கிருஷ்ணாவிலேயே கொட்டிவிட்டு வந்து விட்டார் அவர். யக்ஞம் நன்றாக நடந்தது!

இந்த மாதிரி எதிர்மறையாக நிறைய கேள்விகள் கேட்கிறது வேதம். யம ஸ்ம்ருதியிலே இப்படிப் பல விஷயங்கள்.

விவாஹம் பண்ணுகிறோம். மாங்கல்ய தாரணம் ஆனவுடனேயே அக்ஷதையைச் சேர்த்து விடக்கூடாது. அப்போது கல்யாணம் பூர்த்தியானதாகக் கொள்ள முடியாது. பின், எப்போது பூர்த்தியாகிறது?

யம ஸ்ம்ருதி அதை விவரிக்கிறது.

'பெண்ணைப் பெற்றவர்கள் தானம் பண்ணினாலும், பெற்றுக் கொள்கிறவன் மாங்கல்யதாரணம் பண்ணினாலும் இரண்டு பேருக்கு கணவன் – மனைவி உறவு சித்திக்காது; ஏற்படாது' – அழகாக அடித்துச் சொல்கிறது யம ஸ்ம்ருதி.

மீதி என்ன தானம் பண்ணினாலும் 'ந மம' –என்னுடையதில்லை என்று சொல்வதுண்டு. கன்னிகாதானத்தில் மாத்திரம் 'நமம' என்று சொல்லக்கூடாது. ஏனென்றால் பெண்ணை அடியோடு கொடுத்து விடுவதில்லை. மறுபடியும் மறுபடியும் அவள் இந்த கிருஹத்துக்கு வந்து விட்டுப் போக வேண்டும். அதனால் 'ந மம' சொல்லாமல் 'நம:' என்று சொல்லி இந்த உத்தமமான தானம் நிகழ்த்தப்படுகிறது. மஹா தானம் என்று ஒரு பெருமை கன்னிகாதானத்துக்குத் தான் உண்டு. அப்படி தாரை வார்த்துக் கன்னிகையைக் கொடுத்தாலும் பதித்வம் ஏற்படாது.

பதித்வம் எப்போது ஏற்படும் என்றால் பாணிக்கிரஹண சம்ஸ்காரம் முடிந்தால் தான் ஏற்படும். மாங்கல்யதாரணம் ஆன பிற்பாடு பாணிக்கிரஹணம்.

பாணிக்கிரஹணத்துக்குச் சூத்திரம் எழுதியிருக்கிறார் ஆபஸ்தம்ப மஹரிஷி : 'தர்மத்தின் பொருட்டும் சத்சந்தான சௌபாக்யம் உண்டாகும் பொருட்டும் உன்கையைப் பிடிக்கிறேன் என்று பிடிக்க வேண்டும்' – இப்படி சூத்திரம் எழுதுகிறார் மஹரிஷி.

மாங்கல்ய தாரணத்துக்கு மந்திரம் கிடையாது; சுலோகம்தான்.

ஆண்டாள் சொன்னாள் பாருங்கள் – 'கைத்தலம் பற்றக் கனா கண்டேன்' என்று. மங்கள சூத்திரம் கட்டியதாக அவள் அந்த பத்துப் பாடல்களிலும் சொல்லவே இல்லை; பாணிக்கிரஹணம்தான் இருக்கிறது.

அந்தப் பெண் சங்கோசமில்லாமல் கையைத் தூக்கிக் காட்ட வேண்டும். அந்த வரன் அவள் ஐந்து விரல்களையும் சேர்த்து நன்றாகப் பிடிக்க வேண்டும்.

'நீயும் நானும் தொண்டு கிழமாகப் போனாலும், எழுந்திருக்க முடியாமல் போனாலும் இப்போது பிடித்த கையை விட மாட்டேன்' என்று சொல்வது பாணிக் கிரஹணம். இது பிற்பாடு, வடக்கு பக்கத்திலே, கிழக்கு திக்கை நோக்கி ஏழு அடி வைப்பு – சப்தபதிகரணம் என்று பெயர் – இது முடிந்தால்தான் கல்யாணம் முடிந்ததாகிறது.

அந்த ஏழு அடிவைப்புக்கும் சொல்லப்படுகிற மந்திரார்த்தம் தெரிந்திருந்தால் இல்லற தர்மத்திலே என்னென்ன கடைப் பிடிக்க

## அருள்வாக்கு

அன்றன்றைக்கும் நாம் தூங்குகிறோம் அல்லவா? இதையும் ஒரு சாவு மாதிரி என்றுதான் சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. தூங்குகிறபோது கட்டை போல ஒன்றும் தெரியாமல், ஞானமே இல்லாமல்தானே கிடக்கிறோம்? இதனால்தான் இப்படிச் சொல்லியிருக்கிறது. 'நித்யப் பிரளயம்' என்று தூக்கத்தைச் சொல்வார்கள். இப்படி தினமும் நாம் 'சாகிற'போது பகவானையே ஸ்மரித்துக் கொண்டு 'சாக' முடிகிறதா என்று அப்யாஸம்

பண்ணிப் பார்க்கலாம். தூங்குகிற தற்கு முன்னால் நம் இஷ்ட தேவதை யையே ஸ்மரித்துப் பார்க்க வேண் டும். அந்த நினைப்போடேயே தூக் கத்தில் ஆழ்ந்து விட வேண்டும். வேறே நினைப்பு வரக்கூடாது. 'இதிலே என்ன கஷ்டம் இருக்கிறது? மனஸுக்கு ரம்யமாகவும் ஆறுதலா கவும் இருக்கப்பட்ட இந்த ரூபங்களை நினைப்பதில் என்ன ச்ரமம்?' என்றுதான் தோன் றும். ஆனால் எதனாலோ, சிறிது நேரமானால் இத்தனை நல்ல, திவ்யமான ஸ்மரணையை



விட்டுவிட்டு மனஸ் வேறெங்கேயா வதுதான் போய் விழும், அப்படியே கண்ணை அசக்கித் தூக்கத்தில் கொண்டுபோய் விட்டுவிடும். இப்படி ஏமாறாமல் பழக்கிக் கொண்டால் சாகிற ஸமயத்திலும் பகவானை விடாமல் நினைக்க முடியும் என்ற நிச்சயத்தைப் பெறலாம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

வேண்டும் என்று முற்றிலும் தெரிந்து கொள் வார்கள்.

உபநிஷத்துக்கெல்லாம் காரண பூதனாய் அதற்கு அந்தர்யாமியாய், சமஸ்த வேதங்களி லேயும் பார்த்தோமே, அவன்தான் கல்யாண காலத்திலேயும் லௌகிகமாக இந்த உலக வாழ்க்கைக்கும் கூட இருந்து உபகாரம் பண்ணுகிறான்.

மணப்பெண்ணின் கால் கட்டை விர லைப் பிடித்து ஓர் அடி எடுத்து வைக்கிறான். முதல் அடி எடுத்து வைக்கும் போதே, 'சர்வ வியாபியாய் எங்கும் நிறைந்திருக்கிற விஷ்ணு உன் கூட வரட்டும்' என்று கேட்டுக் கொள் கிறது மந்திரம்.

எதற்காக அவன் வர வேண்டும்?

அன்ன சம்வ்ருத்திக்காக - தான்யலக்ஷ்மி - குறைவில்லாமல் அன்னம் நிறைவதற்காக - முதல் அடி வைப்பு. அதற்கும் விஷ்ணு கூட வரட்டும்.

இரண்டாவது அடி - 'பலமுடையவர் களாக எல்லோரும் இருக்க வேண்டும். அதற்கு விஷ்ணு கூட வரட்டும்' என்கிறது மந்திரம். பலம் எதற்கு என்று கேட்டால், விளைகின்ற தான்யத்தை உண்டு ஜீரணிக்க! மனிதனுடைய விசேஷமான ஆனந்தம் என்று இதைச் சொல் கிறது வேதம்! சாப்பிடக்கூடாது என்று நாம் கேட்பது இப்போதுதான். வேதம் நம்மிடத்தில் எவ்வளவு அக்கறையோடு கருணையோடு சொல்கிறது பாருங்கள்! 'இவன் ஜீவித்திருக்கிற காலம் வரையில் நன்றாகச் சாப்பிட வேண் டும்!' 'அன்னவான் பவ அன்னாதோ பவ' என்று இரண்டு விதமாகச் சொல்கிறது வேதம். அன்னத்தை உடையவனாகவும் இரு; அதைச் சாப்பிடக் கூடியவனாகவும் இரு.

மூன்றாவது அடி வைப்பில், 'விரதத்தின் பொருட்டு அடி வை' என்கிறது மந்திரம். ஸ்ரீராம நவமி, ஸ்ரீ ஜயந்தி, இன்னும் விசேஷ மாக ஆழ்வார் திருநட்சத்திரம், ஆசார்யர் களுடைய திருநட்சத்திரம் - இவையெல்லாம் அந்தப் பெண் வந்து கொண்டாட வேண்டும். இவற்றைப் பண்ண பதிக்கு சஹகரிக்க வேண் டும். அவள் காரிய கலாபத்தினாலேயே கட் டாயம் பண்ண வேண்டும் என்று அவனுக் குத் தோன்றும். அதற்கு விஷ்ணு கூட வர வேண்டும்.

நான்காவது அடி சந்தோஷத்துக்கு. இந்தக் கல்யாணத்தினால் குடும்பத்தில் பிரிந்து போன வர்கள் மீண்டும் சேர வேண்டும். அதற்கு நான் காவது அடி வைக்கையில் விஷ்ணு கூடவே வரட்டும்.

ஐந்தாவது அடி கோசம்வ்ருத்திக்கு - பசுக் கள் நிறைய பெருக வேண்டும். வருவோருக் கெல்லாம் பாலும் தயிரும் இல்லையென் னாது வாரி வாரி நீ வழங்க வேண்டும். அதற்கு விஷ்ணு கூட வரட்டும்.

ஆறாவது அடி, ஆறு ருதுக்களிலும் (பருவங் கள்) கிடைக்கக்கூடிய தானியங்கள் எண்ணெய் வித்துக்கள் எல்லாம் நன்றாகக் கிடைக்க வேண்டும்; அவற்றுக்குப் பஞ்சம் என்பதே ஏற் படக்கூடாது என்பதற்காக எடுத்து வைக் கிறாய். அதற்கும் விஷ்ணு கூட வரவேண்டும்.

ஏழாவது ரித்விக்குகளோடு பண்ணக் கூடிய யக்ஞமான சோமயக்ஞம் நீ பண்ண வேண்டும். அதற்கு விஷ்ணு கூட வரட்டும். ஏழு ரித்விக்குகளுடன் பண்ணக்கூடிய யக்ஞம் அது. அதைச் செய்தால் தேவதைகள் மிகவும் சந்தோஷமடைவார்களாம். அதனால் அவர் களே கூட இருந்து கல்யாணம் என்கிற கர்மா வைப் பண்ணி வைக்கிறார்களாம் - ஏழாவது அடி வைப்பின் போது உத்தரவாதம் ஆகிற சோம யக்ஞம் நடக்க வேண்டும் என்பதற்காக.

இப்படி ஏழு அடி வைப்பிலும் விஷ்ணு பகவானை - கூட வரும்படி அழைக்கிறது சப்தபதி மந்திரம். சப்தபதி என்கிற சம்ஸ் காரம் நடக்கிறபோது அங்கே அவன் இருக் கிறான். சாந்நித்யமாய் இருக்கிறான்.

வேத வேதாந்தத்தின் விளக்கமானவன் தான் இந்த லௌகிகமான சம்ஸ்காரத்தி லேயும் உறைகிறான் என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

(தொடரும்)



# சித்தி

ஷூட்டிங் ஸ்பாட்

பின்னப் படாமல், விரித்துப் போட்ட நீனாவின் முடியைக் கோதிவிட்டு, டிரஸ்ஸிங் டேபிளிலிருந்து ஒரு கிளிப்பை எடுத்துப் போட்டு விட்டார் ராதிகா. நீனா நெளிந்து, "விடுங்க" என்று சற்றே நகர,

"ஏன்?"

"எனக்குக் கூச்சமா இருக்கு."

"நான் உன் அம்மா! ஏழு வயசிலே இருந்து நான் உன்னைப் பார்க்கிறேன். என்கிட்டே என்ன கூச்சம்?"

"நான் இன்னும் சின்னப்பெண் இல்லை! அஞ்சு வருஷம் ஹாஸ்டலில் வளர்ந்தவள். நான் டிரஸ் பண்ணிக்கிறப்போ, வேற யார் இருந்தாலும் கூச்சமா இருக்கும். ப்ளீஸ்! வெளியில போயிடுங்க"

நீனாவின் பேச்சில் லேசாய் அதிர்ந்து போன ராதிகா, மறுவார்த்தை பேசாமல், கதவை சாத்திக்கொண்டு அறையை விட்டு வெளியேற –

'கட்' என்றார் டைரக்டர்.

கௌதமி ஹவுஸில் நாம் நுழைந்தபோது நடந்துகொண்டிருந்த 'சித்தி' ஷூட்டிங்கில் கண்ட காட்சி இது!

"சினிமாவிலிருந்து மொத்தமாக ஒதுங்கியாகி விட்டதா?" என்று ராதிகாவைக் கேட்டபோது, "அப்படி ஒரு முடிவை இன்னும் எடுக்கவில்லை! ஆனால் இப்போது கவனம் டீவி சீரியல்களில் தான். இந்த சித்தி தொடர் இன்று நான் எதிர்பார்த்ததைவிட அதிக வரவேற்பு பெற்றுள்ளது. அதற்குக் காரணம், அயராத உழைப்பு. டீம் ஒர்க்... குறிப்பாக டைரக்டர், பாஸ்கர்தான்"

பாஸ்கர், நம்நாடு உட்பட ஏராளமான படங்கள் இயக்கிய முந்தைய தலைமுறை இயக்குனர் ஜம்புவின் மகன். பாலசந்தரின் மாணவர். 'மர்மதேசம்', 'விடாது கருப்பு' மூலம் அறிமுகமானவர். இரண்டிலும் துணை இயக்குனராக இருந்த அனுபவம், மர்மதேசத்தின் மூன்றாம், நான்காம் பாகங்களான சொர்ண ரேகை, இயந்திரப் பறவை இரண்டையும் இயக்கும் வாய்ப்புக் கிடைக்க வழி செய்தது.

"இருபது, இருபத்தைந்து பேர் கொண்ட கூட்டுக்குடும்பம் எங்களுடையது. எல்லா பிள்ளைகளும் வளர்ந்து ஆளாகியதும், தந்தையின் மறைவு, குடும்பத்தில் பாகம் பிரிக்க வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தியது. அப்போது ஏற்பட்ட அனுபவமும் உணர்வுகளும், பாதிப்புகளும்தான் 'சித்தி'யின் அடித்தளம்" என்கிறார் டைரக்டர் பாஸ்கர்.

தினம் ஒரு எபிஸோட் என்பது இவரது

சராசரிக் கணக்கு. சுமார் எண்பது பகுதிகள் ஒளிபரப்பாகிவிட்டன. இன்னும் எண்பது எடுத்தாகிவிட்டது. மொத்தம் ஐந்நூறு எபிசோட்களுக்கு எடுப்பது திட்டமாம்!

''ஆனால் கதையை விஷயமில்லாமல் இழுக்கக்கூடாது என்பதிலும் கவனமாக இருக்கிறோம்'' என்கிறார்கள்.

மர்மதேசம் தொடரில் பணிபுரிந்ததன் பாதிப்பினால், சமூக சென்டிமென்ட் தொடரான சித்தியிலும், ஒவ்வொரு எபிசோடிலும் 'சஸ்பென்ஸ்' வைத்து முடிப்பதை வழக்கமாகக்கொண்டிருக்கிறார்.

ராதிகா, சிவகுமார், யுவராணி, நீனா, சுபலேகா சுதாகர், அஜய்ரத்னம், தீபா வெங்கட், வாசுவிக்ரம், அஞ்சு, வி.கே. ராமசாமி, டெல்லி குமார் என்று பெரிய படையே நடிக்கிறது, 'சித்தி' தொடரில். கதை நெடுக வரும் பாத்திரங்கள் மட்டும் சுமார் முப்பது.



"சன் டி.வி.யில், ஒளிபரப்பாகும் புரோகிராம்களில், சன் செய்திகளுக்குத்தான் இதுவரை அதிகபட்சப் பார்வையாளர்கள் (முப்பது சதவீதம்). சித்தி தொடருக்கு இதுவரை அதிகபட்சம் கிடைத்திருப்பது இருபத்து ஆறு சதவீதம். சன் நியூஸுக்கு இணையாக, பார்வையாளர்களை அதிகரிப்பதுதான் 'சித்தி' டீமின் லட்சியம்'' என்கிறார்கள் யூனிட்டில்.

நீனாவிடம் பேச்சுக் கொடுத்தபோது, குரலில் ஆதங்கம்.

"சினிமாவில் வழக்கமாக இரண்டு டூயட், காதல் என்று செய்கிற ஹீரோயினாக அறிமுகமாகாமல், அகத்தியனின் விடுகதையில் மிக ஆழமான கேரக்டர் மூலம் (நாற்பது தாண்டிய மனிதரைக் காதலிக்கும் பதினெட்டு வயதுப் பெண்) அறிமுகமானதால், அடுத்து அதே போல அழுத்தமான கேரக்டர்கள் கிடைக்காமல் திண்டாடினேன். டி.வி.யிலும் அதே பிரச்னை. முதல் சீரியலான இப்படிக்குத் தென்றலில் மிக அழகான, அழுத்தமான கேரக்டர். அதன்பின் இப்போதுதான் சித்தியில்'' என்றார்.

சிவகுமாரிடம் சென்றோம். ஹாயாக ரவி ஆறுமுகம் எழுதிய 'பாற்கடலுக்குள் ஒரு பனித்துளி' என்ற புத்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தார். ''மனுஷர் அபார புத்திசாலியாக இருக்கிறார். எழுத்தில் என்ன மாதிரி ஒரு வீச்சு! சில ஆங்கில வார்த்தைகளுக்கு, அவர் கையாண்டிருக்கும் தமிழ் மொழி பெயர்ப்பு, அசர வைக்கிறது. திருமூலர் முதல் ரோபோட் வரை தொடாத விஷயமில்லை. இலக்கியத்தை சுவாசிக்கும் இந்தக் காக்கிச் சட்டைக்காரர் பலவிதமான பழங்களையும் தோல் உரித்து, நார் எடுத்து கொட்டை நீக்கி, ஜூஸ் போட்டுக் கொடுத்திருக்கிறார். சுவைக்க சுகமாக இருக்கிறது'' என்று பாராட்டித் தள்ளி விட்டார்.

கடைசியாக இந்தத் தொடர் மூலம் பாபுலராகிவிட்ட 'சித்தி' என்ற குரல் பற்றி ஒரு செய்தி! மர்மதேசம் என்று அடிக்குரலில் சொல்லி ஒரு வித பயத்தை ஏற்படுத்திய பார்முலா படி, சித்தி தொடரிலும் சித்தி என்றாலே, கொடுமைக்காரி என்பதை



உடைத்து, பாசத்துடன், ஏக்கமாய் 'சித்தி' என்று சொல்ல வைத்திருக்கிறார்கள். 'சித்தி' என்று அழைக்கும் குரலுக்குரிய குழந்தைக்கு வயது நாலு. இசையமைப்பாளர் தினாவின் மகன்தான் அவன்! பெயர்:ராம்கிரன்.

ஸ்கிரிப்ட்: **கௌதம் ராம்**

கேமரா: **ஸ்ரீஹரி**

# தமிழக சட்டசபை தரம் தாழ்ந்துவிட்டதே?

● அஜார், தேனாம்பேட்டை. ❑

*? பாகிஸ்தான் ஏன் எப்போதும் இந்தியாவி டம் விரோத மனப்பான்மை கொண்டிருக் கிறது?*

! இந்தியாவில் ஜாதி-மத அரசியல் பண்ணி னால்தான் ஆட்சியைப் பிடிக்க முடியும் என் பது போல, பாகிஸ்தானில் இந்திய - விரோத பாலிடிக்ஸ் பண்ணித்தான் அதிகாரத்தில் நீடிக்க இயலும். இவையெல்லாம் மக்களின் அதிருப்திக்கு வடிகால் உருவாக்கிச் சமாளிக் கும் அரசியல் தந்திரங்கள்.

● ஜி. ஜெயராமன், கூத்தலூர்.

*? எதற்கும் ஒரு லிமிட் உண்டு - அரசியல்ரீதியாகத் தான் உதாரணம் சொல்லுங்களேன்...?*

! தமிழ்நாடு காங் கிரஸ் கட்சித் தலை மைக்கு ஆள் தேர்வு செய்ய மேலிடம் சார் பாக வந்த குரியன், எழு பது செயல் உறுப்பினர் களைப் பேட்டி கண்டா ராம். அவர்களுள் ஐம்பது பேர் தாங்களே தலைமைக் குத் தகுதியானவர்கள் என்று சொல்லிக் கொண் டார்களாம். எழுபது பேருமே தாங்கள்தான் தகுதியானவர் கள் என்று கூறாததால் எதற் கும் லிமிட் உண்டு என்று நிரு பணமாகியிருக்கிறதல்லவா?



• இது...



• இந்திய...



• சகாப்தம்...!

● சி. மகேஷ், சென்னை - 26.

*? புலிட்சர் விருது இந்தியர் ஒருவருக்குக் கிடைத்துள்ளது பற்றி...?*

! ஆங்கிலத்தில் எழுதும் இந்தியர்களின் திறன் ஓங்கியுள்ள காலம் இது... ருஷ்டி, ராய், லாஹிரி என்று சக்கைபோடு!

● கு. கணேசன், பனங்காட்டூர்.

*? 'திடீப் பற்றாக்குறை, அதனால் மக்கள் தியாகம் செய்யத் தயாராக வேண்டும்' என்று கூறி ரேஷன் அரிசி, மண்ணெண்ணெய், உரம், சர்க்கரை, சமையல் எரிவாயு ஆகிய வத்தின் விலைகளை உயர்த்தி, சாமானியர்களின் தலையில் கைவைத்த மத்திய அரசு, தேசியமயமாக்கப் பட்ட வங்கிகளின் வராக் கடன் 55,000 கோடி ரூபாயை வசூலிக்கவும் நாட்டில் புழங்கும் மூன்று லட்சம் கோடி ரூபாய் கறுப்புப் பணத்தைப் பறிமுதல் செய்ய வும் நடவடிக்கை எடுக்கத் தயங்குவது ஏன்...?*

! உங்கள் கட்டுரைக் கேள்விக்குப் பதிலும் கட்டுரையாகக் கூடாதென்றால் சுருக்கமாக : மூன்றுமே தவறான பொருளாதாரக் கொள்கை களின் மோசமான விளைவுகள்தாம்.

● கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

*? 'அ.தி.மு.க. ஆற்றி வரும் சமுதாய நற் பணிகள் மக்களை வெகுவாகக் கவர்ந்துள் ளது என்பதை நான் நன்றாகவே அறிவேன்' என்று 'ஜெ' கூறியுள்ளது பற்றி...?*

! சமுதாயம் = போயஸ் தோட்டம்; நற்பணி = சொத்து சேர்ப்பது; மக்கள் = சசி அண்ட் கோ!

# நீங்கள் கேட்டவை


• கண்டிப்பு கலாசாரம்!


• புதிய ஃபார்முலா!


• சொல்லும் சங்கீதமும்....

● அ. சுகுமார், காட்டுக்கானூர்.

*? பீஹாரில் அனைத்துக் கிராமங்களுக்கும் மின்சாரம் தர எழுநூறு வருடங்கள் ஆகும் என்று மத்திய மின்துறை அமைச்சர் கூறியுள்ளாரே?*

! லாலு - ராப்ரி ஆட்சி ரொம்ப மோசம் என்று எடுத்துக்காட்டக் கூறப்பட்ட மிகையான விமர்சனமாகத் தோன்றுகிறது. செயல் திறனற்ற, ஊழல் ஆட்சியாளரை இனம் கண்டு, தேர்தல்களில் மக்கள் அடிக்கடி தண்டித்தால் மாநிலம் துரிதமாக முன்னேறும்.

● பி. நடராஜன், அன்னூர்.

*? சமீபத்தில் தங்களை மகிழ்ச்சியில் ஆழ்த்திய செய்தி எது?*

! ஊட்டியில் பிளாஸ்டிக் உறைகள், கப்புகள் போன்றவற்றுக்கு நகராட்சி துணிந்து தடா விதித்திருக்கும் செய்தி.

● பாலு, காரைக்குடி.

*? அமெரிக்க உளவுத்துறை அலுவலகத்தின் கிளை இந்தியாவில் அமைவது நம் தேசப் பாதுகாப்புக்குக் குந்தகம் விளைவிக்குமா?*

! அமெரிக்க உளவுத் துறை இங்கு அலுவலகம் அமைத்திருப்பது சர்வதேச பயங்கரவாத வலைப்பின்னல் முயற்சிகளை முறியடிக்க என்று கூறப்படுகிறது. ஆனால் இவர்கள் நிச்சயம் அத்துடன் நிற்கமாட்டார்கள். இந்தியப் பாதுகாப்பு முயற்சிகள், ஆயத்த நிலைகள், அணு ஆயுதத் தயாரிப்புகள் முதலியவை பற்றியும் கண்டிப்பாக உளவறிவார்கள். ஆனால், அமெரிக்காவை நாம் பகைத்துக் கொள்ளாத வரை பயமில்லை!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம். ●

*? சர்வாதிகார ஆட்சி நடக்கும் 'பாகிஸ்தான்' போன்ற நாடுகளை, அணிசேரா நாடுகள் அமைப்பிலிருந்து நீக்குவதென்று தீர்மானிக்கப்பட்டுள்ளது இந்தியாவின் முயற்சிக்குக் கிடைத்த வெற்றிதானே?*

! பாகிஸ்தானின் 'மூக்கை உடைக்கும்' நமது நோக்கம் வெற்றி பெற்றிருக்கலாம். ஆனால், இந்தோ - பாக். பிரச்னைக்கு இது தீர்வு அல்ல. பிரச்னையை மேலும் கடினமாக்கும் போக்கு. அண்டை நாட்டை அணிசேரா அமைப்புக் கூட்டங்களில் சந்தித்து உரையாடும் சந்தர்ப்பமும் இனி இல்லாது போய்விடும்.

● மல்லிகை மன்னன், மதுரை - 17.

*? சபாநாயகரைப் பார்த்து 'போப்பா' 'வாப்பா' என்று பேசும் அளவுக்குத் தமிழக சட்டசபையின் தரம் மிகவும் தாழ்ந்து போய் விட்டதே?*

! அது ஒரு பக்கம்; த.மா.கா. செல்லகுமாரை 'டா' போட்ட தி.மு.க. எம்.எல்.ஏவை மன்னிப்புக் கேட்க வைத்த முதல்வரின் தர உயர்வு மறுபக்கம்.

● சுதா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

*? நூலறிவு, பேச்சு வன்மையை அதிகரிக்குமா?*

! இயல்பான பேச்சு வன்மை அமையப் பெற்றால் அதை நூலறிவு நிச்சயம் பெருக்கும். அவ்வன்மையுடைய பலரை உதாரணம் சொல்லலாம் என்றாலும் சமீபத்தில் மனப்பதிவிலிருப்பவர் சென்னை பண்பலையில் 'பாதுகா பட்டாபிஷேகம்' இசைப் பேருரையாக வழங்கிய கல்யாணபுரம் ஆராவமுதன். வால்மீகி, கம்பன், ஆழ்வார் பாசுரங்கள், அருணாசல கவி, தியாகராஜர் என்று ஒரு மணி நேரத்துக்குள் எத்தனை மேற்கோள்கள்! அத்தனையையும் சொல்லி, கதையையும் விவரித்த அவர் சொல்லாற்றலுடன் இசையாற்றலும் சமமாக அமைந்திருந்தது.

● செ. சல்மான், பாம்பன்.

*? தெ.ஆ. அணித் தலைவர் குரோனியேவைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லையே...?*

! 'ஊமை ஊரைக் கெடுக்கும். பெருச்சாளி வீட்டைக் கெடுக்கும்' என்று ஒரு பழமொழி இருப்பது தெரியுமா சல்மான்? அந்தப் பழமொழி உண்மையிலேயே பேச இயலாதவர்களைக் குறிப்பிடுவதல்ல என்று இப்போது புரிகிறது!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
அஜார்,
117, எல்டாம்ஸ் சாலை,
சென்னை - 600 018.

● ரூ. 25 பரிசு பெறுபவர் :
எம். சம்பத்,
9, மாரியம்மன் கோயில் தெரு,
வேலாயுதம்பாளையம்,
கரூர் மா.வ - 639 117.

— தராசு



மிடில் கிளாஸ் என்று சொல்லிக் கொள்ளும் மௌலியின் வீடு இருக்கிற ஷோக்கு; திருக்காட்டுப்பள்ளி சந்தையில் கிட்டாரும் மாடர்ன் கேன் ஃபர்னிச்சர்களும் ஜோராக டிஸ்ப்ளே செய்யப்பட்டிருக்கும்விதம், ஃபோர்ட் கம்பெனி முதலாளி கார்த்திக் மிட்ஸ்யூஷி லான்ஸரில் வலம் வருவது; அவருடைய கம்பெனி இன்டர்வ்யூவை அட்டெண்ட் செய்ய ரோஜா மயிலாப்பூர் தெற்கு மாடவீதிக்கு வருவது (ஃபோர்டு கம்பெனியின் லேட்டஸ்ட் 'பிரான்ச்'ஐ இங்கே ஓபன் செய்திருக்கிறார்களா என்ன?) ஸ்டார்ட்டிங் லைட்டுகள் இல்லாமல் வெறும் கொடி அசைவில் ஒரு இன்டர்நேஷனல் ரேஸ் டிராக்கில் கார் ரேஸ் ஆரம்பிப்பது; சிதையில் ஏற்றப்பட்ட பிறகு ஏறக்குறைய ஒரு ஜாக்கிரதை!

பிள்ளைக்கும் மனைவிக்கும் கொள்ளி வைக்கும் இடத்தில் பாகவதர் விஜயகுமார் ஜொலிக்கிறார். ஆனால், உணர்ச்சிததும்பும் விஷயங்களைக் கூட 'லைட்'டாகச் சொல்வதுதான் பாகவதர் பாணி. இப்படி முகத்தில் ஒவ்வொரு தசையும் பேசுவது வெரி அன்நாச்சுரல்! போதாததற்கு மூன்று நாள் தாடியும் சுகவாமி அங்கவஸ்திரமும் மேல் பட்டன் திறந்து விட்ட சட்டையும் பாகவதர் தோரணையை மருந்துக்குக் கூட ஏற்படுத்தவில்லை. முகத்தை சலனமே இல்லாமல் வைத்துக்

# சந்தித்த வேளை

மாதத்திற்கு (மகன் தாயைத் தேடி வரும் வரை) அணையாமல் கொழுந்துவிட்டு எரிவது... அடேங்கப்பா அபத்த லிஸ்ட் நீண்டு கொண்டே போகிறது!

ரயிலில் ஒருவர் இறந்து கிடக்கிறார். வேலையில்லாத பட்டதாரி தற்கொலை செய்து கொண்டிருக்கிறார், வேறொன்றுமில்லை என்று போலீஸ் டிபார்ட்மெண்ட் ஸ்பாட் டெஸிஷன் எடுத்து அவரைப் பக்காவாக 'பார்ஸல் பண்ணி 'பர்ஸ்'ல் இருக்கும் 'அட்ரஸ்'க்கு பத்திரமாகக் கொண்டு சேர்க்கும் நேர்த்தி இருக்கிறதே, ப்ளூடார்ட், ப்ரொஃபெஷனல், ஃபிரான்ச் எக்ஸ்ப்ரெஸ்காரர்களே, உங்களுக்குத் தமிழ்நாடு போலீஸே ஒரு பெரிய போட்டியாக வந்துவிடும் போலிருக்கிறது.

கொள்வதும் ஒரு கலை என்றால், ரோஜா நிச்சயம் கலைஅரசிதான்!

'சிங்களப் பெண்ணே சிணுங்காதே' பாடலை சிலோன் பைலா ஸ்டைலில் செய்திருக்கிறார் தேவா. குட் அட்டெம்ப்ட்!

தொட்டதற்கெல்லாம் எமோஷனலாகி வீராவேசமாகப் பேசும் விவேக் இருக்கிறாரோ, நாமும் கொஞ்சம் சிரிக்கிறோம். இல்லாவிட்டால் சர்வம் சோகமயம்!

பி.கு: கதையென்ன என்று ஒருவரியாவது சொல்லியிருக்கலாம் என்று தோன்றுகிறதா? ஸாரி, வாசகர் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளும் உத்தேசமில்லை.

— கிருஷ்ணா சிதம்பரம்



சாப்பிடுவதற்காக ஒரு கவளம் சோற்றை நாம் கையில் எடுக்கிறபோது, அதில் நூறு பேருடைய வியர்வையாவது கலந்திருக்கிறது என்கிற உணர்வு நமக்கு வரவேண்டும். அப்போதுதான் நமக்கு இந்தச் சமூகத்தின்பால் அன்பு வரும்; அக்கறை வரும். நமக்குத் தேவையான ஒவ்வொன்றையும் தருகிற இந்தச் சமூகத் துக்கு நாம் ஏதாவது ஒருவகையில் திருப்பிச் செய்ய வேண்டும் என்கிற உணர்வு வரும்.

இந்த வகையில் நான் இந்தச் சமூகத் துக்கு என்ன திருப்பித் தர முடியும் என்று யோசித்தேன். தந்தை பெரியார், பாபாசாகேப் அம்பேத்கர், வள்ளலார் ஆகியோரிடமிருந்து நான் சாறுபோல் பிழிந்து எடுத்துக் கொண்ட விஷயம் என்ன? இந்தச் சமூகத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகள் இயற்கையானவை அல்ல. சுயநல மனிதர்களால் ஏற்பட்ட செயற்கையான ஒரு விஷயம்தான். இதைப் போக்கினால் போதும். மனித சமூகமே இன்பமாய் வாழும். இதற்கு என்னால் என்ன செய்ய முடியும்?

நான் படித்த தர்க்க

..ஏய், அடிச்சு நொறுக்குங்கடா!...

# செம்மை அடி!

பேராசிரியர் பெரியார்தாசன்

சாஸ்திரம் எனது பேச்சுக்குப் பேருதவியாய் இருக்கிறது என்பதால், யார் மனமும் புண் படாமல் என்னால் பேச முடியும். பிறர் கேட்க விரும்பாத செய்திகளைக்கூட அவர்களைக் கேட்கும்படி செய்ய முடியும். பிறர் மனத்தை மாற்ற முடியும். இதற்கு இராமாயணக் கூனி ஒரு மிகச் சிறந்த உதாரணம். "உன் மகன் பரதனை விட்டுவிட்டு, கோசலையின் மகன் இராமனுக்கு முடிசூட்டப் போகிறார்கள். உனக்குத் துன்பம் வந்து விட்டது!" என்று கைகேயியிடம் கூறுகிறாள் கூனி. அதற்குக் கைகேயி,

"பராரும் புதல்வரைப் பயக்க,
யாவரும்
உராருந் துயரை விட்டு, உறுதி
காண்பரால்;
விராரும் புவிக்கு எலாம்
வேதமே யன
இராமனைப் பயந்த எற்கு இடர்
உண்டோ?' என்கிறாள்.

"சிறந்த குழந்தைகளைப் பெற்றவர்களுக்கு உலகில் உள்ள துன்பங்களெல்லாம் துன்பங் களே இல்லை. உலகுக்கே வேதம் போன்ற இராமனைப் பிள்ளையாகப் பெற்ற எனக்கு என்ன துன்பம் வந்துவிட முடியும்?" என்கிறாள் கைகேயி.

அப்படிப்பட்ட கைகேயியின் மனத்தையே மாற்றி, இராமனைக் காட்டுக்கு அனுப்பும்படி செய்தது கூனியின் தர்க்க சாஸ்திரம்தான். எனவே, தனியொருவனான என்னால் இந்தச் சமூக பேதங்களை ஒழிக்க முடியாவிட்டாலும் குறைக்கவாவது முடியும் என்கிற எண்ணத்தில் தான் பேச்சாளனாக மாறினேன்.

ஒரு பேச்சாளனாகப் பல கூட்டங்களில் சென்று பேசிய பிறகுதான் எனக்கு இன் னொரு உண்மை புரிந்தது. நான் மட்டும் பிறர் மனம் புண்படாமல் பேசினால் போதாது. எனக்கு முன்னால் பேசுகிறவர்களுக்கும் அந்த எண்ணம் வேண்டும். இல்லையென்றால் விபரீதம்தான் என்பதற்கு வேலூரை ஒட்டி யுள்ள தோட்டப் பாளையம் என்கிற இடத்தில் நான் பேசப் போன கூட்டமே ஓர் எடுத்துக் காட்டாகும்.

**பொ**ங்கலுக்கு முதல் நாள் எனது கூட்டம் என்பதால், 'பொங்கல் என்பது ஜாதி கடந்த ஒரு திருநாள் மட்டுமல்ல; மதம் கடந்த ஒரு திருநாளும் கூட. அறுவடை மகிழ்ச்சி என் பது அனைவருக்கும் உண்டாவது. சூரியனும் அனைவருக்கும் பொதுவானது மட்டுமல்ல; அவசியமானதும்கூட என்பதால் எல்லா மதத் தினரும் பொங்கல் திருநாளைக் கொண்டாட வேண்டும்' என்றெல்லாம் பேச வேண்டும் என் கிற நோக்கத்தோடு எனது பேச்சைத் தயார் செய்து கொண்டு போயிருந்தேன்.

ஆனால், எனக்கு முன்னால் பேசிய நண்பர் ஒருவர், பெரியார்தாசன் கூட்டம் என்றால் அங்கே கடவுள் மறுப்பைக் கடு மையாகப் பேச வேண்டும் என்பதுதானே முக்கியம் என்று நினைத்து, அவர் பாட்டுக்குக் கடுமையாகப் பேச ஆரம்பித்து விட்டார்.

அந்தப் பகுதியிலுள்ள மக்களோ, மிகுந்த கடவுள் பக்தி கொண்டவர்கள். அவர்கள் சும்மா இருப்பார்களா? இப்படிப் பேசுபவர் களை அடித்து நொறுக்கிப் பாடம் கற்பித்து அனுப்ப வேண்டும் என்று நினைத்து, ஓசைப் படாமல் ரவுடிகளுக்குச் சொல்லியனுப்பி விட்டனர்.

அந்த ரவுடிகள் வந்து சேருவதற்கும் நான் எழுந்து "பெரியோர்களே! தாய்மார்களே!" என்று பேச ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந் தது. அப்புறம் என்ன! "கையில் எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டனர்!" என்று இராமன் வில்லையொடித்த கதையைக் கம்பன் வர்ணிப்பானே... அதுபோல் ஆகிவிட்டது. ரவுடிகள் என் அருகில் வந்தது தான் தெரியும்; அடித்ததே தெரியாத அளவுக்கு மின்னல் வேகத்தில் என்னைத் துவைத்துப் பிழிந்து காயப் போட்டு விட்டனர்!

நான் இப்படி அடிபட்டதைக் கேள்விப் பட்ட தி.க. பொதுச் செயலாளர் கி. வீரமணி அவர்கள் என்னை அடித்தவர்களைக் கண் டித்து, அதே இடத்தில் ஒரு கூட்டம் போட்டுப் பேசினார் என்பதில் எனக்கொரு ஆறுதல். ஏனெனில் நான் அப்போது அவர் கட்சியி லிருந்து வெளியேற்றப்பட்டிருந்தேன்.

என்றாலும் அதிலிருந்து நான் ஒரு கூட்டத் துக்கு ஒப்புக் கொள்வதற்கு முன்பு, எனக்கு முன்னால் பேசப் போகிறவர்கள் எப்படிப் பட்டவர்கள்? எப்படிப் பேசுவார்கள் என் பதையெல்லாம் தெரிந்து கொள்ள ஆரம்பித் தேன். அப்படியும் கூட என்னால் தப்பித்துக் கொண்டுவிட முடியாத ஒரு சூழ்நிலைதான் ஏற்பட்டது. எனது பெயரே எனக்கு முன்னால் சென்று என்னை ரிப்பேராக்கிவிடும் அபாய

## கனடாவில் ஓர் இந்திய முதலமைச்சர்!

**உஜ்ஜல் தோசன்ஜ், வயது ஐம்பத்து மூன்று. பிறந்தது ஜலந்தரில் ஒரு சாதாரண குடும்பத்தில். பதினேழுவயதில் பிரிட் டனுக்குப் போனார். இருபத்தியோராவது வயதில் கனடாவுக்கு! சாதாரண வேலை தான். கடுமையான முதுகுவலி காரணமாக தொழிற்சாலையில் பார்த்து வந்த பணியைத்**

மும் இருந்தது. அதற்குத் திருத்தணிக் கூட்டம் ஓர் உதாரணம்.

அங்குள்ள ஒருவர் தொடர்ந்து பதினெட்டு ஆண்டுகளுக்கு மேலாக சபரி மலைக்குச் சென்று கொண்டிருப்பவர். நான் அங்கே பேச வருகிறேன் என்றதும் சரி, நான் கடவுளைத் திட்டித்தான் பேசப் போகிறேன் என்று அவராகவே யூகித்துக் கொண்டு, என்னைத் தாக்குவதற்கு திட்டம் போட்டு விட்டார்!

நான் மேடைக்குச் சென்று அமர்ந்ததும் தற்செயலாக எனக்குப் பின்னால் அண்ணாந்து பார்த்தேன். மேலே மொட்டை மாடி. அதில் அந்த மனிதர் ஒரு பெரிய கல்லை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவரைப் பற்றி அப்போது எனக்கு எதுவுமே தெரியாது என்றாலும், நான் ஏற்கெனவே அடிவாங்கியிருப்பதால், சரி, எனக்காகத்தான் அவர் கல்லை வைத்துக் கொண்டு காத்திருக்கிறார் என்பது புரிந்து போனது. இதுபற்றி நான் வெளியே சொன்னால், கூட்டத்தில் பரபரப்பு ஏற்பட்டு கூட்டமே கலைந்து போய் விடும் என்பதால், எனது பேச்சை மிக ஜாக்கிரதையாக ஆரம்பித்தேன்.

"நான் இங்கே கடவுளைத் திட்டிப் பேசப் போகிறேன் என்று நினைத்துக் கொண்டு யாராவது இந்தக் கூட்டத்திற்கு வந்திருந்தால், அவர்களெல்லாம் தயவுசெய்து எழுந்து போய் விடலாம். நான் இங்கே பேசப் போவது மனிதர்களைப் பற்றி. நாமெல்லோரும் மகிழ்ச்சியாக வாழ்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்பது பற்றித்தான் பேசப் போகிறேன்..." என்று ஆரம்பித்துச் சிறிது நேரம் பேசிவிட்டு மீண்டும் அண்ணாந்து பார்த்தபோது, அந்த மனிதரும் அங்கே இல்லை; பாறாங்கல்லும் அங்கே இல்லை. அவரும் எனது பேச்சைக் கேட்கக் கீழே இறங்கி வந்து விட்டார். பிறகு மெல்லமெல்ல நான் கடவுளை மறுத்தும் பேச ஆரம்பித்துத் தான் கூட்டத்தை முடித்தேன்.

எனது பேச்சை முழுமையாகக் கேட்ட அவர், பிறகு எனது மிக நெருங்கிய நண்பராகி விட்டார். அவரில்லாமல் எனது வீட்டில் ஒரு விசேஷமும் நடப்பதில்லை; நானில்லாமல் அவரது வீட்டிலும் எந்த விசேஷமும் நடப்பதில்லை என்று ஆகிவிட்டது.

அது மட்டுமல்ல; அவர் இப்போது பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைகளைப் பரப்புகிற ஒரு நபராகவும் மாறி விட்டார் என்பதுதான் மேலும்



**தொடரமுடியாத சூழ்நிலை. வேலையை விட்டு விட்டு, சட்டம் படித்தார். கனடாவில், பஞ்சாப் தீவிரவாதிகளின் காலிஸ்தான் இயக்கம் வலுப்பெற்றபோது அவர்களைக் கண்டித்துக் குரல் கொடுத்தார். தீவிரவாதிகளின் தாக்குதலுக்கு ஆளானார். அரசியலில் குதித்தார். புதிய ஜனநாயகக் கட்சியில் இணைந்தார். பிரிட்டிஷ் கொலம்பியா மாநிலத்தில் தேர்தலில் போட்டியிட்டு ஜெயித்தார். இப்போது அந்த மாநிலத்தின் முதலமைச்சராகிவிட்டார்!**

**• உஜ்ஜல் தோசன்ஜ்**

சிறப்பான செய்தி. அவர் பெயர் தணிகை இராமன்.

திருவண்ணாமலை மாவட்டத்திலுள்ள தென்முடியனூர் என்கிற ஊரில் ஒரு கூட்டம். அய்யாசாமி என்பவர் என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு பேச அழைத்திருந்தார். அங்கு போன பிறகுதான் தெரிந்தது, அந்தக் கூட்டம் மாரியம்மன் பண்டிகையை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது என்று. அந்த ஊரிலுள்ள அனைவருமே ஆண்டு தோறும் சபரிமலைக்குச் செல்கிற பக்தர்கள் என்றும் அங்கு போன பிறகுதான் தெரிய வந்தது. இந்த நிலையில் அங்கு நான் என்ன பேச முடியும்? கடவுள் மறுப்பைப் பேசிவிட்டு நான் முழுசாக ஊர் திரும்ப முடியுமா?

அந்தக் கூட்டத்தில் நான் என்ன பேசப் போகிறேன் என்று எனக்கு ஏற்கெனவே அறிமுகமாகியிருந்த திராவிடர் கழக நண்பர் நாட்டுக் கோட்டையாரும் எதிர்பார்த்துக் காத்திருந்தார். அந்த நிலையில் நான் என்ன பேச முடியும்?

(தொடரும்)

**வி**டிந்ததிலிருந்து இன்று என்னவோ நம்பிக்கை. இந்தத் தொலைபேசி ஒலித்து, தன்னை அருகே அழைத்து, வாய்ப்புத் தரப் போகிறது என்று சத்யன் நினைத்துக் கொண்டான்.

முகச்சவரம் செய்து கொள்ளும் போதும், குளிக்கும் போதும், பவுடர் போட்டுக் கொள்ளும்போதும் ஒருவித சிரத்தை கூடியிருந்ததாகவே தோன்றியது. கண்ணாடியில் சின்னப் பொலிவு கூடத் தென்பட்டது.

அறை ஜன்னலைத் திறந்து வைத்து உட்கார்ந்து கொண்டான். எதிர் மாடிப் பெண்கள் தலை ஈரத்துடன் துணி உலர்த்திக் கொண்டிருந்தார்கள். வெள்ளிக் கிழமையாயிருக்க வேண்டும். நல்ல நாள்தான். இராயப்பேட்டை ஜோசியர் ஞாபகம் வந்தார். நல்ல மனிதர். கண்டிப்பாக வாய்ப்பு வரும் என்று ஒவ்வொரு முறையும் நம்பிக்கையளிப்பதுடன், சின்னச் சின்னதாகப் புதுப் பரிகாரங்கள் சொல்லியனுப்புவார். எவ்வளவு செய்ய முடிந்தது என்பது வேறு விஷயம்.

அலமாரி கதவைத் திறந்து, எண்ணெய் விட்டு விளக்கேற்றினான் சத்யன். இருக்கட்டுமே என்று இரண்டு ஊதுபத்திகளையும் கொளுத்தினான். மனம் நிறைவாயிருப்பது போலிருந்தது. அவ்வப்போது நம்பிக்கை சிதைவதும், என்றேனும் புதுசாய் உற்சாகம் பீறிடுவதையும் பார்த்துக் கொண்டிருந்தனர் அஷ்டலட்சுமிகள்.

ஏன் இப்படி முடங்கிப் போனோம் என்பது அவனுக்கே ஆச்சரியமளிக்கும் கேள்வி. ஏறி இறங்காத கம்பெனிகள் இல்லை. புன்னகையும் பவ்யமும் கும்பிடுகளும் பழக்கமானவைதான். இதற்கெல்லாம் பலனும் இருந்திருக்கிறது. சொல்லிக் கொள்ளும்படி ஐந்தாறு படங்கள் நடித்தும் ஆயிற்று. அவற்றில் இரண்டு மாநில அளவில் சிறந்த நடிகன் பரிசையும் மற்றொன்று தேசிய விருதையும் பெற்றிருக்கிறது. எல்லாப் படங்களும் குறைந்தபட்சம் ஐம்பது நாட்களுக்குக் குறைவில்லாமல் ஓடியவைதான். புரொட்யூசர்கள் நஷ்டப்பட்டதில்லை. டிஸ்ட்ரிபியூட்டர்கள் முகம் சுளித்ததில்லை. இன்றும் எங்கேனும் குக்கிராமங்களில் தன் படம் ஓடிக் கொண்டிருக்கும் என்ற நம்பிக்கை சத்யனுக்குண்டு.

இதுவரை அவன் ஒரு பெரிய ஹிட்

ஆர். வெங்கடேஷ்

கொடுக்கவில்லை. குறைந்தபட்சம் அப்படி ஹிட்டான ஒரு படத்திலும் அவனில்லை. அதுதான் பிரச்னை. வந்த வழியே காணா மலும் போய்விடும் அபாயம் அவனுக்கிருந் தது.

தாம் புறக்கணிக்கப்படுகிறோம் என்பது புரிவதற்கே கொஞ்ச நாளானது. ஒருத்தர் ஹீரோயினுக்கு அண்ணனாக நடிக்க வேண்டும் என்று கேட்டபோதுதான், சத்யன் கண்ணாடியைப் பார்த்துக் கொண் டான். மேக்கப் பாண்டியன் புன்னகைத்தார். லேசாய் தொண்டை அடைத்தது. வயசாகி யும் வலம் வரும் பல ஹீரோக்கள் ஞாபகம் வந்தனர். எப்படிச் சாத்தியமாயிற்று?

அவர்கள் எல்லோரும் பத்துப் படங் களுக்கு நடுவே ஒரு மெகா ஹிட்டேனும் கொடுத்திருப்பது உறைத்தது.

சத்யனின் முதல் படம் ஹிட்தான். சர்வீஸ் போட்ட இயக்குநர். பெரிய கம்பெனி. புதுமுகங்களை முன்னேற்றும் பேனர். படம் ஓடியது. உடன் அறிமுகமான நடிகை, தமிழகத்தின் நாடித் துடிப்பை நிர்ணயிக்கும் நிலைக்கு உயர்ந்து விட்டாள். படம் பேசப்பட்டது. காணாமல் போனவன் சத்யன் மட்டுமே.

அதே இயக்குநர் அடுத்தப் படத்திலும் கூப்பிடுவதாகச் சொன்னார். கூப்பிட வேண்டிய வேளையில், சத்யன் அவர் கண்ணில் தென்படாமல் போனது யார் துரதிர்ஷ்டம்? தெரியவில்லை.

சரிவு நிச்சயமானவுடன் முதல் காரிய மாய் சத்யன் திருமணம் செய்து கொண் டான். கூடவே டிஸ்ட்ரிப்யூஷனிலும் இறங்கி விடுவது என்று தீர்மானித்தான். இரண்டும் பேராசைகள் என்று விளங்க அதிகக் காலமாகவில்லை. எத்தனை நாள்தான், என் வீட்டிலேயே வைத்துச் சோறு போடுவது என்று மாமனார் கேட்டார். சோறு போட வக்கில்லையென்றால், உனக்கெதற்குத் திருமணம் என்று கேட்டார் அப்பா. கனவு கள் கைநழுவின தருணம் அது.

பொருளாதாரமும் கைநழுவியது அதே சமயத்தில்தான்.

எல்லோரும் வெளிறிச் சிரிக்க, ஆதரவாய் புன்னகைத்தவர் டச்சப் பாண்டியன்தான்.

"தெரிஞ்சத மட்டும் செய் யுங்கண்ணே. தெரியாத



தெல்லாத்திலயும் ஏன் கால் வெக்கறீங்க? நடிங்க. அது போதும். அண்ணனோ, மாமனோ, மச்சானோ. என்னவோ ஒண்ணு. கையில காசு வருதான்னு பாருங்க. போதும். அகலக்கால் வெச்சு ஏன் அழிஞ்சு போறீங்க?"

வார்த்தைகள் வேதமாயிருந்தன. நிலையுணர்த்தின. அப்புறம்தான் இந்த அறை. ஜோசியம். நம்பிக்கை எல்லாம்.

மீள்வதற்குள் எல்லாம் சிறுத்துப் போயின. சௌகரியங்கள், கனவுகள், அறை மற்றும் மானம் போன்றவை.

சுயபரிசிலனை என்பது அப்போதுதான் தோன்றியது. தன் எல்லைகளும், முடியும் முடியாதுகளும் தெளிவாயின. முடியும்களை விட முடியாதுகளின் பட்டியல் தொடர்ந்து கொண்டேயிருந்தன. நிலைமை விளங்கிய போதுதான், இன்னொரு விஷயமும் புரிய வந்தது.

தன்னை யாருமே நடிக்கக் கூப்பிடவில்லை என்ற உண்மை. மிக நாசூக்காய், 'சொந்த புரொடக்ஷன் இருக்குதே, டிஸ்டிரிபூஷன் பண்றீங்க இல்ல' என்று கழற்றிவிடத் தொடங்கினார்கள்.

அப்போதுதான் இந்தத் தொலைபேசி சிநேகமானது.

எவரையும் கூப்பிட முடியாமல் போன அவஸ்தையும், கூப்பிட்டாலும் நழுவி விலகும் சாமர்த்தியங்களும் தொலைபேசியிலேயே சாத்தியமாயின. மிஞ்சிப் போனால் ஒன்றிரண்டு பத்திரிகையாளர்கள், நண்பர்கள்.

பட்டினியால் செத்தாலும் ஏனென்று கேட்காத சுற்றம்.

**ப**ட்டென காற்றில் ஜன்னல் கதவு அறைந்து மூடிக் கொண்டது. விழித்துக் கொண்டான் சத்யன். இப்படி மோட்டு வளையைப் பார்த்து யோசிப்பதும் இப்போதெல்லாம் பழக்கமாகி விட்டது. அல்லது தூரத்துக் கட்டடங்கள், எதிர்மாடிப் பெண்கள் என்று மனம் போல் அறையும் உள்ளுக்குள் சுருங்கிப் போய் விட்டது.

ஏற்றி வைத்த விளக்கு அணைந்து விட்டது. திரி புகையும் வாடை.. அதற்கு முன்னரே, ஊதுபத்தி முடிந்து விட்டது. சுற்றிப் பார்க்க, அறையே இருண்டு கிடப்பது போல் இருந்தது. இத்தனைக்கும் ஜன்னல் வெளிச்சம் முந்திக் கொண்டு மோதுகிறது. எல்லாம் ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது.

நடிப்பு என்பதே என்ன? இதுவரை தெரியாமல்தான் நடித்திருக்கிறோம் என்பது விளங்கியது. இயக்குநர் சொல்வதை எல்லாம் அப்படியே பிரதிபலித்து வந்திருப்பது புரிந்தது. தனக்கான பாணி, தனக்கான முறையென்றெல்லாம் யோசித்ததேயில்லை. ஈடுபாடு இருந்திருக்கிறது. ஆனால் ஏன் வெற்றியில்லாமல் போனது? முகம், ராசி, சுழி, அதிருஷ்டம் – இதற்



"ஏன் அந்த ரவுடியை அரெஸ்ட் பண்றாங்க?"

"உழவர் சந்தைல தரகர்கள் குறுக்கீடு இல்லாம நாங்களே தயாரிச்ச சாராயம் எடுத்துட்டு வந்து விக்கலாமான்னு கேட்டானாம்!"

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

கெல்லாம் ஏதேனும் உண்மையிலேயே அர்த்தம் உண்டோ?

அப்படியென்றால், இதுநாள்வரை தான் நடித்ததெல்லாம் வியர்த்தமா?

எண்ணமே சகிக்க முடியாமலிருந்தது. சட்டென எழுந்து சட்டை மாட்டி, வெளிக் கிளம்பினான். மேன்ஷனின் புழுக்க நெடியும், புகைமூட்டமும், வெக்கையும் உணர்வுகளை உறிஞ்சுவதாயிருந்தது. வெறும் பனியன்களும் ஜட்டிகளும் கைலிகளும் கொடிகளெங்கும். மருந்துக்கும் பசுமையில்லை.

"தலைவருக்கு மட்டும் சிலை வெச்சா பந்தாவா இருக்காதே!"
— எஸ். எஸ். பூங்கதிர்

வழக்கமாய் வாசல் அருகே இருக்கும் தபால் பெட்டியைத் துழாவ, ஒன்றுமில்லை. யாரும் தொடர்பு கொள்ளக் கூடத் தகுதியற்றுப் போய்விட்டோமோ? இருக்கலாம். தொடர்புகளை ஒழுங்காகப் பேணிக் காத்திருக்க வேண்டும். யாருக்கும் மரியாதைக்கும் பதில் எழுதியதில்லை. உள்ளூரப் புரண்ட சோம்பேறித்தனம்தான் காரணம் என்று இப்போது புரிகிறது. முட்டி மோதிப் போராடி, முன்னுக்கு வருவதையே மோகமாகச் செய்திருக்க வேண்டும்.

செய்யாமல் இல்லை. ஆனால் வெற்றி எப்போதும் போல் எட்டாக்கனியே. என்ன தான் சமாதானப் படுத்திக் கொண்டாலும் வெற்றி இல்லையென்றாகி விட்டது.



**க**ற்பகம் விலாஸில் உட்கார்ந்து கொண்டான். வழக்கமான சர்வர். வெறுமனே தலையாட்ட, புரிந்தவன் போல் போய் அவன் இரண்டு இட்லியும் வடையும் கொண்டு வந்து வைத்தான். தண்ணீர் வைக்க வந்த பையன் தயங்கி நிற்பதை சத்யன் பார்த்தான். என்னவென்பது போல் புருவம் உயர்த்த,

"நீங்க 'அக்கா' ஹீரோதான சார்?"

"ஆமா."

"சூப்பர் படம் சார். எங்கவூர்ல பார்த்தேன் சார்..."

அவன் மகிழ்ச்சியும் விரிந்த சிரிப்பும் சத்யனைத் தொற்றிக் கொள்ள, "எந்த ஊர்ப்பா?"

"வேலூர் பக்கம் சார். இப்ப என்ன படம் நடிக்கிறீங்க?"

சட்டென பழைய பொய்கள் எல்லாம் ஞாபகம் வர, "பேச்சு வார்த்தை நடக்குது தம்பி. சொல்றேன்."

சின்னப் பெருமிதம் போல் என்னவோ. ஓட்டலை விட்டு வெளிவரும் வரை, அந்தப் பையன் தன்னையே பார்ப்பது போன்ற பிரமை சத்யனுக்கிருந்தது. அறைக்கு வந்த போது, அந்தத் தொலைபேசி ஒலித்து, தனக்கு வாய்ப்புத் தரப் போகிறது என்ற நம்பிக்கை ஏனோ மீண்டும் தொடர்ந்தது. ●



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு **(80G, Income Tax Excemption)** உண்டு

**S.V. HOME FOR AGED**

#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; 475 1356. Pager : 9610 - 114668
Web Page : http/www.chennaibiz.com/svhome
Email: svhome@chennaibiz.com

## "5 வருட இடுப்பு வலியிலிருந்து ஆப்ரேஷன் இன்றி குணமடைந்தேன்!!!"



Lakshmi Iyer

ஸ்ரீமதி. லஷ்மிஐயர்,
மேட்டூர்டேம் R.S.,
சேலம் மாவட்டம்,
தமிழ்நாடு.

கடந்த ஐந்து வருடங்களாக இடுப்பில் வலி இருந்து வந்தது. இதனால் குனிந்து நிமிரும் பொழுதும், சிறிது தூரம் நடக்கும் பொழுதும், உட்கார்ந்து எழுந்திருக்கும் பொழுதும், மாடிப்படி ஏறி இறங்கும்பொழுதும் , பிடிப்புடன் கூடிய வலி இருந்தது. ஆங்கில மருத்துவரிடம் சென்று **C.T. Scan** எடுத்துப் பார்த்த போது, இடுப்பில் கடைசி இரண்டு எலும்புகள் விலகி இருப்பதாக கூறினார்கள் **(L4, L5, DISC PROLAPSE)** இதற்கு சில மருந்துகளையும், இடுப்பில் போட்டு கொள்வதற்கு **Belt**-ம் எழுதிக் கொடுத்தார்கள். இருப்பினும் வலி நிற்கவில்லை. பின்பு ஆப்ரேஷன் **(Operation)** செய்தால் குணமடையும் என்று கூறினார்கள் அப்பொழுது **"MARC HERBAL CARE(P)LTD."** நிறுவனத்தின் விளம்பரத்தை செய்தித்தாள்களில் கண்டு நானும் எனது கணவரும் அங்கு சென்றோம். டாக்டரின் ஆலோசனைபடி அவர்கள் கொடுத்த மூலிகை பவுல்டிசை (Poultice) வெளிப்பிரயோகமாக தினமும் தவறாமல் தடவி வந்தேன். 9 வார தொடர்ச்சியான சிகிச்சைக்குப் பிறகு தற்பொழுது எனது வலிகள் அனைத்தும் நீங்கி பரிபூரண நிவாரணம் அடைந்தேன். நன்றி.

★ காலம் காலமாக வேதமகரிஷிகள் சித்தர்கள் கண்டுபிடித்து பரிசோதித்து அனுபவப்பட்டு வெற்றிகண்ட ஆயுர்வேத மூலிகை மருத்துவமுறைப்படி எங்களது நிறுவனம் ஒரு வெளிப்பிரயோக மூலிகை பவுல்டிசை (Poultice) கொண்டு ஆர்த்திரைட்டிஸ், ஸ்பாண்டிலைட்டிஸ், தோள்பட்டை வலி, முதுகுவலி, குதிக்கால்வலி, கைகால் மூட்டுவலி ஆகியவைகளுக்கு தகுதிவாய்ந்த அனுபவம் மிக்க ஆயுர்வேத, சித்தா மற்றும் அலோபதி மருத்துவர்களின் மேற்பார்வைகளின் கீழ் சிகிச்சை அளித்து வருகிறோம்.

★ ஒரு வரைப்போல் மற்றொருவரது உடல்வன்மை இருப்பது இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை எனவே கால மாற்ற விளைவுகளால் மனிதனின் உடல்வன்மையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம் என்பதை **MARC HERBAL CARE (P) LTD** நன்கு உணர்ந்துள்ளன.

கலந்து ஆலோசிக்க
இப்போதே
தொடர்பு கொள்க.
தொலைபேசி
**0413-346683**

காலை 9 மணி முதல், இரவு 7 மணி வரை
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

**MARC** ஹெர்பல் கேர் (பி) லிமிடெட்

32, செயின்ட் தெரெஸ் வீதி, பாண்டிச்சேரி – 1
(ராமன் தியேட்டர் எதிர் வீதி, ஃபார்ச்சூன் பேக்கரி எதிரில்)
**Fax : 91 - 0413 - 346683**



# பொன்னியின் செல்வன்



## நாற்பத்து ஒன்றாம் அத்தியாயம்

## கரிகாலன் கொலைவெறி

ஆதித்த கரிகாலன் தான் வேட்டையாடச் சென்று வெகு காலமாயிற்று என்றும், வில் வித்தையையே மறந்து போயிருக்கக்கூடும் என்றும் சொன்னான் அல்லவா? அன்று அவன் வீர நாராயண ஏரிக்கரைக் காட்டில் வேட்டையாடியதைப் பார்த்தவர்கள் அவ்விதம் எண்ணவில்லை. அவனுடைய வில்லிலிருந்து கிளம்பிய அம்புகளுக்கு அன்று எத்தனையோ காட்டு மிருகங்கள் இரையாயின. முயல்களும் மான்களும் கரடிகளும் சிறுத்தைகளும் செத்து விழுந்தன. விலங்கு எதுவும் கண்ணில் படாதபோது வானத்தில் பறந்த பறவைகள் மீது அவனுடைய அம்புகள் பாய்ந்தன. பருந்துகளும் இராஜாளிகளும் அலறிக்கொண்டு தரையில் விழுந்தன. கரிகாலனுடைய கொலை வெறி நேரமாக ஆக அதிகமாகிக்கொண்டிருந்தது. அவனுடன் சென்றவர்களுக்கு அதிக வேலை இருக்கவில்லை. குதிரைகளும் மனிதர்களும் கூட்டமாக இரைச்சலிட்டுக் கொண்டு சென்றதில் காட்டு மிருகங்கள் தத்தம் இடத்திலிருந்து கிளம்பிச் சிதறி ஓடின. மற்றவர்கள் வேட்டையில் செய்த உதவி அவ்வளவேதான். கரிகாலன் மீது பாய வந்த மிருகங்கள் மீது மற்றவர்கள் அம்பு விடுவதையும் வேலை எறிவதையும்கூடக் கரிகாலன் அனுமதிக்கவில்லை. கந்தமாறன் ஒரு தடவை அவ்வாறு கரிகாலன் மீது

**அமரர் கல்கி**

பாய்ந்து வந்த கரடியின் பேரில் அம்பு எய்தான். அப்போது கரிகாலன் அவன் பக்கம் திரும்பிப் பார்த்து, "கந்தமாறா! நீ கரடியைக் கொல்லப் பார்த்தாயா? என்னைக் கொல்ல முயன்றாயா?" என்று கேட்டான். கந்தமாறன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. பிறகு அவன் வில்லை வளைக்கவே இல்லை.

ஏறக்குறைய சூரியன் உச்சிவானத்தை அடைந்த சமயத்தில் எல்லாரும் களைத்துப்போனார்கள். சற்று ஓய்வு எடுத்துக்கொண்டு வீடு திரும்பலாமே என்ற யோசனை எல்லாருடைய மனத்திலும் தோன்றியது. ஆனால் கரிகாலனோ களைத்துப் போன குதிரையை மேலும் காட்டு வழிகளில் செலுத்திக்கொண்டு போனான்.



காலை நேரத்திலெல்லாம் கந்தமாறன் கரிகாலனையொட்டிப் போய்க்கொண்டிருந்தான். "என்னைக் கொல்லப் பார்த்தாயா?" என்று கரிகாலன் அவனைக் கேட்ட பிறகு கந்தமாறன் பின்னால் தங்கிப் பார்த்திபேந்திரனுடன் சேர்ந்துகொண்டான். அவனிடம் இளவரசரின் முரட்டுத்தனமான நடத்தையையும் பேச்சையும் பற்றிக் குறை கூறத் தொடங்கினான். பார்த்திபேந்திரன் அதற்குச் சமாதானம் கூற முயன்றான்.

இந்தச் சமயம் பார்த்து வந்தியத்தேவன் கரிகாலனை அணுகினான். பிறகு அவர்கள் இருவருமே சேர்ந்து முன்னால் சென்றுகொண்டிருந்தார்கள். வந்தியத்தேவன் வில்லும் அம்பும் எடுத்து வரவில்லை. அவனுக்கு வில்வித்தை அவ்வளவாகப் பழக்கமும் இல்லை. கையில் வேல் மட்டுந்தான் கொண்டு வந்திருந்தான். ஆகையால் கரிகாலனுடைய வேட்டையில் குறுக்கிடாமல் அவன் ஜாக்கிரதையாகச் சென்று வந்தான். ஏதாவது அபாயம் நேருவதாக இருந்தால் வேலை உபயோகிப்பதற்கு மட்டும் எச்சமயமும் ஆயத்தமாகப் போய்க்கொண்டிருந்தான். அதற்கு அவசியம் உச்சி நேரம் மட்டும் ஏற்படவில்லை.

கந்தமாறன் பார்த்திபேந்திரனிடம் "இன்றைக்கு

இவ்வளவு வேட்டை ஆடியது போதாதா? இன்று ஒரு நாளிலேயே இந்தக் காட்டிலுள்ள விலங்குகளை எல்லாம் கொன்று தீர்த்து விடுவார் போலிருக்கிறதே? இவருடைய வேட்டை வெறி தணிவதற்குக் கொல்லிமலைக்குத்தான் போக வேண்டும். 'இன்றைக்குப் போதும்; வீடு திரும்பலாம்' என்று சொல்லுங்கள்!'' என்று கூறினான்.

அதற்குப் பார்த்திபேந்திர பல்லவன், ''தம்பி! இளவரசரின் உள்ளத்தில் ஏதோ கொந்தளித்துக்கொண்டிருக்கிறது. ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை விட்டுக் கொடுத்து விடுவது என்றால் இலேசான காரியமா? அந்த ஆத்திரத்தையெல்லாம் வேட்டையில் காட்டுகிறார். அதுவரையில் நல்லதுதான். இல்லாவிடில் உன் மீதும் என் மீதும் காட்டுவார். அவராகச் சலிப்புற்றுப் 'போதும்' என்று சொல்லட்டும். நாம் தலையிட வேண்டாம்'' என்றான்.

இந்தச் சமயத்தில் அந்த வனம் வனாந்தரமெல்லாம் நடுங்கும்படியான உறுமல் சத்தம் ஒன்று கேட்டது.

கந்தமாறன் முகத்தில் பீதியின் அறிகுறி காணப்பட்டது. ''ஐயோ! காட்டுப் பன்றி! இளவரசரை நிற்கச் சொல்லுங்கள்!'' என்றான்.

''காட்டுப்பன்றிக்கு என்ன அவ்வளவு பயம்? புலி, கரடியெல்லாம் இளவரசரிடம் பட்ட பாட்டில் பன்றி எந்த மூலை?'' என்றான் பார்த்திபேந்திரன்.

''நீங்கள் தெரியாமல் சொல்லுகிறீர்கள். இந்தக் காடுகளில் உள்ள பன்றிகள் புலி கரடிகளைச் சின்னாபின்னமாக்கி விடும்! யானையை முட்டிக் கீழே தள்ளிவிடும்! குதிரைகள் இலட்சியமே இல்லை. அம்பும் வேலும் காட்டுப் பன்றியின் தோலிலே பட்டுத் தெறித்து விழுமே தவிர அதன் உடலுக்குள்ளே போகாது...! ஐயா! ஐயா! நில்லுங்கள்!'' என்று கந்தமாறன் கூச்சலிட்டான்.

அதேசமயத்தில் காட்டுப்புதர்களிலே ஒரு சிறிய சுழற்காற்று அடிப்பது போன்ற அல்லோலகல்லோலம் ஏற்பட்டது. மறுநிமிடம் குட்டி யானைகளைப் போன்ற கரிய பெரிய உருவம் வாய்ந்த இரண்டு காட்டுப் பன்றிகள் வெளிப்பட்டன. அவை ஒரு கண நேரம் நின்று குதிரைகளையும் அவற்றின் மீது வந்தவர்களையும் உற்றுப் பார்த்தன.

கந்தமாறன் ''ஜாக்கிரதை ஐயா! ஜாக்கிரதை!'' என்று கூச்சலிட்டான்.

பின் தொடர்ந்து வந்த வேட்டைக்காரர்களில் சிலர் இதற்குள் அங்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். அவர்கள் தாரை தப்பட்டைகளைப் பிராணன் போகிற அவசரத்துடன் முழக்கிக்கொண்டு ''கா கூ'' என்று கூச்சலிட்டார்கள்.

அந்தப் பன்றிகள் என்ன நினைத்துக் கொண்டனவோ, என்னமோ தெரியவில்லை. ஒருவேளை அவற்றின் குட்டிகளை நினைத்துக்கொண்டிருக்கலாம். குட்டிகளுக்கு ஆபத்து வராமல் தடுக்க வேண்டுமென்ற உணர்ச்சியினால் தூண்டப்பட்டிருக்கலாம். அல்லது தாரை தப்பட்டைகளின் சத்தத்தைக் கேட்டு மிரண்டிருக்கலாம். பன்றிகள் இரண்டும் வெவ்வேறு திசையை நோக்கிப் பிய்த்துக்கொண்டு ஓடத்தொடங்கின.

கந்தமாறன் அதைப் பார்த்துவிட்டு, ''கோமகனே! அவை போய்த் தொலையட்டும். ஐந்தாறு வேட்டை நாய்கள் இல்லாமல் ஒரு காட்டுப் பன்றியைத் துரத்திக் கொல்ல முடியாது!'' என்றான்.

கரிகாலன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் வில்லை வளைத்து அம்பை விட்டான். அது ஒரு பன்றியின் முதுகில் போய்த் தைத்ததைப் பார்த்து விட்டு இளவரசன், ''ஆஹா!'' என்று உற்சாக கோஷம் செய்தான். அடுத்த கணத்தில் அந்தப் பன்றி உடம்பை ஓர் உலுக்கு உலுக்கியது. அம்பு தெறித்துக் கீழே விழுந்தது; பன்றி மேலே ஓடியது.

கந்தமாறன் அப்போது சிரித்த சிரிப்பில் ஏளனத்தின் தொனி தெரிந்தது. கரிகாலன் அவனைப் பார்த்து, ''கந்தமாறா! எங்கே ஒரு பந்தயம்! நானும் வந்தியத்தேவனும் அந்தப் பன்றியைத் தொடர்ந்து போய் அதைக் கொன்று எடுத்துக்கொண்டு வருகிறோம். நீயும் பார்த்திபேந்திரனும் இன்னொரு பன்றியைத் துரத்திப் போய்க் கொன்று எடுத்து வாருங்கள்! இந்தப் பன்றிகள் இரண்டையும் கொல்லாமல் அரண்மனைக்குத் திரும்பக்கூடாது!''

என்று சொல்லிக்கொண்டே குதிரையைத் தட்டிவிட்டான். வந்தியத்தேவனும் அவனுடன் சென்றான்.

அவர்கள் தொடர்ந்து சென்ற காட்டுப் பன்றி எந்தத் திசையில் எந்த வழியாகப் போய்க் கொண்டிருக்கிறதென்பது கொஞ்ச நேரம் வரையில் தெரிந்துகொண்டிருந்தது. ஏனெனில் பன்றி சென்ற வழியிலிருந்த செடி கொடிகளும் புதர்களும் அந்தப் பாடு பட்டிருந்தன. பின்னர் ஒரு சிறிய கால்வாய் குறுக்கிட்டது. அது காட்டில் பெய்யும் மழைத் தண்ணீரை ஏரியில் கொண்டு வந்து சேர்க்கும் கால்வாய். அவ்விடத்துக்கு வந்த பிறகு பன்றி எந்தப் பக்கம் போயிற்று என்று கண்டு பிடிக்க முடியவில்லை. கால்வாயைக் கடந்து அப்பாலுள்ள காட்டுக்குச் சென்றதா? கால்வாய் ஓரமாக இந்தப் பக்கமாகவோ, அந்தப்

பக்கமாகவோ சென்றதா என்பதை அறிய முடியவில்லை.



அச்சமயம், கால்வாயின் வழியாகத் தெரிந்த ஏரியின் விசாலமான நீர்ப்பரப்பில் தெரிந்த ஒரு காட்சி அவர்களுடைய கவனத்தைக் கவர்ந்தது. படகு ஒன்று வந்துகொண்டிருந்தது. அதிலிருந்தவர்கள் பெண் மணிகள் என்றும் அறியக் கூடியதாயிருந்தது. ஆனால், அவர்கள் யார் என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. வந்தியத்தேவனும் கரிகாலனும் அச்சமயம் இருந்த இடத்தை நோக்கியே படகு வருவதாக முதலில் காணப்பட்டது. பிறகு திசை சற்றுத் திரும்பி, ஏரிக் கரையோரமாக இருந்த இன்னொரு தீவை நோக்கிச் சென்று படகு மறைந்து விட்டது.

"வல்லவரையா! படகில் வந்தவர்கள் யாராயிருக்கும்? பெண்மணிகள் போலத் தோன்றினார்கள் அல்லவா?" என்றான் கரிகாலன்.

"பெண்கள் போலத்தான் தோன்றியது. அதற்கு மேல் எனக்கும் தெரியவில்லை" என்றான் கரிகாலன்.

"ஒருவேளை சம்புவரையர் வீட்டுப் பெண்களாயிருக்குமோ?"

"இருந்தாலும் இருக்கலாம். ஆனால் அவர்கள் ஏன் இவ்வளவு தூரம் வர வேண்டும்?"

"ஆமாம்; அவர்களாயிருக்க முடியாதுதான்... காலையில் பழுவேட்டரையர் புறப்பட்டுப் போய் விட்டார் அல்லவா? நிச்சயந்தானே?"

"நிச்சயந்தான், ஐயா! அரண்மனை வாசல் திறப்பதையும் அவர் யானை மீது வெளியே போவதையும் நானே பார்த்தேன்."

"அவர் மட்டுந்தான் போனாரா?"

"ஆமாம்; கிழவர் மட்டுந்தான் போனார். இளையராணி போகவில்லை."

"அந்தக் கிழவரைப் போன்ற வீராதி வீரனை எங்கே பார்க்கப் போகிறோம்? என் பாட்டனார் மலையமானைக் கூடப் பழுவேட்டரையருக்கு அடுத்த படியாகத்தான் சொல்ல வேண்டும்..."

"ஐயா! அந்தக் கிழவர்களைப் பற்றியெல்லாம் பிறர் சொல்லித்தான் கேட்டிருக்கிறேன். தங்களுடைய வீரத்தைப் போர்க்களத்தில் நேரில் பார்த்திருக்கிறேன். கடம்பூர் அரண்மனையிலும் பார்த்தேன். கிழவர்கள், குமரர்கள் எல்லாரையும் எப்படி நடுநடுங்க அடித்துக்கொண்டிருந்தீர்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

"அது உண்மைதான். ஆனால் எதற்காக அவ்வளவு தடபுடல் செய்தேனோ, அந்தச் சந்தர்ப்பம் நெருங்கி வந்திருக்கும்போது எனக்கு உள்ளமும் உடலும் நடுங்குகின்றன. என்னைப் போன்ற பயங் கொள்ளிக் கோழையை இந்தச் சோழ நாட்டிலேயே காண முடியாது...!"

"இளவரசே! இன்று காட்டில் வேட்டையாடியபோது அப்படித் தாங்கள் பயந்து நடுங்கியதாகத் தெரியவில்லையே? வனவிலங்குகள், பட்சிகள், பின்னோடு வந்தவர்கள் எல்லாரையும் அல்லவா நடுநடுங்கச் செய்தீர்கள்?"

"இவையெல்லாம் ஒரு தைரியத்தில் சேர்ந்ததா? கேவலம் ஒரு வேட்டை நாய் வேங்கைப் புலி மீது பாய்ந்து கொல்லுகிறது. காட்டுப்பன்றி மத யானையோடு சண்டைக்குப் போகிறது. வேட்டையாடும் தைரியம் ஒரு தைரியமா? வல்லவரையா! கேள்! நான் செய்த சூழ்ச்சி பலித்துவிட்டது. பழுவேட்டரையர் நந்தினியைத் தனியாக விட்டுவிட்டுச் சென்றுவிட்டார். ஆயினும் அவளைத் தனிமையில் பார்த்துப் பேசுவதைப் பற்றி எண்ணினால் எனக்குப் பீதி உண்டாகிறது" என்றான் ஆதித்த கரிகாலன்.

"ஐயா! அதற்குக் காரணம் உண்டு. இத்தனை காலமும் பழுவூர் இளைய ராணியைப் பற்றி ஒருவிதமாக எண்ணியிருந்தீர்கள். இப்போது அவர் தங்கள் சகோதரி என்பதை அறிந்திருக்கிறீர்கள். அவரோ தங்கள் குலத்தையே அழித்து விட விரும்பும் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களோடு சேர்ந்துகொண்டிருக்கிறார். இதையெல்லாம் அவரிடம் சொல்லுவது கஷ்டமான காரியம்தான். எனக்கே அதற்கு ஒரு சந்தர்ப்பம்

கிடைத்தும் என்னால் சொல்ல முடியவில்லையே...''

''நண்பா! நீ அறிந்து வந்து கூறிய செய்தி ஒவ்வொன்றும் திடுக்கிடச் செய்வதாகவே இருக்கிறது. இன்னமும் என்னால் நம்பமுடியவில்லை. ஆனால் சிற்சில பழைய விஷயங்களை யோசித்துப் பார்த்தால், உண்மையாக இருக்கலாம் என்றும் தோன்றுகிறது. எனக்கும் அவளுக்குமிடையில் எப்போதும் ஒரு மாயத்திரை இருந்து வந்தது. பழையாறை பெரிய பிராட்டியார் - செம்பியன் மாதேவியார் - நந்தினியுடன் நான் சகவாசம் வைத்துக் கொள்ளக் கூடாது என்று அந்த நாளில் வற்புறுத்திச் சொன்னார். ஆனால் உண்மை முழுதையும் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் இவ்வளவெல்லாம் நேர்ந்திராது...''

''செம்பியன் மாதேவிக்கு முழு உண்மையும் தெரிந்திராமலிருக்கலாம். யாரோ அநாதை ஊமை ஸ்திரீ பெற்றுப் போட்டு விட்டுப் போன பெண் என்று மட்டும் அறிந்திருக்கலாம். சுந்தர சோழரின் மகள் பழுவூர் இளையராணி என்பது ஒரு வேளை தெரியாமலிருக்கலாம்.''

## நாற்பத்து இரண்டாம் அத்தியாயம்

# "அவள் பெண் அல்ல!"



ளவரசன் கரிகாலன் சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தான். இளம்பிராயத்து நினைவுகள் அவன் உள்ளத்தில் அலை அலையாக மோதிக்கொண்டு தோன்றி, குமுறிக் கொந்தளித்து விட்டுப் பிறகு வேறு நினைவுகளுக்கு இடங் கொடுத்து விட்டு மறைந்தன.

அந்த நினைவு அலைகளைப் பலவந்தமாகத் தடுத்து நிறுத்தி ஒரு தீர்க்கமான மூச்சு விட்டு விட்டுக் கரிகாலன் கூறினான்:-

''போனதைப் பற்றி இப்போது பேச வேண்டாம். நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசலாம். அதற்காகவே உன்னைத் தனியாக அழைத்து வந்தேன். பந்தயத்தில் நாம் தோற்று விட்டோம். பன்றி போய் விட்டது. இனி என்ன செய்வது, எப்படிச் செல்வது என்று யோசித்து முடிவு செய்யலாம். வல்லவரையா! நந்தினியிடம் அவளுக்கும் எனக்கும் உள்ள உறவை எப்படிச் சொல்வதென்று நினைத்தாலே எனக்குப் பீதி உண்டாகிறது. அவள் முகத்தை நன்றாக நிமிர்ந்து பார்க்கக்கூட என்னால் முடியவில்லை. தப்பித் தவறிப் பார்க்கும்போதெல்லாம், வீர பாண்டியனுடைய உயிருக்காக அவன் மன்றாடியபோது எப்படி முகத்தை வைத்துக்கொண்டாளோ, அப்படியே வைத்துக்கொள்கிறாள். அவளுடைய பார்வை என் நெஞ்சை வாள் கொண்டு அறுப்பது போலிருக்கிறது. என் சகோதரி வீர பாண்டியன் மீது காதல் கொண்டு அவன் உயிருக்காக என்னிடம் மன்றாடினாள் என்பதை நினைத்தாலே என் நெஞ்சு உடைந்து விடும் போலிருக்கிறது. வல்லவரையா! உன் கருத்து என்ன? இன்னமும் அவளுக்கு உண்மை தெரியாது என்றா நினைக்கிறாய்? அவள் சுந்தர சோழரின் மகள் என்றும், எங்களுக்கெல்லாம் சகோதரி என்றும் அறிய மாட்டாள் என்றா கருதுகிறாய்?''

''கோமகனே! இவையெல்லாம் தெரிந்திருந்தால், இன்னமும் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுடன் சேர்ந்திருப்பாரா? சோழ குலத்துக்கு விரோதமாக ஒரு சிறு பிள்ளையைச் சிம்மாசனத்தில் அமர்த்திப் பாண்டிய நாட்டு மன்னனாகவும் சோழ சாம்ராஜ்ய சக்கரவர்த்தியாகவும் மணி மகுடம் சூட்டியிருப்பாரா? அந்த மணி மகுடத்தைத் தாங்கி நிற்பதாகக் கையில், கத்தி ஏந்திச் சபதம் செய்திருப்பாரா? இவையெல்லாம் திருப்புறம்பயம் பள்ளிப் படையருகில் நள்ளிரவில் நடந்ததை

நானே பார்த்தேன்..."

"இவ்வளவையும் பார்த்த உன்னை நந்தினி உயிரோடு விட்டு விட்டதை நினைத்தால் வியப்பாயிருக்கிறது."

"ஐயா! எனக்கு அதில் வியப்பு இல்லை. பெண் உள்ளத்தில் இயற்கையாகக் குடி கொண்டுள்ள இரக்கம் காரணமாயிருக்கலாம் அல்லவா?"

"வல்லவரையா! நீ உலகமறியாதவன். பெண் உள்ளத்தில் குடி கொண்டுள்ள வஞ்சமும் வஞ்சனையும் இத்தகையவை என்பது உனக்குத் தெரியாது. என்ன நோக்கத்துடன் உன்னை அவள் உயிரோடு விட்டாள் என்பதை நான் அறியேன். ஆனால் என்னை எதற்காக ஓலை அனுப்பி வரவழைத்தாள் என்பது என் அந்தரங்கத்துக்குத் தெரிந்திருக்கிறது."

"இளவரசே! அது என்ன காரணமாயிருக்கும்!"

"என்னைக் கொன்று வீர பாண்டியனுக்குப் பழிக்குப் பழி வாங்குவதற்காகத்தான் வரவழைத்திருக்கிறாள்..."

"ஐயா! அப்படி ஏதாவது விபரீதம் நேர்ந்துவிடப் போகிறதென்று எண்ணித்தான் இளையபிராட்டியும் முதன்மந்திரியும் என்னை அவசரமாக அனுப்பி வைத்தார்கள். ஆனால் அவர்கள் கடம்பூருக்குப் போக வேண்டாம் என்று சொன்னதைத் தாங்கள் கேட்கவில்லை..."

"வல்லவரையா! இளையபிராட்டியும் முதன் மந்திரியும் மிக மிக அறிவாளிகள்தான். ஆனால் விதியை அவர்களால் கூடத் தடுக்க முடியாது அல்லவா? அருள்மொழி வர்மனைப் பற்றிச் சோதிடர்கள் சொல்லியிருப்பதையெல்லாம் உண்மையாக்குவதற்காகவே விதி என்னை இங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறதோ, என்னமோ, யார் கண்டது? வல்லவரையா! கந்தமாறன் என் பின்னாலிருந்து அம்பை விட்டானே? உண்மையில் அவன் கரடியைக் குறி பார்த்து விட்டானா? என்னைக் குறி பார்த்து விட்டானா? நீ கவனித்தாயா?"

"நான் கவனிக்கவில்லை, ஐயா! ஆனால் கந்தமாறன் அத்தகைய துரோகம் செய்யக்கூடியவன் என்று நான் ஒரு நாளும் ஒப்புக் கொள்ளமாட்டேன். வீட்டுக்கு வந்த விருந்தாளியை, அதிலும் சக்கரவர்த்தியின் குமாரனைப் பின்னாலிருந்து அம்பு எய்து கொல்லக் கூடியவனா கந்தமாறன்? அவனுடைய அறிவுக் கூர்மையைப் பற்றி எனக்கு அவ்வளவு உயர்ந்த அபிப்பிராயம் இல்லைதான். முதுகில் குத்தப்பட்டு உணர்வற்றுக் கிடந்தவனை நான் தூக்கிக் கொண்டு போய்க் காப்பாற்றினேன். கண் விழித்ததும் என்னைப் பார்த்தபடியால் நான்தான் அவனைக் குத்தியதாக எண்ணிக் கொண்டான். அப்போது அவன் பேரில் கொண்ட பகைமை இன்னும் மாறவில்லை. ஆனால் அவனுடைய புத்தி கொஞ்சம் கட்டையாயிருந்தாலும்

துரோக சிந்தையுள்ளவன் அல்ல...!"

"நண்ப! ஓர் அழகிய பெண்ணின் மோகனாஸ்திரத்துக்கு எவ்வளவு சக்தியுண்டு என்று உனக்குத் தெரியாது. எவ்வளவு நல்லவனையும் அது துரோகச் செயல் புரியச் செய்துவிடும்..."

"ஐயா! பெண்களின் மோகன சக்தியைப் பற்றி நானும் சிறிது அறிந்துதானிருக்கிறேன். அதனால் நான் ஒருநாளும் துரோகியாகி விட மாட்டேன்..."

"ஆகா! மணிமேகலை நல்ல பெண். உன்னைத் துரோகமான காரியம் செய்யும்படி ஏவ மாட்டாள்..."

"நான் மணிமேகலையைச் சொல்லவில்லை. பூரண சந்திரனைப் பார்த்த கண்களுக்கு மின்மினி கவர்ச்சிகரமாகத் தோன்ற முடியுமா?"

"பூரண சந்திரன் என்று யாரைக் குறிப்பிடுகிறாய்?"

"இளவரசே! கோபிக்க வேண்டாம். பழையாறை இளையபிராட்டியைத்தான் சொல்லுகிறேன்.

"அடே! அதிகப் பிரசங்கி! உலகிலுள்ள மன்னாதி மன்னர்கள் எல்லாரும் குந்தவையின் கைப் பிடிக்கத் தவம் கிடக்கிறார்கள். அத்தகைய என் சகோதரியை நீ மனத்தினாலும் நினைக்கலாமா?"

"ஐயா! பூரண சந்திரனுடைய மோகனத்தையும் தண்ணொளியையும் பூலோக சக்கரவர்த்திகளும் பார்த்து அநுபவிக்கிறார்கள்; ஏழை எளியவர்களுந்தான் நிலவில் நின்று களிக்கிறார்கள். அவர்களை யார் தடுக்க முடியும்?"

"ஆமாம்; உன் பேரில் கோபித்துக் கொள்வதில் பயனில்லை. தெரிந்துதான் நான் உன்னை என் சகோதரியிடம் ஓலையுடன் அனுப்பினேன். நீயும் அவளுக்குத் திருப்தியாக நடந்துகொண்டாய். ஆனால் பார்த்திபேந்திரனிடம் மட்டும் இதையெல்லாம் சொல்லி விடாதே! அவன் சோழ குலத்துக்கு மருமகனாகித் தொண்டை நாட்டுக்கு மன்னனாக விளங்கலாம் என்று கனவு கண்டு கொண்டிருக்கிறான்..."

"ஐயா! அவ்விதம் சில காலத்துக்கு முன்பு வரையில் இருந்திருக்கலாம். இப்போது கந்தமாறன், பார்த்திபேந்திரன் இருவரும் நந்தினி தேவி காலால் இட்ட வேலையைத் தலையினால் செய்யக் காத்திருக்கிறார்கள்..."

"அதை நான் கவனித்து வருகிறேன். ஆகையினால்தான் அவர்கள் விஷயத்தில் எனக்குப் பயமாயிருக்கிறது."

"எல்லாவற்றையும் உத்தேசிக்கும் போது, தாங்கள் இளையராணியைச் சீக்கிரம் சந்தித்து எல்லா உண்மைகளையும் சொல்லி விடுவது அவசியம் என்று தோன்றுகிறது."

"நண்பா! எனக்கு அவ்வளவு தைரியம் வரும் என்று தோன்றவில்லை. எனக்குப் பதிலாக நீயே அவளைச் சந்தித்துச் சொல்லி விட்டால் என்ன?"

"இளவரசே! நான் சொன்னால் இளையராணிக்கு நம்பிக்கை ஏற்படாது. ஒருமுறை நான் அவரை ஏமாற்றிவிட்டுத் தப்பித்துக்கொண்டு சென்றிருக்கிறேன். ஆகையால் இதுவும் ஏதோ ஒரு சூழ்ச்சி என்று கருதக்கூடும்."

"ஆனால் நான் நந்தினியைத் தனியாகச் சந்திப்பது எப்படி? அவளோ அந்தப்புரத்தில் இருக்கிறாள்!"

"ஐயா! மணிமேகலையின் மூலம் அது சாத்தியமாகும். அதற்கு வேண்டிய ஏற்பாடு நான் செய்கிறேன்..."

"மணிமேகலையை நீ கைக்குள் போட்டுக்கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது. நல்ல காரியந்தான்! எது எப்படியானாலும் மணிமேகலையை உனக்குத் திருமணம் செய்து வைத்து விட்டேனானால், என் உள்ளம் ஓரளவு நிம்மதி அடையும்."

"ஐயா! மணிமேகலையை நான் என் உடன் பிறந்த சகோதரியாகக் கருதுகிறேன். அவளுக்கு இன்னும் பன்மடங்கு மேலான அதிர்ஷ்டம் கிட்டக்கூடும் என்று எதிர்பார்க்கிறேன்..."

"எதைப் பற்றிச் சொல்கிறாய்?"

"தெரியவில்லையா, இளவரசே! சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்து இளவரசரின் உள்ளத்தில் கன்னி மணிமேகலை இடம் பெற்றிருப்பதாக ஊகிக்கிறேன். சற்று முன் சம்புவரையர் குமாரியைப் பற்றி ஒரு மாதிரி பேசினேன். என் மனத்தைத் தங்களுக்குத் தெரிவிப்பதற்காக அவ்விதம் சொன்னேன். இளையபிராட்டி ஒருவரைத் தவிர இந்த உலகில் பிறந்த வேறு எந்தப் பெண்ணும் மணிமேகலைக்கு

அறிவிலும் குணத்திலும் இணையாக மாட்டார்கள். தாங்கள் மட்டும் மணிமேகலையை மணந்துகொண்டால் நம்முடைய தொல்லைகள் எல்லாம் தீர்ந்துவிடும். சம்புவரையரும் கந்தமாறனும் நம்முடன் சேர்ந்து விடுவார்கள். பழுவேட்டரையர்கள் தனித்துப் போய் விடுவார்கள். இளையராணியின் சக்தியும் குறைந்துவிடும். மதுராந்தகத் தேவர் பின்னர் இராஜ்யம் என்ற பேச்சையே எடுக்க மாட்டார். சிற்றரசர்களின் சூழ்ச்சியையும் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளின் சதியையும் ஒரேயடியாய் முறியடித்து வெற்றி காணலாம்...''

"எல்லாம் சரிதான், தம்பி! ஆனால் கடம்பூருக்கு நான் திருமணம் செய்து கொள்வதற்காக வரவில்லை. ஏதோ ஒரு பெரிய ஆபத்து நெருங்கிக்கொண்டிருக்கிறது என்று என் மனத்தில் தோன்றிக் கொண்டிருக்கிறது. நான் சொல்கிறேன், கேள்! பழுவேட்டரையர் மதுராந்தகனோடு திரும்பி வரும்போது ஒரு பெரிய படையுடன் வரப் போகிறார்..."

"ஐயா! அப்படியானால் நாமும் திருக்கோவலூர் அரசருக்குச் சொல்லி அனுப்பிப் படை திரட்டிக்கொண்டு வரச் செய்தால் என்ன? எதற்கும் முன் ஜாக்கிரதையுடன் இருப்பது நல்லதல்லவா?"

"நானும் அதைப் பற்றி யோசித்து வருகிறேன். ஒவ்வொரு சமயம் எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா? இந்தக் கடம்பூர் அரண்மனையைத் தரைமட்டமாக்கி, இங்கே சதியாலோசனை செய்தவர்கள் அத்தனை பேரையும் அரண்மனை வாசலில் கழுவிலேற்ற வேண்டுமென்று தோன்றுகிறது. என் தந்தையை முன்னிட்டுத்தான் கோபத்தை அடக்கிக் கொள்கிறேன். அவரை மட்டும் நீ காஞ்சிக்கு அழைத்து வந்திருந்தால்...?''

"இளவரசே! அவரிடம் தங்கள் ஓலையைச் சேர்ப்பிப்பதே பிரம்மப்பிரயத்தனமாகி விட்டதே!''

''ஆமாம்; சக்கரவர்த்தி இந்தப் பழுவேட்டரையர்களிடம் நன்றாய் அகப்பட்டுக்கொண்டிருக்கிறார். என் பெற்றோர்களுக்கென்று காஞ்சி மாநகரில் நான் கட்டிய பொன் மாளிகையில் வௌவால்கள் சஞ்சரிக்கின்றன. நான் உயிரோடிருக்கும்போது அவர்களை அம்மாளிகையில் வரவேற்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமோ, என்னமோ தெரியாது. இந்தக் கடம்பூரை விட்டு உயிரோடு போவேனோ என்றுகூடச் சந்தேகமாயிருக்கிறது...''

''இளவரசே! தாங்கள் இவ்விதம் பேசப் பேச, மலையமானைப் படைகளுடன் வரச் சொல்வது மிக்க அவசியம் என்று தோன்றுகிறது...''

''அந்தக் காரியத்துக்கு உன்னையே அனுப்பலாமா என்று பார்க்கிறேன்...''

"ஐயா! மன்னிக்க வேணும்! தங்களை விட்டு ஒருகணமும் பிரியவே கூடாது என்று தங்கள் தமக்கையார் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்கள்...''

''அதை நீ இதுவரை நன்றாக நிறைவேற்றி வருகிறாய்.''

"பார்த்திபேந்திர பல்லவர் இங்கே சும்மாத்தான் இருக்கிறார். பொழுது போகாமல் கஷ்டப்படுகிறார்...''

''ஆமாம்; பழுவூர் இளைய ராணியைப் பாராத ஒவ்வொரு கணமும் அவனுக்கு ஒவ்வொரு யுகமாக இருக்கிறது. பார்த்திபேந்திரன் பெண்ணழகுக்கு இவ்வளவு அடிமையாவான் என்று நான் கனவிலும் கருதவில்லை. அவனைத்தான் மலையமானிடம் அனுப்ப வேண்டும்.''

"சரியான யோசனை, ஐயா!"

''அவன் இல்லாதபோது எனக்கு ஏதாவது அபாயம் நேரிட்டால் உதவிக்கு நீ இருக்கவே இருக்கிறாய்...''

''இளவரசே! யார் இருந்தாலும் இல்லாவிட்டாலும், தங்களுக்குத் தீங்கு செய்யத் துணிவுள்ளவன் இந்த உலகில் இருப்பதாக நான் கருதவில்லை. தாங்கள் இல்லாதபோது தங்களைப் பற்றி ஏதேதோ பேசிய வீரக் கிழவர்கள், தங்களை நேரில் பார்த்ததும் கை கால் நடுங்கி வாய் குழறித் தடுமாறுவதை நேரில் பார்த்தேனே?"

"தம்பி! கையில் கத்தி எடுத்துப் போராடக் கூடிய எந்த ஆண் மகனுக்கும் நான் பயப்படவில்லை. பின்னாலிருந்து முதுகில் அம்பு விடக் கூடிய கந்தமாறன் போன்றவர்களுக்கும் நான் பயப்படவில்லை...''

''மறுபடி கந்தமாறனைப் பற்றி

அப்படிச் சொல்கிறீர்களே...?"

"கேள் தம்பி! ஒரு பெண்ணின் நெஞ்சின் ஆழத்தில் உள்ள வஞ்சத்துக்குத்தான் அஞ்சுகிறேன். அவள் மனத்தில் என்ன வைத்துக் கொண்டிருக்கிறாளோ என்று எண்ணும் போதெல்லாம் என் உள்ளம் பதை பதைக்கிறது. அவள் என்னை மர்மமாகப் பார்க்கும் ஒவ்வொரு பார்வையும் என் நெஞ்சில் ஈட்டியைச் செலுத்துவது போலிருக்கிறது. அதைப் பற்றி எண்ணிய உடனே என் கை கால்கள் வெட வெடத்துப் போகின்றன."

"ஐயா! நந்தினி தேவியின் வஞ்சத்துக்குப் பயப்பட வேண்டியதுதான் என் பதை நானும் ஒத்துக் கொள்கிறேன். அவருடைய உள்ளத்தில் எவ்வளவு பயங்கரமான துவேஷம் குடிகொண்டிருக்கிறது என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். என்னை அவர் உயிரோடு போக விட்டதை நினைக்கும்போது சில சமயம் அதில் என்ன சூழ்ச்சி இருக்குமோ என்று பீதி கொள்கிறேன். ஆனால் இதெல்லாம் அவருக்கு உண்மை தெரியாமலிருக்கும் காரணத்தினால்தான் அல்லவா? அவருடைய சகோதரர் தாங்கள் என்பதைத் தெரிவித்துவிட்டால் அதற்குப் பிறகு எந்தக் கவலையும் வேண்டியதில்லையல்லவா?"

"அப்படியா எண்ணுகிறாய்? வல்லவரையா! நீ கெட்டிக்காரன்தான். ஆனால் பெண்களின் இயல்பு அறியாத அப்பாவிப் பிள்ளை. நந்தினிக்குத் தான் சுந்தர



சோழரின் குமாரி என்பது தெரிந்தால், எங்கள் எல்லோரிடமும் அவருடைய குரோதம் ஒன்றுக்கு நூறு மடங்கு ஆகும். தஞ்சை சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினியாக அவளுக்குப் பட்டம் சூட்டுவதாகச் சொன்னபோதிலும் அவளுடைய கோபம் தீராது..."

''இளவரசே! அப்படித் தாங்கள் கருதினால் அந்தப் பொறுப்பை என்னிடமே ஒப்புவியுங்கள். நானே

நந்தினியிடம் உண்மை வரலாற்றைச் சொல்வேன். அவருடைய கோபத்தையும் தணிக்க முயல்வேன்..."

"உன்னாலும் அது முடியாது, நண்ப! நந்தினியின் கோபத்தை யாராலும் தடுக்க முடியாது. நான் சொல்வதைக் கேள்! எங்கள் சோழ குலத்தைக் காப்பாற்ற வேண்டுமானால், ஒன்று நான் சாக வேண்டும்; அல்லது அவள் சாக வேண்டும்; அல்லது இரண்டு பேரும் சாக வேண்டும். வீர பாண்டியனைக் கொன்ற வாளினால் அவளையும் கொன்று விடுகிறேன்..."

"இளவரசே! இது என்ன பயங்கரமான பேச்சு?"

"வல்லவரையா! ஒரு சாம்ராஜ்யத்தைப் பாதுகாப்பதற்காக ஓர் உயிரைக் கொல்லுவது குற்றமா? அவள் பெண்ணாயிருந்தால் என்ன? என் உடன் பிறந்த சகோதரியாக இருந்தால் என்ன? உண்மையில் அவள் பெண் அல்ல; பெண் உருக் கொண்ட மாய மோகினிப் பேய்! அவளை உயிரோடு விட்டிருந்தால் விஜயாலய சோழர் காலத்திலிருந்து பல்கிப் பெருகி வந்திருக்கும் இந்தச் சோழ சாம்ராஜ்யம் சின்னாபின்னமாகி விடும்...! ஆகா! அது என்ன?" என்று ஆதித்த கரிகாலன் திகிலுடன் கேட்டு விட்டுத் திரும்பிப்பார்த்தான்.

அச்சமயம் அவர்கள் இருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் காட்டுப் புதர்களுக்கு மத்தியில் ஏதோ அல்லோல கல்லோலம் நடந்துகொண்டிருந்தது. இருவரும் குதிரைகளைத் தட்டி விட்டு அருகில் சென்று பார்த்தார்கள். மிக அபூர்வமான காட்சி ஒன்று தென்பட்டது. காட்டுப் பன்றி ஒன்றும் சிறுத்தைப் புலி ஒன்றும் கொடூரமாகச் சண்டையிட்டுக் கொண்டிருந்தன.

"ஆகா! நாம் தேடி வந்தவன் இங்கே இருக்கிறான்!" என்றான் கரிகாலன்.

"சிறுத்தை நமக்கு வேலை இல்லாமல் செய்துவிடும் போலிருக்கிறது!" என்றான் வந்தியத்தேவன்

"அப்படியா நினைக்கிறாய்? பார்த்துக்கொண்டே இரு!" என்றான் கரிகாலன்.

சிறுத்தைக்கும் பன்றிக்கும் நடந்த அகோரமான யுத்தத்தை இருவரும் சிறிது நேரம் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

சிறுத்தை பன்றியின் மீது பாய்ந்து அதை நகங்களினாலும் பற்களினாலும் தாக்க முயன்றது. ஆனால் காட்டுப் பன்றியின் கடினமான தோல் புலி நகத்திற்கும் பற்களுக்கும் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. ஆனால் பன்றி வேகமாக ஓடி வந்து சிறுத்தையை முட்டித் தள்ளித் தரையிலும் மரங்களிலும் வேர்களிலும் வைத்துத் தேய்த்தபோதெல்லாம் சிறுத்தை படாதபாடு பட்டது. பன்றியின் கோரைப் பற்கள் சிறுத்தையின் தோலைச் சின்னா பின்னமாகக் கிழித்தன. கடைசியாக ஒருமுறை சிறுத்தையைப் பன்றி கீழே முட்டித் தள்ளிய போது அது செத்தது போலக் கிடந்தது.

"தம்பி! சிறுத்தை செத்துவிட்டது! பன்றி இனி நம் பேரில் திரும்பும்! அதற்கு நாம் ஆயத்தமாக வேண்டும்!" என்று கூறிக் கரிகாலர் வில்லில் அம்பைப் பூட்டி விட்டார்.

அம்பு பன்றியின் கழுத்தில் போய்த் தைத்தது. பன்றி கழுத்தை உதறிக் கொண்டே திரும்பிப் பார்த்தது. இரு குதிரைகளையும் அவற்றின் மீதிருந்தவர்களையும் ஒருகணம் கவனித்தது. பிறகு ஒருதடவை சிறுத்தையைப் பார்த்தது. அதனால் இனி ஒன்றும் ஆகாது என்று தெரிந்துகொண்டது போலும்! மூர்க்க ஆவேசத்துடன் குதிரைகளை நோக்கிப் பாய்ந்து வந்தது. கரிகாலன் இன்னொரு அம்பை வில்லில் பூட்டுவதற்கு முன்னால் அவன் ஏறியிருந்த குதிரையைத் தாக்கியது. தாக்குதலின் வேகத்தினால் சிறிது நகர்ந்த குதிரையின் பின்னங்கால் ஒரு மரத்தின் வேரில் அகப்பட்டுக் கொண்டவே குதிரை தடுமாறிக் கீழே விழுந்தது. குதிரையின் அடியில் கரிகாலன் அகப்பட்டுக்கொண்டான்.

பன்றி சிறிது பின்னால் நகர்ந்து வந்து மறுபடியும் தரையில் கிடந்த குதிரையை நோக்கிப் பாய்ந்து சென்றது.

(தொடரும்)



பூனாவில் வசித்து வந்தாள் அச்சிறுமி. அவள் வயதொத்த பள்ளி மாணவிகள், மைதானத்தில் வெவ்வேறு உடற்பயிற்சி விளையாட்டுகளில் உன்னிப்பாக ஈடுபட்டிருக்க, அவள் மட்டும் வீட்டுத் தோட்டத்தில் உட்கார்ந்துகொண்டு களிமண்ணைப் பிசைந்து கொண்டிருப்பாள். எப்போதும் அவள் பள்ளிச் சீருடையில் களி மண் அடையாளம் படிந்திருக்கும்.

'என்ன இது? இந்தப் பெண் இப்படி இருக்கிறாளே' என்று தாய் வருத்தப்பட்டிருக்கலாம். ஆனால் வெளிக்காட்டிக் கொண்டதில்லை.

பின்னாளில் தம் மகளின் கரம் பட்டு களி மண்ணெல்லாம் கவின்மிகு சிலைகளாகப் போகின்றன என்றும், பெரிய அளவில் அவை பேசப்படப் போகின்றன என்றும் ஒருவேளை அந்தத் தாய்க்குத் தெரிந்திருந்ததோ?

தமிழ்ப் பெண்தான் ரஜனி கிருஷ்ணன். இருந்தாலும் அப்பாவின் பணி காரணமாக நாட்டின் பல்வேறு இடங்களுக்கும் போய்க் கொண்டிருந்தாள்.

கலாக்ஷேத்ராவில் பரதம் பயில சென்னை வந்தார். காலில் சதங்கை கட்டிக் கொண்டாலும் பக்கத்து அறையில் நடைபெற்றுக் கொண்டிருந்த பெயிண்டிங் வகுப்பின் மீதே கவனம் பதிந்தது.

பரதமா? பெயிண்டிங்கா?

'பெயிண்டிங்' என்றது உள்மனம்.

"ஓவிய மேதை சீனிவாசலுதான் என்

# களிமண்ணைக் காதல் கொண்டேன்!

ஆசான். மினியேச்சர் பெயிண்டிங் உள்ளிட்ட ஓவியக் கலையின் அனைத்து அம்சங்களின் அடிப்படைகளையும் அவர் சொல்லிக் கொடுத்தார்.''

அடுத்து சிற்பக் கலைமீது ரஜ்னியின் கவனம் சென்றது. கலாசாகரம் ராஜகோபால் ஆசானாகக் கிடைத்தார்.

''ராய் சவுத்ரியின் சீடர் அவர். என்னை சிஷ்யையாக ஏற்றுக்கொண்டார். சாஸ்திரீய முறைப்படி அந்தக் கலையை சிந்தாமல் சிதறாமல் எனக்குக் கற்றுக்கொடுத்தார்.''

முதலில் ரஜ்னி கற்றுக்கொண்டது வெண்கலச் சிற்ப வடிவமைப்புதான்.



• 'யோகினி'

கலாக்ஷேத்ரா ருக்மணி அருண்டேல் சிலையை கலாசாகரம் ராஜகோபால் வடித்தபோது அவரது ஒரே உதவியாளராக முழுக்க முழுக்க அந்தச் சிலை வடிப்பில் தன்னை ரஜ்னி ஈடுபடுத்திக் கொண்டார்.

அதேபோல எஸ்.பி. பாலசுப்பிரமணியத்தின் விருப்பத்தின் பேரில் பின்னணிப் பாடகர் கண்டசாலாவின் வெண்கலச் சிலை. இப்போது அந்தச் சிலை ஹைதராபாத்தில் 'லலித் கலா தோரணம்' அலுவலகத்தில் இருக்கிறது.

வெண்கலத்தோடு உறவாடிக் கொண்டிருந்தாலும் ரஜ்னி, தங்கமாகக் கருதியது களி மண்ணைத்தான்.

''வீட்டு வேலைகள் செய்து கொண்டிருப்பேன். திடீரென ஒரு ஐடியா பளிச்சிடும். அப்படியே வேலைகளைப் போட்டுவிட்டு களிமண்ணை எடுத்துக்கொள்வேன். எத்தனை பகல், எத்தனை இரவு ஆகுமோ தெரியாது. அதை முடித்துதான் மறுவேலை!''

ரஜ்னியின்

• ரஜ்னிகிருஷ்ணன்



மிகப்பெரிய படைப்பு தியானம் செய்யும் ஒரு பெண்ணின் சிலைதான். ஆளுயரத்தைப் போல ஒண்ணேகால் மடங்கு உள்ள இந்தச் சிலையைச் செய்ய பெங்களூரின் புகழ்பெற்ற உடல் நல மையமான 'டாடியா ஃபார்ம்' ஆர்டர் கொடுத்தது. வெண்கலச் சிலை செய்து அவர்களுக்குக் கொடுத்துவிட்டு, தம் திருப்திக்காக அதே சிலையைக் களிமண்ணில் செய்து தன் வீட்டில் வைத்திருக்கிறார்!

முகம், அங்க அவயங்கள், யோக நிலையில் அமர்ந்திருக்கும் ஸ்டைல் எல்லாம் பிரமிக்க வைக்கிறது.

"யார் இதற்கு மாடலாக இருந்தார்கள்?"

"நான் பார்த்த பலரிடமிருந்து ஒவ்வொரு அம்சத்தை எடுத்துக்கொண்டு இந்த 'யோகினி'யைப் படைத்தேன். எனவே யாரும் மாடலாக என் முன் அமரவில்லை. பலர் என் மனத்தில் மாடலாக அவ்வப்போது வந்து உட்கார்ந்து போனார்கள்" என்று சிரிக்கிறார்.

தம் களிமண் சிற்பங்களுக்கு வீட்டிலேயே 'சூளை' போடுகிறார்.

சென்னையில் வீடுகட்ட எங்காவது கடைக்கால் தோண்டுவது கண்ணில் பட்டால் போதும். நேராக அங்கே போய் ஒரு பிடி களிமண் எடுத்து வந்து தம் சோதனைச் சாலையில் சோதித்து அதன் தன்மை ஓகே என்றால் மீண்டும் அதே இடத்துக்குப் போய் 'களிமண் கொடுங்கள்' என்று கேட்கிறார்.

"சிலர் எடுத்துக் கொண்டு போ என்பார்கள். சிலர் பணம் கேட்பார்கள். எப்படி யிருந்தாலும் சரி... வாங்கி வந்து விடுவேன்."

சென்னை நகர களிமண்களின் ஜாதகம் ரஜ்னிக்கு அத்துபடி.

"தி.நகர், மயிலாப்பூர், அடையாறு, ஜார்ஜ் டவுன் இப்படி ஒவ்வொரு பகுதி களிமண்ணுக்கும் ஒவ்வொரு தன்மை" என்கிறார். ரஜ்னியின் கலை விரல்களுக்கு மட்டுமே அந்தத் தன்மை பிடிபடுகிறது.

"இப்படிப் பெரும்பாலான நேரம் களிமண்ணில் கைவைத்துக் கொண்டிருக்கிறீர்களே... இதனால் உங்கள் விரல்களின் பெண்மை கலந்த மென்மை கெட்டுப் போய், அவை முரட்டுத்தனமாகி விடுமே என்று நீங்கள் கவலைப்பட்டதில்லையா?"

"பலர் களிமண்ணைப் பற்றித் தவறாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். முறைப்படி கையாண்டால் களிமண்ணைவிட மென்மையான பொருள் வேறில்லை. ஒரு ஆபரேஷனின்போது சர்ஜன் உபகரணங்களைக் கையாள்வது போலக் களி மண்ணைக் கையாள வேண்டும். அப்போது ஒரு கவிதை படிப்பது போல இருக்கும்."

ஸ்டெல்லா மேரி கல்லூரியில் பகுதிநேர நுண்கலை விரிவுரையாளராக இப்போது ரஜ்னி மாணவியருக்கு சுடுமண் சிற்பக்கலை (டெர்ரகோட்டா)யைக் கற்றுக் கொடுத்து வருகிறார்.

இவருக்குத் திருமணத்தில் ஆர்வமில்லை. அது பற்றிய சிந்தனையுமில்லை.

"என் வீடு. உற்சாகமூட்டும் அப்பா, அம்மா வீட்டுக்குள்ளேயே என் ஸ்டுடியோ. நான், என் களிமண். வேறென்ன வேண்டும்? போதும்!" என்கிறார்.

— ராணிமைந்தன்

# உடனே வேலை பெற

நேரிலும் தபாலிலும்

# ஓவிய ஆசிரியர் பயிற்சி

வரும் நவம்பரில் தமிழ்நாடு அரசுத் தொழில் நுட்பத் (ஓவியம்) தேர்வு எழுதி நீங்களும் ஓவிய ஆசிரியர் ஆகலாம். கல்வித் தகுதி: SSLC, +2, தேறிய, தவறிய ஆண்கள், பெண்கள். போட்டியில்லாத வேலை வாய்ப்பு அரசுப் பள்ளிகளிலும், தனியார் பள்ளிகளிலும் பணியாற்றலாம். அடிப்படைச் சம்பளம் ரூ. 4,500 + இதர படிகள் சேர்த்து ரூ. 6,100/- வரை மாதச் சம்பளம். எளிமையான பயிற்சி. வெற்றி நிச்சயம். குறைந்த பயிற்சிக் கட்டணம். வீட்டில் இருந்தபடியே தபால் மூலம் படிக்கலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு.

**விவரப் புத்தகம் இலவசம்**




**AJANTHA SCHOOL OF ARTS**
**(Govt. Regd. No. 1075/89/MS/RD)**
**6, Muthu Nagar, (Near Sundar Thirumana mandapam)**
**POONAMALLEE, CHENNAI - 600 056.** Ph : 649 0363

---



**வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.**
அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

☎ : (0435)
Off : 425948
Fax : 423777
Patasala : 422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்ககும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 457 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 171 மாணவர்களுக்கு 14 வேத, சாஸ்திர அத்யாபகர்கள், புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>திட்ட விபரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை தொகை (One Time) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 500 | Rs. 5000 |
| ஸுமங்கலி ப்ரார்தனை : ஸுமங்கலி ப்ரார்த்தனைக்கு ரூ.1000/- | | |
| வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ.500/- | Rs. 1,500 | Rs.15,000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs.15,000 |
| பௌர்ணமி ஆயுஷ்ய ஹோமம் | Rs. 1,000 | Rs.10,000 |
| ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakh |

**Cross** செய்யப்பட்ட **D.D.**-ஐ **A.V.M.S.G.D.P.S. Samithi** என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

# ஜி

**தங்கச்சங்கிலி பரிசு!**

இத்தொடர்கதையை வாரம் ஒரு எழுத்தாளர் என்று பத்து எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். கவனமாகப் படித்து வாருங்கள். கடைசி வாரத்தில் கேள்வி ஒன்று உங்களுக்காகவே தயாராக இருக்கிறது. சரியாக பதிலளிப்பவர்களுக்குப் பரிசாகக் காத்திருக்கிறது தங்கச்சங்கிலி! பலர் சரியாக எழுதியிருந்தால் குலுக்கலில் ஒருவர்! பரிசளிப்பு விஷயத்தில் ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**எஸ். சங்கரநாராயணன்**

அசோக்கும் அன்புச்செல்வியும் பக்கவாட்டுத் தோற்றத்தில் புகைப் படம் எடுத்தால் காதலர் தின வாழ்த்து அட்டையில் அச்சடிக்க லாம் போல ஒருவர் கண்ணுக்குள் மற்றவர் கண்ணை செருகி வைத்து உட்கார்ந்திருந்தார்கள்.

நான்கு கைகளும் ஒரே ஒரு இளநீரை ஏந்தியிருக்க, அதிலிருந்து புறப்பட்ட இரண்டு ஸ்ட்ராக்கள் இருவர் உதடுகளிலும் லேண்ட் ஆகியிருந்தன. இளநீர் எப்போதோ தீர்ந்து போய் சர்சர் என்று சும்மா காற்றை மட்டும் உறிஞ்சிக் கொண் டிருந்தார்கள்.

தூரத்திலிருந்து இவர்களைப் பார்த்துவிட்ட வாட்ச்மேன் சிங்காரத்துக்கு விறகு, கெரசின், எல்.பி.ஜி., சோலார் எனர்ஜி - இந்த எதன் உதவியுமில்லாமல் ரத்தம் கொதித்தது.

அன்புச்செல்வியா நீ?

அயோக்யச் செல்வி!

அப்பாவுக்கு மஞ்சக் காமாலை! ராசப்பேட்டையில் பதினெட்டு கை துர்க்கை! அதன் சப்ஸ்டிடியூட்டான ராயப்பேட்டை அம்மனின் தரிசனத்திற்கு ஒரு கமண்டலம் (54 நாளாம்) விரதம்! ச்சே! எத்தனைப் பொய்கள் சொன் னாள்?

எவ்வளவு பெரிய மட்ட்ட்டயன் நான்! இந்தப் பொய்களை நம்பி இலவச இணைப்புப் பிரார்த்தனையாக இருக்கட்டும் என்று என் கொசுறுப் பங்காக தினம் எலுமிச்சைப்பழம் வேறு கொடுத்தனுப்பினேனே. நடுராத்திரியில் பக்கத்து வீட்டு மரத்தில் துரட்டிப் போட்டு வெட்டினதுதான் என்றாலும், கொடுத்தேனே.. என்னை இளிச்சவாயன் என்று மட்டும் நினைக்கவில்லை இவள். இளிச்ச கண்ணன், இளிச்ச மூக்கன், இளிச்ச காதன் என்று மொத்தமாக நினைத்த தால்தான் இப்படி என் தலையில் மிளகாய் அரைத்து விட்டாள்.

இந்த இடத்தில் சிங்காரத்திற்கு யோசனை தடைப்பட்டு மனிதர்களின் பேச்சு வழக்கில் ஒரு மாபெரும் சந்தேகம் வந்து விட்டது.

இதுவோ மிக்ஸி காலம். ஒரு மிக்ஸி வாங்காவிட்டால் கட்டுப் பொசுக்கி விடுவது போல ரேடியோவிலும், டீ.வி.யிலும் மிரட்டி மிரட்டி அவனவன் தாலி வாங்கும்போதே மிக்ஸி வாங்கி விடுகிறான். இப்படிப்பட்ட கால கட்டத்தில் (ஏன் காலவட்டத்தில் என்று சொல்வதில்லை? காலம் என்பது சதுரமானதா? ச்சே! சந்தேகத்திற்குள் ஒரு சந்தேகமா?) ஒரு ஆசாமி தலையைக் காட்டத் தயாராக இருந்தாலும் அந்தக் தலையில் மிளகாய் அரைக்க யார் முன்வருவார்கள்?



கி

இப்போது துடிக்கும் தன் சந்தேகமா, பொங்கும் தன் ஆத்திரமா எது முக்கியமென்று யோசித்து, 'ஆத்திரமே' என்று தீர்மானித்த சிங்காரம், அவர்களைப் பார்த்தபடி கைகளை எம்.என். நம்பியார் மாதிரி கஞ்சாக் கசக்கு கசக்கியபடி தலையை சாய்த்து சாய்த்து சிந்தித்தான்.

நேராக காலேஜுக்குப் போய் குண்டு பிரின்ஸிபாலம்மாவுக்கு அவள் கழுற்றி மல்லாத்தி வைத்திருக்கும் கண்ணாடியை எடுத்து மாட்டிய கையோடு, ஆனால் கையைப் பிடிக்காமல் இங்கே கூட்டி வந்து இந்த சிருங்காரக் காட்சியை இந்த சிங்காரத்தின் கண்டுபிடிப்பாகக் காட்டினால்?

**உ**டனே சிங்காரத்தின் மனத்தில் ஒரு FLASH FORWARD காட்சி ஆனது. தன் இரண்டு கைகளையும் தன் இரண்டு இடுப்பிலும்... ஸாரி... இடுப்பின் இரண்டு பக்கத்திலும்... (ஸாரி கூட அவசியமில்லை. இரண்டு இடுப்பு என்பதும் ஒருவகையில் சரியே) வைத்துக் கொண்டு, பதினெட்டு கொண்டை ஊசிகளின் தயவில் தலையில் கூடைப்பந்து அமர்ந்த குண்டு பிரின்ஸிபாலம்மா HALF WAY OPENING ல் கத்துகிறாள்.

எதிரே வார்த்தைக்கு வார்த்தை தலைகுனியும் அயோக்யச் செல்வி.

"இதோ பார், நீ ஆயிரத்தி எட்டு தடவை என் கால்ல விழுந்ததில என் கால் வீங்கினதுதான் மிச்சம். பாவம், உனக்கு இல்லை மச்சம். நீ செஞ்ச தப்பு அதிகபட்சம். உன்னை நான் டிஸ்மிஸ் செஞ்சதை இந்த ஊரே மெச்சும்."

"மேடம், டிஸ்மிஸ் செஞ்சா என் படிப்பு கெட்டுடும்."

"டிஸ்மிஸ் செய்யலைன்னா உன் லைஃபே கெட்டுடும்."

"நான் எங்க போவேன்? நேக்கு யாரைத் தெரியும்?"

"என்ன நீ பிராமின் மாதிரி பேசறே?"

"இந்த டயலாக்கை இப்படித்தான் பேசணும் மேடம்."

"இருக்கட்டும். பேரனம் போ. உங்கப்பா இருப்பாரே அங்கே."

"அங்கே போய் என்ன பண்றது?"

"உங்கப்பாவை நாலு எருமை மாடு வாங்கித் தரச் சொல்லு."

"ஏற்கெனவே அஞ்சி மாடு இருக்கு."

"பிரச்னையே இல்லை. மாட்டுக்கு பருத்திக் கொட்டை, புண்ணாக்கு வை! சாணி அள்ளு! பால் கற! பட்டாப்பட்டில டிராயர் தச்சிப் போட்டவனாப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக்கோ. இனிமே உனக்கு இங்கே சீட் இல்லை."

''ஒரு ஓரமா

3



ளா

## கரன்சிங்கும் கதகளியும்!

டாக்டர் கரன்சிங் ஒருமுறை திருவனந்தபுரம் சென்றபோது கதகளி நடனம் பார்க்க விரும்பினார். ஆனால் அவருக்கு ஆடிக் காட்டக் கலைஞர்கள் யாரும் இருக்கவில்லை! திருச்சூர் 'கலாமண்டலம்' நாட்டியப் பள்ளிக்குப் போனால் பார்க்கலாம் என்றார்கள்! மாநிலத் தலைநகரில் இப்படிக் கலை வறட்சி இருக்கலாகாது என்று கரன்சிங் வருந்தி, 'மார்கி' என்ற அமைப்பு இங்கே தொடங்கப்படக் காரணமாயிருந்தார்.

அப்புக்குட்டன் நாயர் என்பவர் வடிவம் தந்து மார்கியை உருவாக்கினார் இன்று கதகளி, கூடியாட்டம் என்ற இருவகை நடனங்களைப் பயிற்றுவிக்கும் மையமாகவும் இப் புராதனக் கலைகளைப் பிழைப்பாகக் கொண்ட கலைஞர்களை ஆதரிக்கும் அமைப்பாகவும் செயல்படுகிறது மார்கி. மத்திய – மாநில அரசுகளின் உதவி பெற்று இயங்கி வருகிறது.

– எம். ரவீந்திரன்

நின்னுக்கிட்டாவது படிக்கிறேனே..."

"நோ! நான் சொன்னா சொன்னதுதான்."

"ப்ளீஸ் மேடம், எனக்கு ஒரு வழி காட்டுங்க."

"நேராப் போய் மூணாவது லெஃப்ட்ல திரும்பு. ரயில்வே ஸ்டேஷன் வரும். அதான் வழி. அண்டர் ஸ்டாண்ட்? புரிஞ்சுதா? ஸ்டாப் டாக்கிங்! பேசினது போதும். கெட் அவுட்! வெளில போ!"

அன்புச்செல்வியின் POINT OF VIEW ல் பிரின்ஸிபாலம்மா சீற.. அடுத்து அன்புச்செல்வி CLOSE UP ல் கண்ணீர் துடைத்து விலக..

'கட்' என்றார் சிங்காரத்தின் கற்பனை டைரக்டர்.

காட்சி DISSOLVE ஆகி சிங்காரம் தன் கை மேல் இரண்டுச் சொட்டு நீரைப் பார்த்தான். உடனே 'மழை வருகிறதோ?' என்று வானத்தைப் பார்த்தான். அது ஏரியலில் வெளுத்தது போல வெளேரென்று இருக்க.. தன் கண்களைத் தொட்டுப் பார்த்தான். தன் கட்டைப் பேனாவைப் போல அது கசிந்திருந்தது.

அட! என் சொந்த முயற்சி எதுவுமில்லாமல் ஆனால் சொந்தக் கண்ணீர்! எப்படி? தன் ஊர்க்காரியின் படிப்பு தன்னால் கெட்டு அவள் வாழ்க்கை இருண்டு போய் காலம் பூராவும் மெழுகுவர்த்தி வாங்கும் நிலைமை ஏற்பட்டு விடக் கூடாதென்று உள் நெஞ்சம் உருகி, கண்ணீராய் வழிந்திருக்கிறது!

ஆனால் ஏமாற்றப்பட்ட கோபத்தில் வெளிநெஞ்சம் கொந்தளித்து, கொப்புளித்து கொடி பிடிக்காமல் ஆர்ப்பாட்டம் செய்கிறதே!

உள்நெஞ்சத்தின் உருகலா? வெளிநெஞ்சத்தின் குமுறலா? எதற்கு மதிப்புக் கொடுப்பது? உள்ளா? வெளியா? உள்ளா? வெளியா?

இந்தக் கேள்விகளின் எதிரொலி எஃபெக்ட்டுடன் விலகி நடந்தான் சிங்காரம்.

பப்பர பப்பர பப்பர பாங்!

ஒன்றுமில்லை. ஒரு முக்கியமான பாத்திரத்தின் அறிமுகத்திற்கான ரீரெக்கார்டிங்!

சோமன்! அசோக் படிக்கும் அதே கல்லூரியில் படிப்பவன். அசோக் தங்கியிருக்கும் அதே ஹாஸ்டலில் தங்கியிருப்பவன்.



சோமன் சின்ன வயதில் குள்ளமாக இருக்க... டாக்டர் அவனை சாப்பாட்டுக்குப் பிறகு இன்கிரிமின் டானிக் குடிக்கச் சொன்னார். இவனுக்கு அவசரம். அதனால் சாப்பாட்டுக்குப் பதிலாக மூன்று வேளையும் இன்கிரிமின் மட்டுமே குடித்ததால்... இப்போது இவன் படுத்தால் கட்டிலைத் தாண்டி கால்கள் தொங்குகின்றன. சினிமா தியேட்டரில் பின் சீட் ஆசாமி, 'சீட் மேல ஏன்யா நிக்கிறே, உக்காரு!' என்று அதட்டுகிறான்.

இஸ்திரி வண்டிக்காரன் இவன் பேண்ட்டுக்கு மட்டும் இரண்டு மடங்கு வசூலிக்கிறான். டைலரும் அப்படியே.

புரொபசர் கடைசி பெஞ்சில் உட்கார வைக்கிறார். பேஸ்கட்பால் டீம் கோச் மட்டும் தான் மரியாதையாகப் பார்த்து டீமில் சேரச் சொல்லிக் கெஞ்சுகிறார்.

ஆனால் இவனுக்கு ஸ்போர்ட்ஸில் நாட்டமில்லை. படிப்பிலும் நாட்டமிலலை. ஒரே நாட்டம் அன்புச்செல்வி!

சோமன் அன்புச்செல்வியின் முறைமாமன்.

அவள் குழந்தையாக கிலுகிலுப்பை விளையாடிய போதே மனத்தில் கிளுகிளுப்பை உணர்ந்தவன். இவள் தான் என் எதிர்கால மனைவி என்று மனசுக்குள் காதல் கொடி நட்டு தினமும் தண்ணீர் ஊற்றி வளர்த்து வருபவன்.

தன் முறைப்பெண் காலேஜில் சேர்கிறாள் என்றதும், தான் மட்டும் பள்ளி இறுதியோடு நிற்பது கௌரவக் குறைச்சல் என்று அப்பாவிடம் அடம்பிடித்து அதே கல்லூரியில் சேர்ந்தவன்.




ஆனால் அன்புச்செல்வி? இவனைப் பற்றி யாராவது பேசினால் 'யாரு, அந்த வ.க.மு. சொல்லிச்சா?' என்பாள். (வ.க.மு. என்றால் வடிகட்டின முட்டாள் என்பதை நேயர் அறிவீராக)

"ஏய் சோமா, இதோ பார் மாமா, நீயும் நான் படிக்கிற காலேஜ்ல படிக்கிறதைப் பத்தி ஒண்ணுமில்லை. ஆனா அங்கே வந்து நீதான் என் மாமான்னு யார் கிட்டயும் சொல்லக்கூடாது. இல்லைன்னா நான் வேற காலேஜுக்கு மாறிடுவேன்" என்று அன்புச்செல்வி ஊரில் அன்புடன் கேட்டுக் கொண்டதற்கிணங்க,

'அன்புச்செல்வியின் முறைமாமன் இந்த சோமன்' என்கிற இந்த தேவ ரகசியத்தை கட்டிக் காப்பாற்றி வரும் சோமனின் ஒரே பொழுதுபோக்கு சிகரெட் வைத்து சூதாடுவது.

ஹாஸ்டல் நண்பர்களுக்குள் மங்காத்தா விளையாட்டில் காசுக்கு பதில் சிகரெட்.

அப்படி இன்றைக்கு விளையாடிக் கொண்டிருக்கும்போது அறிமுகம் ஆனான் கோவிந்து.

தன் நட்பை உதாசீனப்படுத்தி தன்னை விட்டு நண்பன் அசோக் விலகிப் போனதில் வெறுத்துப் போய் அர்ஜெண்ட்டாக புது நட்பு தேடி வந்திருந்த கோவிந்து, 'சோமன், அடுத்து உங்களுக்கு அஞ்சி விழுது!' என்று வெளியில் இருந்து ஆதரவு கொடுத்தான்.

சொன்னபடி அஞ்சு விழுந்து சிகரெட் ஜெயித்த சோமன் புன்னகைத்து கோவிந்தோடு கைகுலுக்க....

அடுத்த ஐந்தாவது நிமிடம் மெஸ்சில் அவன் தோளில் இவன் கை. இவன் தோளில் அவன் கை. அவன் பாக்கெட்டிலிருந்து இவன் கை சிகரெட் எடுத்தது. இவன் சிகரெட்டிற்கு அவன் கை நெருப்பு வைத்தது.

''என்னாச்சு கோவிந்து, ஏன் அசோக் பத்தி இப்படி

**386!**

**நானூறு பொதுநல அமைப்புகள் ஒன்று சேர்ந்துள்ளன – கொரியாவில்! நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிடும் 86 வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டாம் என இந்தக் 'கூட்டணி' போராட்டம் நடத்தி, பிரசாரம் செய்தது. அந்த 86 பேரும் ஊழல், உதவாக்கரை பேர்வழிகள் அல்லது சர்வாதிகார ஆட்சியுடன் கடந்த காலத்தில் நெருக்கம் கொண்டிருந்தவர்கள்.**

**ஃபுட்பால் பந்தயங்களில் பயன்படுத்தப்படுவது போன்ற சிவப்பு அட்டைகளை ஏந்தியபடி இந்தப் போராளிகள் ஊர்வலம் நடத்தியிருக்கின்றனர். இவர்களுள் அனேகர் 1980களில் ராணுவ ஆட்சியை எதிர்த்துப் போராடியவர்கள். ''இப்போது சமுதாய மாற்றத்துக்காக இன்னும் கொஞ்சம் முதிர்ச்சியுடன் போராடுகிறோம்'' என்கிறார் தலைவர் கிம்.**

**கூட்டமைப்பின் பெயர், 'ஜெனரேஷன் 386'. ஜெனரேஷன் – தலைமுறை. 386...? கம்ப்யூட்டர் உலகில் அதிவேகப் புரட்சிக்குக் காரணமாயிருந்த மைக்ரோப்ராசஸர் 386– அதன் பெயரைத்தான் சூட்டிக் கொண்டிருக்கிறார்கள், பெருமையுடன்!**

வெறுப்பாய்ப் பேசறே? ரெண்டு பேரும் ஒரே டூத் பிரஷ் யூஸ் பண்ணிட்டிருந்திங்களே– இப்ப என்ன ஆச்சு?"

"நான் தனியா ஒரு டூத்பிரஷ் வாங்கிட்டேன்."

"ஓ! அவன் பிரஷ்தான் நீ யூஸ் பண்ணிட்டிருந்தியா?"

"இப்ப அதுவா முக்கியம்? எங்க நட்புல விரிசல் விழுந்துடுச்சி!"

"அதான் ஏன்?"

"நான் உயிருக்குயிரா நேசிச்சவளை இவன் நாசம் பண்ணிட்டான்."

"அடப்பாவி! உன் காதலியைக் கற்பழிச்சுட்டானா?"

"அப்படி இல்லை. ரூம்ல மடோனா போஸ்டரை ஒட்டி மனசுக்குள்ளே நேசிச்சேன். இவன் அந்தப் போஸ்டரைக் கிழிச்சி பின்பக்கம் தன் காதலிக்கு லெட்டர் எழுதி அனுப்பிச்சிட்டான் ராஸ்கல்!"

"அட! அசோக் லவ் பண்றானா? யாரை?"

"இந்தக் காலத்திலயும் தாவணில அலையுதே அந்த அன்புச்செல்வியை!"

சோமன் நழுவி கீழே விழ இருந்த தன் நெஞ்சைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு, "நீ சொல்றது நிஜம்தானா?" என்றான்.

"உனக்கு சந்தேகமா இருந்தா காந்தி பார்க்குக்குப் போய்ப் பாரு!"

"அங்கே நோட்டீஸ் போர்டுல எழுதிப் போட்டுருக்காங்களா?"

"முட்டாள்! அங்கதான் அவங்க தினம் சந்திச்சு லவ் பண்ணுவாங்க."

சோமன் தன் பற்களை மிகவும் அழுத்தமாக நற நறத்ததில் ஒரு பல் ஆட்டம் கண்டது. போகிறேன். பார்க்கிறேன். இவன் சொல்வது மட்டும் உண்மையாய் இருந்தால்?

இங்கே காந்தி பார்க்கில் அசோக்கும் அன்புச்செல்வியும் எதிரெதிராக உட்கார்ந்து ஒருவர் வாயில் ஒருவர் வறுத்த கடலை வீசி கேட்ச் பிடித்து சாப்பிட்டபடி இருந்தார்கள்.

"அன்பு டார்லிங், நான் ஒண்ணு கேட்டா கோவிச்சுக்க மாட்டியே?"

"ச்சீ! அதெல்லாம் கல்யாணத்துக்கப்புறம்தான்."

"சேச்சே! அதில்லை. இது சந்தேகம். அதென்ன உலகம் முழுக்க சூரிதாருக்கும், டைட்சுக்கும் மாறினப்புறமும் நீ ஏன் பிடிவாதமா தாவணியை விட்டுத் தாவ மாட்டேங்கறே? ஏதாச்சும் தாவணிச் சபதமா?"

"இல்லை. இதான் நம்ம கலாசாரம். நான் கல்வியைக் கூட விட்டுக் கொடுத்திடுவேன். ஆனா நம்ம கலாசாரத்தை விட்டுக் கொடுக்க மாட்டேன்."

"கொன்னுட்ட போ! இப்படி கன்னத்தில் பட்டாணி சைசுக்கு திருஷ்டிப் பொட்டு வச்சுக்கிறியே, இதெல்லாம் பாப்பா வயசோட சரின்னு உனக்கு ஏன் புரியறதில்லை அன்பு!"

"கண் பட்டுடும்னு சொல்லி தினம் வெச்சுக்கச் சொல்லி எங்க பாட்டி சொன்னாங்க. சரின்னு சத்தியம் பண்ணிட்டேன் அசோக்."

அசோக் பெருமூச்சு விட – பார்க் நோக்கி வந்து கொண்டிருந்தான் சோமன்.

(தொடரும்)



## ஆந்திரா ஆவக்காய்!

உட்கட்சித் தகராறுக்குப் பெயர் போன காங்கிரஸில் இன்னுமொரு கலாட்டா – அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டியின் பொருளாதாரப் பிரிவு உறுப்பினர் ஜெயராம் ரமேஷ். இவர் ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடுவை மனமாறப் பாராட்டியதாக ஏற்கெனவே ஆந்திர பிரதேஷ் காங். கமிட்டி தலைவர் ராஜசேகர ரெட்டியிடம் வாங்கிக் கட்டிக் கொண்டார். இப்போது ஆந்திர மாநில பொருளாதார அறிவுரை கவுன்சிலில் வேறு உறுப்பினராக ஒப்புக் கொண்டுள்ளார் ஜெய்ராம் ரமேஷ். ராஜசேகர ரெட்டியின் கடுப்புக்குக் கேட்கவா வேண்டும்! ''ஆந்திராவில் ரமேஷுக்கு என்ன ஆதாயங்களோ? நாயுடுவுக்கு உதவத் தலைகீழாய் நிற்கிறார்'' என்று புலம்பியிருக்கிறார் ரெட்டி.

விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் தர வேண்டும் என்கிறது காங்கிரஸ். 'அது சாத்தியமில்லை' என்று நாயுடுவின் ஆலோசகராகப் பேசுகிறார் ஜெயராம் ரமேஷ்.

'சில பத்திரிகைகள் தவிர யாரும் ரமேஷை சீரியஸாக எடுத்துக் கொள்வதில்லை' என்று ராஜசேகர ரெட்டி திருப்தி கொள்கிறார்.

# சோலார் பூத்!


• சோலார் பூத்தில் காவலர்

சுட்டெரிக்கும் வெயில், கமறும் வாகனப் புகை, செவிப் பறை கிழியும் ஹாரன்களின் சப்தம், இவற்றுக்கிடையில் அல்லாடும் போக்குவரத்து போலீஸ்காரர்களை இனி சாலை சந்திப்புகளில் பார்க்க முடியாது.

மாறாக, சூரிய சக்தியில் இயங்கும் போலீஸ் பூத்களில், தலைக்கு மேல் மின்விசிறி சுற்றிக் கொண்டிருக்க, ஹாயாக குஷன் சேரில் அமர்ந்து டிராபிக்கை சரி செய்யத் தொடங்கி விட்டார்கள்!

சென்னையைச் சிங்காரச் சென்னையாக்குவதற்கு மாநகரப் போக்குவரத்து காவல் துறை தன் பங்கிற்கு செய்திருக்கும் ஹைடெக் பங்களிப்புதான் இந்த 'சோலார் போலீஸ் பூத்'.

கடந்த பதினான்காம் தேதி சென்னை கடற்கரைச் சாலையிலுள்ள காந்தி பூங்கா சந்திப்பில் முதல் பூத்தினைத் தொடங்கி வைத்தவர் அமைச்சர் ஆற்காடு வீராசாமி.

முதல் கட்டமாக சென்னையில் நாற்பது பூத்துகள் நிறுவப்பட்டுள்ளன. இந்த பூத்துகள் எப்படிச் செயல் படுகின்றன என்று பார்க்கச் சில இடங்களுக்கு விசிட் அடித்தோம்.


• மக்களே இயக்கலாம்!

சென்னைக் கடற்கரைச் சாலையில் கலங்கரை விளக்கம் தொடங்கி, நேப்பியர் பாலம் வரை முக்கிய சந்திப்புகளிலும், பாதசாரிகள் கிராசிங்குகளிலும் பூத்துகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. காந்தி பூங்காவும், காவல் துறைத் தலைவர் அலுவலகமும் சந்திக்கும் இடத்தில் ஒரு பூத். பூத்தின் தலைப்பகுதியில் சூரிய சக்தியை கிரகித்துக் கொள்ளும் சோலார் தட்டு. அதற்குக் கீழே இரண்டு குழாய் வடிவ ஒலிபெருக்கிகள். பூத்தின் உள்ளே அமர்ந்திருக்கும் காவலர் டிராபிக்கைப் பார்க்கும்வண்ணம் கண்ணாடி ஜன்னல்கள் பொருத்தப்பட்டிருந்தன. காவலர் ஒலிபெருக்கியில் பேசிக் கொண்டிருந்தார்.

"ஹலோ சைக்கிள்காரத் தம்பி! ஸ்டாப் லைனை மதிச்சு எல்லாரும் நிக்கறாங்க. நீ மட்டும் தாண்டி வந்துட்டா எப்படி? முதல்லே பின்னால போங்க. ரோட்ல டிராபிக் இல்லேன்னா கூட, அவங்கவங்களுக்கு சிக்னல் கிடைக்கிற வரைக்கும் பொறுமையா இருங்க. அதுதான் எல்லாருக்கும் நல்லது."

எம்.ஜி.ஆர். சமாதி சந்திப்பிலிருந்த பூத்தைத் தவிர மற்ற எல்லா பூத்துகளும் போலீஸ்காரர்கள் இன்றி காலியாகவே இருந்தன. மக்கள் சாலையை இஷ்டத்திற்குக் கடந்து போய்க் கொண்டிருந்தார்கள். கண்ணகி சிலை அருகே இருந்த பாதசாரிகள் கிராசிங்கில் மற்றொரு புதிய விஷயம் அறிமுகப்படுத்தப்பட்டு இருந்தது. காவலர் இல்லாத நேரத்தில் பொது மக்களே சுவிட்சை அழுத்தி, சிக்னலை விழச் செய்து சாலையைக் கடக்





• தணிகாசலம்

கலாம். பொது மக்களுக்குப் பரவலாக இது தெரியவராததால், அந்த மேனுவல் சுவிட்சைத் தவிர்த்து விட்டு சாலையில் பாய்கிறார்கள். விவரம் தெரிந்த கல்லூரி மாணவர்கள் சிலர் மட்டும் அதைப் பயன்படுத்தினார்கள்.

ஈ.வே.கி. சம்பத் சாலை சந்திப்பில் இருந்த சோலார் பூத் உள்ளே இருந்த காவலர், சிக்னல்களை மட்டும் கையால் இயக்கி போக்குவரத்தைக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். அவரை அணுகி, ''சோலார் பூத் வசதி எப்படி?'' என்றோம்.

''பொட்டல் வெயில்ல, மூச்சுத் திணறல் வர்ற அளவுக்குப் புகையை இழுத்து, கஷ்டப்பட்டுக்கிட்டு இருந்தோம். இப்போ எங்களுக்கும் பாதுகாப்பு; மக்களுக்கும் பாதுகாப்பு! இந்த சிஸ்டம் சம்பந்தமா விவரம் தேவைன்னா, போக்குவரத்து துணைக் கமிஷனர் தணிகாசலத்தைப் பாருங்க!'' என்றார். எதிரிலேயே இருந்த போக்குவரத்து காவல் துறையின் தலைமை அலுவலகத்திற்குள் நுழைந்து தணிகாசலத்தைச் சந்தித்தோம்.

''சோல்கர் இண்டஸ்ட்ரீஸ்ங்கிற நிறுவனத்திடமிருந்துதான் இந்த சோலார் டிராபிக் பூத்துகளை வாங்குறோம். ஒரு பூத்தின் விலை ரூபாய் ஒரு லட்சத்து நாற்பதாயிரம். நாற்பத்தஞ்சு டிகிரி சென்டிகிரேட் வெப்பத்தைத் தாங்கக்கூடிய இந்த பூத்துகள், முழுக்க முழுக்க ஃபைபரால் செய்யப்பட்டவை. இந்த பூத்துகளின் கூரையில் சோலார் தட்டு பொருத்தியிருக்கோம். இதன் மூலமா பகல் நேரத்தில் உற்பத்தி செய்யப்படும் மின்சாரம் பூத் உள்ளே இருக்கிற பேட்டரியில் சேமித்து வைக்கப்படுகிறது. ஒரு டி.சி. மின்விசிறி, பொதுமக்களுக்கு அறிவிப்புத் தர ஒலிபெருக்கி சிஸ்டம்,

• ''கேமரா வைக்கப் போறோம்?''

பூத் உள்ளே இரண்டு ட்யூப் லைட்டுகள், பூத்துடன் இணைக்கப்பட்ட சிக்னல்கள் எல்லாமே இந்த சூரிய மின்சாரத்தைக் கொண்டுதான் இயங்குது. இந்த பூத்ல போலீஸ்காரங்க உட்கார்ந்து வேலைய ஒழுங்கா செய்யுறாங்களான்னு மக்களே பார்க்கலாம். பூத் காலியா இருந்தா எப்போ எந்த நேரம் காலியா இருந்ததுன்னு, ஒரு புகார் எழுதி அந்த பூத்லே இருக்கிற புகார்ப் பெட்டியில போடலாம். முதலுதவிப் பெட்டியும் பூத்ல இருக்கு. இப்போதைக்கு சிக்னல் விளக்குகள் மின்சார லைன் மூலமாத்தான் இயங்குது. இதையும் சோலார் சிஸ்டத்துல சீக்கிரம் இணைச்சுடுவோம். கடற்கரைச் சாலை, டாக்டர் ராதா கிருஷ்ணன் சாலை, அண்ணா சாலை, ஜவஹர்லால் நேரு சாலை ஆகிய நான்கு பிரதான சாலைகள்ல நாற்பது பூத் வெச்சருக்கோம். சென்னை முழுவதும் முந்நூறு பூத் வைக்கப் போறோம்.

''இந்த சோலார் பூத் மூலமா நிறைய பயன்கள் இருக்கு. முதல்லே விபத்துக்கள் அறவே தவிர்க்கப்படுது. நுரையீரல் நோயால் போக்குவரத்துப் போலீசார் தாக்கப்படுவது தவிர்க்கப்படுகிறது. முக்கியமாக மின்சார சேமிப்பு. சாலை விதிகளை மீறுவோர் தங்களது கிரெடிட் கார்டுகளை பூத்லே கொடுத்து ஸ்பாட் ஃபைன் கட்டவும் ஏற்பாடு செய்திருக்கோம்.

''இந்த சோலார் பூத்கள் எல்லாவற்றையும் ஸ்பான்ஸர் அடிப்படையிலதான் அமைச்சுக்கிட்டு வர்றோம். வெஸ்கோ, சத்யம், காஸ்யாப், சென்னை ஆன்லைன் போன்ற நிறுவனங்கள் இப்போதைக்கு ஸ்பான்சர் தர்றாங்க. சோலார் சக்தியைப் பயன்படுத்தி, சுரங்கப் பாதையில் உள்ள மின்விளக்குகள், பேருந்து நிலையங்களில் எலக்ட்ரானிக் டிஸ்பிளே டைமிங் பலகைகள் அமைக்கவும் திட்டம் தீட்டியிருக்கோம்.''

''இந்த சோலார் பூத் சிஸ்டத்தை விரைவில் தமிழ்நாடு பூரா விரிவுபடுத்துற திட்டமும் இருக்கு'' என்றவர் ஒரு ரகசியத்தையும் சொன்னார் :

''பொதுமக்களுக்குத் தெரியாத வகையில் ஒவ்வொரு சோலார் பூத்லேயும் மினி வீடியோ கேமரா வைக்கப் போறோம். இந்த குளோஸ்டு சர்க்யூட் சிஸ்டம் மூலமா, சாலை விதியை மீறிப் போற யாரையும் அடுத்த சிக்னல்ல பிடிக்கிற மாதிரி ஒரு சீக்ரட் சிஸ்டத்தை வைக்கப் போறோம்!'' என்றார்!

— ஆர்.சி. ஜெயந்தன்

படங்கள் : வெங்கடேஷ்

# KALKI SHOPPING PAGE



## "கல்கி ஷாப்பிங்"

பக்கங்களில்
விளம்பரம்
செய்ய ரூ.1250/-
மட்டுமே. செய்து
பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை – 97.
போன்: 2345622, 2345623

## மணமக்கள் தேவை

அனைத்து சமூகத்திலும், குறைந்த செலவில் ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

**கம்ப்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்**

| | | | |
|---|---|---|---|
| ஆங்கிலம்/தமிழ் | : | ரூ. | 60/- |
| எதிர்கால கணிப்புடன் (ஆங்கிலம்) | : | ரூ. | 100/- |
| கல்யாண பொருத்தம் | : | ரூ. | 30/- |

TO SOLVE ALL YOUR PROBLEMS CONSULT
DIVINE ASTROLOGER
**THETIYUR V. MAHADEVAN**
WITH PRIOR APPOINTMENT.

## ஸ்வயம்வராலயா

(GOVT REGD)

49/27, லேக்வியூ ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.
☎ 4746427/4742756 (R) 4897241
7A, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ் லஸ், சென்னை - 4
☎ 4984278
88/1, 16th Cross, 6th Main, Malleswaram,
Bangalore - 55 ☎ 3340146

ALL POOJA ENTHRA/RAKSHA
AVAILABLE RATES ON REQUEST

## pranayama & meditation

ONE DAY WORK SHOP (பயிற்று மொழி : எளிய தமிழில்)
(பிராணாயாமம், கிரியை, தாரணை, தியானம், கண் பயிற்சி)
28.5.2000 ஞாயிறு ஒருநாள் மட்டும் 9.30 a.m. to 5 p.m



பயிற்சி இடம் :
**பாவ்லர் மராட்டா சமாஜ் திருமண மண்டபம்**
23, பங்காரு நாயக்கன் தெரு, (எல்லீஸ் ரோடு,
ஸ்ரீனிவாசா ஓட்டல் பின்புறம்), சென்னை - 600 002.
கட்டணம்: Rs. 200/- (சார்ட், நோட்ஸ், மதிய உணவு உட்பட)
Rs. 100/- பெண்கள், பள்ளி மாணவர்களுக்கு மட்டும்.

தலைமை யோகாசன சிகிச்சை நிபுணர்
& சித்த மருத்துவர் ✆ : **432 2634**
**Dr. A.S. ASHOK KUMAR,** M.D.(Acu) D.S.M., L.M.P.(Siddha) N.D.
அவர்கள் நேரடி சிறப்பு பயிற்சியும், சிகிச்சையும் அளிக்க உள்ளார்கள் விவரபுத்தகம், விண்ணப்பம் பெற ரூ. 3 தபால் தலை வைத்து எழுதவும்.

**INDIAN SCHOOL OF YOGA** (Regd.)
22, 2ND CROSS STREET, EAST C.I.T NAGAR,
NANDANAM, CHENNAI - 600 035.

வீட்டில் இருந்து கொண்டே சுயமாக யோகாசனம் கற்க உதவும் அரிய நூல். ஆசிரியரின் ஆரோக்கிய வாழ்வுக்கு வழிகாட்டும் யோகாசனங்கள் (D.Y.T. Text Book) விலை ரூ. 100/- தபாலில் பெற ரூ. 10 சேர்த்து M.O. செய்யவும். (V.P.P. கிடையாது).

## ஏஜெண்டுகள் தேவை

*விரைவில் வெளிவரவிருக்கும்*
**ஹிந்து தர்மத்தின் குரல்**
*(ஆன்மீக தமிழ் மாத இதழ்)*
*மற்றும்*
**VOICE OF DHARMA**
(English Monthly Spiritual Magazine)

தமிழ், ஆங்கிலம் ஆகிய இரண்டு ஆன்மீக மாத இதழிற்கும் டிபாஸிட் கட்டக் கூடிய ஏஜெண்ட்கள் இந்தியா முழுவதும் தேவை.
வாசகர்களிடமிருந்தும்
எழுத்தாளர்களிடமிருந்தும் ஆன்மீக கதை கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.

| | |
|---|---|
| ஆண்டு சந்தா (தமிழ்) | ரூ. 70/- |
| ஆண்டு சந்தா (ஆங்கிலம்) | ரூ. 100/- |

விவரங்களுக்கு அணுகவும்
**ஸ்ரீ சக்ரா பப்ளிகேஷன்ஸ்,**
66, வள்ளுவர் கோட்டம் ஹைரோடு,
நுங்கம்பாக்கம், சென்னை – 600 034.
போன் : 822 21 77, 494 15 02,
825 07 98

“என் சிறு வயதில் டி.வி. கிடையாது. எனவே எப்போதும் ஏதாவது புத்தகத்தைப் படித்துக்கொண்டிருப்பேன். அப்போது, விலங்குகள், பறவைகள், காடுகள் பற்றி நிறையப் படித்தேன். இப்படிப் படிக்க ஆரம்பிக்கும் முன்பு, நான் கையில் உண்டி வில்லுடன் திரிந்து, அணில், ஓணான், பறவைகளை அடிப்பேன். ஆனால், அதன்பின், அவை மீது ஒரு அன்பு ஏற்பட்டது. அவற்றைத் துன்புறுத்துவதை நிறுத்தினேன்” என்கிறார் சேகர் தத்தாத்ரி.

இன்று இந்தியா முழுவதும் காடுகளில், கையில் கேமராவுடன் அலைந்து திரிந்து, வன விலங்குகள், காடுகள் பற்றி டிஸ்கவரி, நேஷனல் ஜியாகிரபிக் போன்ற சானல்களுக்கு டாகுமென்டரி படங்கள் எடுத்துக்கொண்டிருப்பவர் இவர். பிறந்து வளர்ந்தது சென்னையில் தான். இவரது டாகுமென்டரி படங்களுக்குப் பல விருதுகள் கிடைத்திருக்கின்றன.

“எனக்குப் பதிமூன்று வயது இருக்கும் போது, சென்னை பாம்புப் பூங்காவுக்குச் சென்று, அதனை உருவாக்கிய ரோமுலஸ் விட்டேகரைச் சந்தித்தேன். உயிரினங்கள் மீது நான் கொண்ட ஆர்வத்தைக் கூறி, பாம்புப் பூங்காவில் வாலண்டியராகப் பணியாற்றும் விருப்பத்தைச் சொன்னேன். அவர் அனுமதியளித்தார்.

முதலில், பாம்புகள் இருக்கும் கூண்டைச் சுத்தப்படுத்தும் பணியாளர்களுக்குக் கூடமாட உதவிகள் செய்து கொண்டிருந்தேன். அதன்பின், பார்வையாளர்கள், பாம்புகளைத் துன்புறுத்தக் கூடாது என்று எச்சரிக்கும் பணி செய்தேன். பின், விஷமில்லாத பாம்புகளை கவனித்துக் கொள்ளும் பணி. அதன்பின் எந்த வகைப் பாம்பானாலும் கையாளும் நம்பிக்கையும், தைரியமும் ஏற்பட்டது!

“அந்தச் சமயத்தில், அமெரிக்காவிலிருந்து ஒரு தம்பதி, ‘பாம்புக் கடி’ பற்றி டாகுமென்டரி படம் எடுக்க, சென்னை பாம்புப் பண்ணைக்கு வந்தார்கள். அவர்களுக்கு உதவியாக இருந்தேன். அப்போதுதான் கேமராவைக் கையாண்டு, படம் எடுப்பது எப்படி என்று கற்றுக் கொண்டேன். பாம்புப் பூங்கா நூலகத்தில் ஊர்வன பற்றி ஏராளமான புத்தகங்கள் உண்டு. அவற்றை ஆர்வமுடன் படித்து, என் அறிவைப் பெருக்கிக் கொண்டேன்.

“புத்தக அறிவை விட, பிராக்டிகல் அறிவு தான் எனக்கு இன்றும் உறுதுணையாய் உள்ளது. சொக்கலிங்கம் என்ற இருளர் இனத்தைச் சேர்ந்தவர்தான் என் குரு! சொக்கலிங்கமும், மற்ற இருளர் இனத்தவர்களும் சேர்ந்து அமைத்த இருளர் கூட்டுறவு சங்கம் மூலமாக, பாம்புகள் பிடிக்கப்பட்டு, பாம்புப் பூங்காவுக்குக் கொண்டு வரப்படும். விஷப் பாம்புகளிலிருந்து விஷத்தை எடுத்துக் கொண்டு, அவற்றை மறுபடி காட்டுப் பகுதியில் விட்டு விடுவது வழக்கம். வார இறுதி நாட்களில், சொக்கலிங்கம் பாம்பு பிடிக்கப் போகிறபோது, நானும் கூடப் போவேன். அந்த அனுபவங்கள் மறக்க முடியாதவை!

“ஒருநாள் தரமணி பகுதியில் பாம்பு பிடிக்கப் போன போது, ஒரு பெரிய கரையான் புற்றைக் கண்டோம். பக்கத்திலே பாம்பு உரித்துப் போட்ட தோல் கிடந்தது. சொக்கலிங்கம் அதனை உற்றுக் கவனித்துவிட்டு, ‘இந்தப் புற்றுக்குள்ளே கட்டுவிரியன் இருக்கிறது’ என்றார். உடனே புற்றை, கடப்பாரை கொண்டு எச்சரிக்கையுடன் தோண்ட ஆரம்பித்து விட்டார். உச்சி வெயில் நேரம். வியர்க்க, விறுவிறுக்க, அரைமணி நேரம் தோண்டிய பின்பும் கூட, பாம்பு இருப்பதற்கான



# இன்னொரு பாம்பு!

இன்னொரு பாம்பு!
இன்னொரு பாம்பு!
இன்னொரு பாம்பு!

அறிகுறியே தென்படவில்லை. ஆனாலும் மனம் தளராமல் தொடர்ந்து தோண்டினார் சொக்கலிங்கம். பதினைந்து நிமிடம் கஷ்டப்பட்டுத் தோண்டியவர், திடீரென்று, ''ஆ! நான் சொன்னது சரிதான்!' என்றபடியே புற்றுக்குள் கை விட்டு வெளியே இழுத்தார்! கட்டுவிரியன் பாம்பு!

''நான் ஆச்சரியமாக அந்தப் பாம்பையே பார்த்துக் கொண்டிருக்க, சொக்கலிங்கம், 'சேகர்! இன்னும் ஒரு பாம்பு இருக்கிறது' என்று தன் இன்னொரு கையைப் புற்றுக்குள் விட்டு, இன்னொரு பாம்பை வெளியில் இழுத்தார்!

''இரண்டு கைகளிலும், இரண்டு பாம்புகளின் வால்கள்! புற்றுக்குள் பார்த்த சொக்கலிங்கம் கூக்குரலிட்டார்! 'சேகர்! இன்னொரு பெரிய பாம்பும் இருக்குது!' அப்படியே தன் கையிலிருந்த இரண்டு கட்டுவிரியன்களையும் என் கைகளில் கொடுத்துவிட்டு, புற்றுக்குள் கையை விட்டு, பாம்பின் வாலைப் பிடித்து வெளியே இழுத்தார். மிகவும் நீளமான இன்னொரு கட்டுவிரியன்!

"பயங்கர விஷம் கொண்ட இரண்டு கட்டுவிரியன்களையும் எச்சரிக்கையுடன் பிடித்தபடியே, சொக்கலிங்கம் கையிலிருந்த பாம்பைப் பார்த்தேன். அப்போதுதான் அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது! சொக்கலிங்கம் கையில் பிடிபட்டிருந்த கட்டுவிரியன், தன் வாயிலிருந்து எதையோ வெளியில் துப்பியது! ஐயோ! இன்னொரு பாம்பு! அப்போது சொக்கலிங்கம் சொன்னார் : "பசிக்கிறபோது, வேறு எதுவும் கிடைக்காவிட்டால், கட்டுவிரியன், இன்னொரு கட்டுவிரியனையே சாப்பிட்டுவிடும்."

இந்த அனுபவம் என் ஆயுசுக்கும் மறக்க முடியாதது!"

அப்புறம் ஸ்காலர்ஷிப் பெற்று லண்டன் சென்று டாகுமெண்டரி படம் எடுக்கும் கலை பற்றிய பயிற்சிப் படிப்பை முடித்தார் சேகர். டாகுமென்டரி பட விழாக்களுக்குச் செல்லவும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

''என் திறமையைப் புரிந்துகொண்டு டிஸ்கவரி மற்றும் நேஷனல் ஜியாகிரபிக் சானல்காரர்கள், தங்களுக்காக டாகுமென்டரி எடுத்துத் தரும்படிக் கேட்டுக் கொண்டார்கள். அவற்றுக்காக, கன்யாகுமரி முதல் இமயமலை வரை குஜராத்திலிருந்து அஸ்ஸாம் வரை பயணம் செய்தது நல்ல அனுபவம்!'' என்கிறார்.

கடைசியாக சேகர் சொன்ன விஷயம் : ''இந்தியாவின் சொத்து என்றால் அது நம் கல்சரும், நேச்சரும்தான். இரண்டையும் போற்றிப் பாதுகாக்க வேண்டிய கடமை நம் அனைவருக்கும் உண்டு!''

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**




கையடக்கப் பதிப்பு

அமரர் கல்கி
அவர்களின்

# சிவகாமியின் சபதம்

1242 பக்கங்கள்
4 பாகங்களில்

விலை ரூ.175/-

சலுகை விலை **ரூ.100/-**

இயற்கைக்கு இரண்டு சக்திகள் உண்டு. ஒன்று அழகு, இன்னொன்று உண்மை. இந்த இரண்டுமே உள்ள சிவகாமியின் சபதம், வரலாற்று நாவல்களின் கிரீடமாகத் திகழ்கிறது. பழந்தமிழகத்தின் வரலாற்றையும் பண்பாட்டையும் மக்களுக்கு உணர்த்த வேண்டும் என்பதற்காகவும் நாட்டுப் பற்றையும் மக்கள் பெற வேண்டும் என்பதற்காகவும் கல்கி சிவகாமியின் சபதத்தைப் படைத்தார்.

மாமல்லபுரச் சிற்பங்களும் பல்லவ வரலாறும் பன்னிரண்டு ஆண்டுகளாகக் கல்கியின் மனதில் ஊறி ஊறிக் கற்பனை ரசவாதத்துடன் எழுதப் பட்டதுதான் சிவகாமியின் சபதம்!

மகேந்திர பல்லவனுக்கும் புலிகேசிக்கும் நடந்த போர்தான் நாவலின் அடிப்படை. ஆனால் அதை வெறும் போராகக் காட்டாமல், ஆயனச் சிற்பியின் உளியோசையும், சிவகாமியின் நடனக் கலையோசையும், நரசிம்ம பல்லவனுடைய வாளோசையும் அங்கங்கே ஒலிக்கும்விதமாக எடுத்துச் செல்கிறார் கல்கி.

பரதக்கலை, சிற்பக் கலை மட்டுமின்றி இசைக்கலை, ஓவியக் கலையையும் சொல்கிற நாவல் இது.

அஞ்சாநெஞ்சம் படைத்த நரசிம்ம பல்லவர், தமது தந்தையின் விருப்பத்துக்காக - நாட்டுக்காக - சிவகாமியின் மேல் தமக்குள்ள காதலைத் துறந்து பாண்டிய இளவரசியை மணக்கிறார். தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என்பதற்கு இதைவிடச் சிறந்த எடுத்துகாட்டு ஏதுமில்லை.

மொழி நடை என்று சொன்னால், சிவகாமியின் சபதத்தில் கல்கி அவர்கள் கையாண்ட மொழி நடையை வேறெங்கும் பார்க்க முடியாது.

'சாயங்கால மேகங்களெல்லாம் கலைந்து, வானம் துல்லியமாய் இருந்தது. சாயங்காலச் சந்திரன் பொலிந்த ஒளி, அந்தச் சாதாரண கிராமத்தைக் கந்தர்வ லோகமாகச் செய்து கொண்டிருந்தது. சற்றுத் தூரத்தில் கிராமத்தின் கோயிலில், தூங்காமாடத்துத் தங்க ஸ்தூபி தகதகவெனப் பிரகாசித்து, அதற்கப்பால் தெரிந்த தென்னை மரங்களின் உச்சியில் பச்சை மட்டை களின் மீது, நிலாவின் கிரணங்கள் ரசவாத வித்தை செய்து கொண்டிருந்தன. தென்னை மட்டைகள், இளங்காற்றில் இலேசாக அசையும் போதும், பச்சை ஓலைகள் பளிச் சென்று வெள்ளி ஓலைகளாக மாறுவது மீண்டும் அவை பச்சை நிறம் பெறுவதும் ஓர் இந்திர ஜாலக் காட்சி போல் தோன்றின!' எப்படிப் பட்ட மொழி நடை பாருங்கள்! நகைச் சுவை, அரசியல், சூழ்ச்சி, இயற்கையின் சிரிப்பு, இயற்கையின் சீற்றம், உரையாடல் என்று எதுவானாலும் பாமரனுக்கும் புரிகிற மொழி நடை .

பெண்ணியச் சிந்தனைக்குக் குரல் கொடுக்கிற நாவலும் சிவகாமியின் சபதமே! 'நாலும் தெரிய வேண்டும் நல்ல தமிழ்ப் பெண்களுக்கு' என்பதை மகாராணி புவன மகாதேவி மூலம் சொல்கிறார் கல்கி. 'பெண்களென்றால் மட்டமானவர்கள்; அவர்களுக்கு ஒன்றுமே தெரிந்திருக்காது என்று நினைக்கிறாயா?' என்று புதல்வன் மாமல்லனைப் பார்த்து மகாராணி கேட்பதிலிருந்தே பெண்களை எந்த அளவுக்குக் கல்கி உயர்த்தியிருக்கிறார் என்பது புரியும்.

முதல் பாகமான 'பரஞ்ஜோதி யாத்திரை' நமது ஆர்வத்தை தூண்டுகிறது. இரண்டாம் பாகமான 'காஞ்சி முற்றுகை' கவலையடையச் செய்கிறது. மூன்றாம் பாகம் 'பிட்சுவின் காதல்' பொங்கியெழ வைக்கிறது. நான்காம் பாகமான 'சிதைந்த கனவு' நம்மையெல்லாம் நெகிழ வைக்கிறது.

பதினெட்டு வயது இளைஞனாக அறிமுகமாகும் பரஞ்ஜோதி, படைத் தளபதியாகி இறுதியில் சிவத் தொண்டனாக இறைப் பணியில் ஈடுபடுகிறான்!

இவை எல்லாவற்றுக்கும் மேலாக, சீதையாக - கண்ணகியாக சிவகாமியின் சபதம் நிறைவேறுகிறது.

இந்த நாவலினைப் படிக்கும்போது அருமையான திரைக்கதை அமைந்த சிறந்த திரைப்படம் பார்ப்பது போன்ற எண்ணத்தினைத் தோற்றுவிக்கும்.

அந்தக் கருத்தரங்குக்கு அவன் ஏறக்குறைய ஒரு மணி நேரம் தாமதமாக வந்து சேர்ந்தான். அதுவும் ஒருவிதத்தில் நல்லதாகப் போய்விட்டிருந்தது. அமைச்சரும் மற்றும் பல முக்கியப் பிரமுகர்களும் பேசிவிட்டுப் போயிருந்தனர்.

மிகையான அலங்காரத்தில் இருந்த ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி, நுனி நாக்கு ஆங்கிலத்தில் தன்னைப் பற்றிய விவரங்களைக் கொடுத்துக் கொண்டிருந்தார். கருத்தரங்கத் தலைப்பைப் பார்த்தான். தெளிவான தமிழில் 'மக்கள் தொகையும் பொருளாதாரமும்' என்று இருந்தது.

"எனது முதல் பையன் டெட்ராயிடில் கம்ப்யூட்டர் இன்ஜினியர். அவன் மனைவி இந்தியாவின் கிராம வளர்ச்சிக்காக, வெளிநாடுகளில் வசிக்கும் இந்தியர்களைத் திரட்டி ஓர் அமைப்பை நடத்திக் கொண்டிருக்கிறாள்.

# Ms. இந்தியா



இரண்டாவது மகன் ஜப்பானில் நரம்பியல் துறையில் ஆராய்ச்சி செய்கிறான். என் மகள் இன்டீரியர் டெகரேஷனில் ஆர்வமிக்கவள். நான் ஒரு புரொபஸர். குழந்தைத் தொழிலாளர்கள் சம்பந்தமாக ஒரு புத்தகம் எழுதிக் கொண்டி'ருக்கிறேன். பல கவிதைகள் எழுதியிருக்கிறேன்..."

திருமதி நந்தகுமார் என்ற அந்தப் பெண்மணி பேசிக் கொண்டிருக்கையில், வலக்கைப் பக்கம் அமர்ந்திருந்த ஒருவர் எழுந்திருந்தார். "ஸாரி மேடம். நானும் என்னைப் பற்றிய அறிமுகத்தில் ஒன்றைச் சொல்ல மறந்து விட்டேன். நானும் நிறைய கவிதைகள் எழுதியிருக்கிறேன். அதோடு, 'மக்கள் நலன்' என்ற ஒரு கையெழுத்துப் பத்திரிகையும் நடத்திக் கொண்டு வருகிறேன்'' என்று சொல்லி அமர்ந்தார்.

அவனுக்கு அருகில் நின்று கொண்டிருந்த ஒருவர், 'இன்ட்ரொடக்ஷனுக்கே ஒரு மணி நேரம் ஆகும் போலிருக்கிறது. டீ டைம் ஆகிவிட்டது. முடிக்கிறார்களா பாருங்க. அவரவர் மைக் கிடைத்தால் போதுமென்று தங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறாங்க' என்று புலம்பினார்.

அடுத்து, ஜிப்பாவில் இருந்தவர், 'என் பேரு முத்துக்கிருஷ்ணன். மாவட்டப் பெண்கள் நல பாதுகாப்பு இயக்கத் தலைவர். நாங்கதான் சமீபத்திலே நடந்த மனித உரிமைப் போராட்டத்திற்குக் காரணமாயிருந்தோம். நாட்டிலே நடக்கிற திட்டங்கள் எதுவுமே பெண்களைக் கருத்திலே கொண்டு போடுவதில்லை. அதனாலே இன்னும்

பெரிய லெவல்லே போராட்டம் நடத்த லாம்னு இருக்கோம்' என்று ஆவேசமாகப் பேசி உட்கார்ந்தார்.

ஒரு வெள்ளைக்காரர் எழுந்தார். தூய தமிழில் 'அனைவருக்கும் வணக்கம்' என்று ஆரம்பித்து ஆங்கிலத்தில் தொடர்ந்தார்...

"நான் மைக்கேல் கிரீவ்ஸ். இந்தியா போன்ற மக்கள் தொகை நெருக்கடி மிகுந்த நாட்டில் பொருளாதாரச் சூழல் பாதிக்கப் பட மக்கள் எவ்விதத்தில் காரணமாயிருக் கிறார்கள், நாம் எவ்விதத்தில் இதற்காகப் பாடுபட வேண்டும் என்பதில் இந்தியர் களுக்கு ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்த விரும்புகிறேன்" என்று சொல்லி விட்டு அமர்ந்தார். அடுத்தாற்போல உடனடியாக எழுந்தவர் ஒரு அதிகாரி.

"நான் வெங்கட்ராமன். அதிகாரின்னு சொல்றதை விட

## வைகைச்செல்வி

எழுத்தாளர்னு சொல்லிக்க ஆசைப்பட றேன். எங்க மேகஸீன்ல நான் எழுதாத விஷயமே கிடையாது. சமீபத்திலே நியு மில்லினியமும் மக்கள் தொகையும்' என்று ஒரு ஹைகூ எழுதியிருக்கிறேன்..."

இவனருகில் நின்று கொண்டிருந்தவர், 'இவரு எழுதறதை வேறு எவன் போடுவான்? ஆபீஸ் மாகஸின்லேதானே போட முடியும்?' என்று கமெண்ட் அடித்தார்.

கலந்து கொள்ள வந்திருந்தவர்களில் பலரும் தேநீர் இடைவேளையின்போது மைக்கேல் கிரீவ்ஸைச் சுற்றிலும் நின்று கொண்டிருந்தனர். சிலர் அறிமுக உரையில் கூறியதையே மிகவும் விஸ்தரித்து அவரிடம், 'தாங்கள் எப்படியெல்லாம் நாட்டு நலனுக் காக, பிற்பட்டோர் மற்றும் பெண்களுக் காகப் பாடுபடுகிறோம்' என்று பட்டியல் போட்டு கூறிக் கொண்டிருந்தனர். டைரக்டர் சம்பந்தம் காப்பி, பிஸ்கட் எதையும் தொடாமல், வெளியே வர, அதைப் பார்த்த திருமதி நந்தகுமார் டைரக்டரை நோக்கி அவசரமாக ஓடி வந்தார். ஆனால் முத்துக்கிருஷ்ணனோ, டெட்ராயிட்டில் இருக்கும் அந்த அம்மாவின் மருமகளுடைய முகவரியை வாங்குவதற்காக அந்த அம்மா பின்னால் ஓடி வந்தார். டைரக்டர் யாரையும் கவனிக்காதவர் போன்ற பாவனையில் ஒருங்கிணைப் பாளரிடம் ஏதோ சில உத்தரவு களைப் பிறப்பித்து விட்டு, அவசர அவசரமாகக் காரில் ஏறிப் பறந்து விட்டார். திருமதி நந்தகுமாருக்கு முகம் என்னவோ போலாகி விட்டாலும், முத்துக்கிருஷ்ணன் தன்னருகே நிற்பதைப் பார்த்த வுடன் கஷ்டப்பட்டுப் புன்னகை புரிந்தார்.



"மேடம், நீங்க கவிதைத் தொகுப்பு ஏதும் வெளியிட்டி ருக்கீங்களா?" என்றவாறு பேச்சை ஆரம்பித்தார் முத்துக் கிருஷ்ணன்.

கவுண்டரில் அமர்ந்து வந்திருப்பவர்களின் பெயர்களைப் பதிவு செய்யும் பெண்மணியிடம் வந்த ஆல்பர்ட், "மேடம், நான் லேட்டா வந்தேன். அத

னாலே இந்த பேக் மற்றும் கோர்ஸ் மெட்டீரியல்ஸ் வாங்கலை. இப்ப தர்றீங்களா?'' என்று கேட்டார். அந்தப் பெண்மணி தன்னிடம் இருந்த லிஸ்ட்டை ஒருமுறை படித்துப் பார்த்துவிட்டு, 'உங்க பெயர் இல்லையே' என்றாள்.

"உங்க அலுவலகத்திலிருந்து போன்லே அழைப்பு வந்ததாலேதான் நான் வந்தேன். நீங்க வேணும்னா ஆர்கனைசரைக் கேட்டுப் பாருங்க'' என்று பிடிவாதமாக நின்றார்.

அதற்குள் தேநீர் இடைவேளை முடிந்து மீண்டும் கருத்தரங்கம் ஆரம்பித்தது. சிறிது நேரத்தில் அங்கு வந்த ஒருங்கிணைப்பாளரிடம் அந்தப் பெண்மணி, ஆல்பர்ட்டின் கோரிக்கையைப் பற்றி முறையிட, அவர், "இதையெல்லாம் கண்டுகொள்ளக்

## குட்டி குரான்!



இது உலகின் மிகமிகச் சிறிய குரான் புத்தகங்களுள் ஒன்று. நீளம் இரண்டரை செ.மீ., அகலம் இரண்டு செ.மீ.க்கும் குறைவு. அட்டையில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்ட இப்புத்தகம் ஒண்ணரை மீட்டர் பருமனானது. மிகமிக மெல்லிய தாள்களில் அச்சிடப்பட்டது. மைசூரைச் சேர்ந்த சையத் டப்ரிஸ் என்பவரிடம் இப்போது இருக்கிறது. ஐந்து தலைமுறை கடந்து வந்த புனிதப் பரிசு!

கூடாதும்மா. இவங்கள்லாம் செமினாருக்கா வர்றாங்க? இந்தப் பைக்காக வர்ற கூட்டம்'' என்றபடியே சட்டை செய்யாமல் போய் விட்டார்.

திடீரென்று வெங்கட்ராமன் வெளியே வர, கவுண்டர் பெண்மணி மரியாதையுடன் எழுந்து நின்றாள். அதற்குள் பத்திரிகை ரிப்போர்ட்டர் செல்வி சுமித்ரா, வெங்கட்ராமன் பின்னாடியே ஓடி வந்தாள். 'ஸார் உங்க டிபார்ட்மெண்டிலே மக்கள் தொகையைக் கட்டுப்படுத்த என்ன நடவடிக்கை எடுக்கிறது?' என்று கேட்டுவிட்டு, பதிலை எழுதத் தயாராக குறிப்புப் புத்தகத்தைத் திறந்து வைத்துக் கொண்டாள்.

''நான் அவசரமா ஒரு ஃபைலில் கையெழுத்துப் போடணும். இப்ப இங்கே பேச நேரமில்லே. காரிலே ஏறிக்கங்க. ரன்னிங் டைமில் உங்களுக்கு இன்டர்வ்யூ தந்திடறேன். எனக்கு நேரம் ரொம்ப முக்கியம்'' என்றபடி ரிப்போர்ட்டரோடு காரில் ஏறப் போகையில், எங்கிருந்தோ முளைத்தார் திருமதி நந்தகுமார். வெங்கட்ராமன் அப்படியே நின்றார்.

"ஹலோ மிஸ்டர் வெங்கட்! என்ன அதற்குள் கௌம்பிட்டீங்க? கொஞ்சம் பேசணுமே."

வெங்கட்ராமன் அசடு வழிய, "காலையிலே பார்த்தவுடனே பேச நினைத்திருந்தேன். மந்திரி வந்ததாலே கொஞ்சம் பிஸியா இருந்துட்டேன். சொல்லுங்க. பொண்ணு எப்படியிருக்கா?''

பேச்சு ஏறக்குறைய ஐந்து நிமிடங்கள் தொடர்ந்தது. ஆனாலும் திருப்தியடையாத திருமதி நந்தகுமார், ''ஆபீசுக்குத்தானே போறீங்க? நானும் வர்றேனே... அப்படியே ஒங்க அலுவலகத்தையும் பார்த்த மாதிரி இருக்கும்.'' நிறைய லிப்ஸ்டிக்கோடு சிரித்தாள்.

"ஓ வித் பிளஷர்" என்றபடி, காத்துக் கொண்டிருந்த ரிப்போர்ட்டர் சுமித்ராவிடம், "ஆபீசுக்குப் போய்ட்டு திரும்பி வருவேன்... அப்ப பேசலாம்..'' என்று கூறிவிட்டுக் காரில் திருமதி நந்தகுமாரை ஏற்றிக் கொண்டு கிளம்பினார்.

அப்போது வெளியே வந்த வேல்ராஜன் கவுண்டர் பெண்மணியிடம், "மேடம் நான் கொஞ்சம் செக்ரடேரியட் வரை போகணும். ரொம்ப அவசரம். யாராவது கேட்டால் கொஞ்சம் சொல்லிடுங்க'' என்றபடி தன்னோடு வந்திருந்தவருடன் ஹாலை விட்டுக் கிளம்பினார். அந்தப் பெண் ஏதும் சொல்லவில்லை. ஹாலை விட்டு வெளியே வந்த வேல்ராஜன், தன்னோடு வந்தவரிடம், "புராஜெக்ட் சப்மிட் பண்ணி நாலைஞ்சு மாசமாகுது. கிணத்திலே போட்ட கல்லு மாதிரி கெடக்கு. சீக்கிரம் இவனுங்க ஃபண்ட் கொடுக்க மாட்டேன்றாங்க. நா செமினாருக்கு வந்ததே இதற்காகத்தான். ட்ரெயின் ஃபேர், அக்காமடேஷன் எல்லாம் இவனே கொடுக்கிறான். செமினாருக்கும் வந்தது மாதிரி இருக்கும். மெட்ராஸிலே நம்ம வேலையைப் பார்த்தது மாதிரியும் இருக்கும். ஒரு கல்லிலே ரெண்டு மாங்கா... ஏதோ வீடியோ போடுறானாம். அதைப் பார்த்து என்ன பண்றது? அந்த நேரத்திலே நம்ம வேலைய முடிச்சிட்டு

கரெக்டா சாப்பாட்டுக்கு வந்திடலாம். ஆனால் இந்த ஆபீசுக்குப் போறேன்னு சொல்ல முடியாது. செக்ரட்டேரியட்னு சொன்னால்தான் பயப்படுவாங்க. நீங்களும் வர்றீங்களா?'' என்று கேட்டார்.

"அய்யய்யோ இந்த வெயிலிலா... உள்ளே ஏசி ஜில்லுனு இருக்கு. நீங்க போய்ட்டு எப்படியும் லஞ்சுக்கு வந்திருங்க. நா போய் அந்தப் படத்தைப் பார்க்கிறேன்" என்றார், கூட இருந்தவர்.

**ஹா**லில் குறைந்தளவே கூட்டம். உள்ளே படம் ஓடிக் கொண்டிருந்தது. ஒரே நிசப்தம். அது ஒரு டாக்குமெண்டரிப் படம். திரையில், இரண்டுங்கெட்டான் நிலையில் உள்ள, பதினாலு வயதுப் பெண் உள்ளே இருந்த மொத்தக் கூட்டத்தின் உணர்வுகளையும் அழுத்தி வைத்திருந்தது. பீடி சுற்றியபடியே அச்சிறுமி பேசிக் கொண்டிருந்தாள்.

"நா பீடி சுத்தினாத்தான் வீட்லே கஞ்சி காச்ச முடியும். என் தம்பி மட்டும் பள்ளிக்கோடம் போறான். சின்னத் தங்கச்சி அம்மா கூடத்தான் எப்பவும் இருப்பா. எனக்குக் கல்யாணம் செய்யணும்னா நெறையப் பணம் வேணும்னு அம்மா சொல்றாங்க. எங்கண்ணே மெட்ராஸில இருக்கான். இப்ப வீடு ஒழுகுது... அண்ணன் சம்பாதிச்சு ஒழுகாத வீடு கட்டுவான்."

"இந்தப் பொண்ணோட பேரே என்னன்னு தெரியலையே" என்று கேட்டாள் ஒரு மாணவி.

அவன் கண்களை மூடிக் கொண்டான். இந்த டாக்குமெண்டரியை இயக்கும் போது அந்தச் சிறுமி, அவனிடம் ஆசையாக எனக்கு 'ஒரு குச்சி ஐஸ் வாங்கித் தர்றீங்களா?' என்று கேட்டது மீண்டும் ஞாபகத்தில் வந்தது.

தென்கோடியில் ஒரு கிராமத்தில் வாழும் அந்தச் சிறுமிக்குப் பெயர் தேவையில்லை. அறிமுகம் தேவையில்லை.

"ஏன் சார், உங்களைத்தான்! இந்தப் பொண்ணு பேரு... என்னங்க?" என்று விடாமல் அந்த மாணவி கேட்கவே, சட்டென்று அவன் சொன்னான் : "இந்தியா". ○

## விளாசுகிறார் வாழப்பாடி!

**வ**ன்னியர் சங்கத்தின் மாநில விழிப்புணர்வு கூட்டத்தில் ஆவேச உரையாற்றிவிட்டு, தமது வீட்டில் தொண்டர்களைச் சந்தித்துக் கொண்டிருந்தார் வாழப்பாடி.

''உங்கள் மீது சில குற்றச்சாட்டுக்களைத் தொகுத்து பா.ம.கவினர் வெளியில் புத்தகம் போடுவதாகச் சொல்கிறார்களே!'' என்று கேட்டோம்.

''தாராளமாக புத்தகம் போடட்டும். என் வாழ்க்கை திறந்த புத்தகம். எனக்குள்ள சொத்துக்கள், வருமானம் ஆகியவற்றை நான் பாராளுமன்றத்தில் பதிவு செய்திருக்கிறேன். யார் வேண்டுமானாலும் தெரிந்து கொள்வதற்கு வசதியாக பாராளுமன்ற நூலகத்தில் அது இருக்கிறது'' என்றார்.

''வாழப்பாடியார் வாயில் விழாத தலைவர்கள் கிடையாது; இப்போது என் முறை என்கிறாரே ராமதாஸ்..?''

''இப்படிச் சொல்வதன் மூலம் அந்தத் தலைவர்களின் வரிசையில் தம்மையும் சேர்த்துக் கொண்டு 'மாபெரும் உருவம்' காட்ட முயற்சி செய்கிறார். அவ்வளவுதான்!''

''அடுத்த சட்டமன்றத் தேர்தலில் பா.ம.க.– தி.மு.க. கூட்டணியிலிருக்கும் பட்சத்தில் அதிக இடங்கள் கேட்கும். பா.ம.கவினர் பேரம் பேசக் கூடும் என்பதால், உங்கள் மூலம் வன்னியர் மத்தியில் பிளவை உண்டாக்க கலைஞர் ரகசியமாக முயற்சி செய்கிறார் என பா.ம.கவினர் சொல்கிறார்களே?''

''அது போலத் தரகு வேலை பார்க்கும் வழக்கம் எனக்கில்லை.''

''த.ரா.காவும், பா.ம.கவும் ஒரே கூட்டணியில் இருந்து தேர்தலைச் சந்திக்கும் வாய்ப்பு குறைந்து வருகிறதா?''

''ஒரே உறையில் 24 கத்திகள் போன்று தேசிய ஜனநாயகக் கூட்டணி செயல்பட்டு வரும் போது, தமிழ் நாட்டைப் பொறுத்தவரை கூட்டணியில் இருக்கக் கூடாதா என்ன?''

சந்திப்பு: ப்ரியன்

**ஸ்ரீ**ராமபிரானை நினைக்கும்போது கம்பரும் வால்மீகியும் நினைவுக்கு வருகிறார்கள். கண்ணனை நினைத்துக் கொண்டால் பாகவதமும் வியாசரும் நினைவுக்கு வருகிறார்கள். முருகப் பெருமானை நினைத்துக் கொள்ளும் போதெல்லாம் நம் மனத்தில் தோன்றுபவர் முருகன் புகழ்பாடிய அருணகிரிநாதர்.

இந்த முருகபக்தர்தான் தமிழ்நாட்டை எப்படிச் சுற்றி வந்திருக்கிறார்! ஒரு முருகன் கோயில் விடாமல் சென்று தரிசித்திருக்கிறார். அவர் பாடிய பாடல்கள் எல்லாம் கிடைத்திருந்தால் இன்னும் எத்தனை கோவில்களைப் பற்றிய தகவல்கள் கிடைத்திருக்குமோ.

*வால சந்த்ர சூடி சந்த வேதமந்த்ரரூபி அம்பை*
*வாணி பஞ்ச பாணி தந்த முருகோனே!*

"வால சந்த்ர என்பதைப் பாலசந்திரன் என்று புரிந்து கொள்ள வேண்டும். பிறை சூடியான ஈசனும், சந்தம் உள்ள வேதமந்திர சொரூபத்தை உடைய சரஸ்வதியின் அம்சமாகவும் ஐந்து பாணங்களைக் கையில் உடையவளுமான அம்பிகை தந்த முருகனே!'' என்று அழைத்துவிட்டு

*மாயை ஐந்து வேகம் ஐந்து பூதம் ஐந்து நாதம்ஐந்து*
*வாழ்பெரும் சராசரங்கள் உறைவோனே!*

என்று அண்ட சராசரங்களில் உறையும் முழு முதற் கடவுளாகவே முருகனைக் காண்கிறார்.

தணிகைமணி செங்கல்வராயபிள்ளை எழுதிய திருப்புகழ் உரையொன்று கிடைத்தது.

மாயை ஐந்து என்பது என்னவென்று பார்த்தேன். நமக்குள்ளே இருக்கும் சைதன்யத்தை மறைத்தல், ஜகத்தை உண்மையென்று நினைத்தல், விஷயசுகங்களில் மோஹம், சத் என்ற ரூபத்தை அறியாதிருத்தல், உணர்வுகளின் அலைக்கழிப்பு என்ற அவித்தை. வேகம் ஐந்து என்பதற்கு சிற்சக்தி, பராசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியா சக்தி என்றும் இன்னும் பல விளக்கங்களும் தந்திருக்கிறார். "மனோவேகம், வாயுவேகம், ஒலிவேகம், ஒளிவேகம், அசுவவேகம்'' என்றும் பொருள் கூறுகிறார்.

பூதம் ஐந்து நமக்குத் தெரிந்தது தானே. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்.

நாதம் ஐந்து:- தோல் கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, கஞ்

• ஆறுமுகர்



சக்கருவி (வெண்கலத்தால் ஆன தாளம் போன்ற கருவிகள்) மிடற்றுக் கருவி. குரலால் எழுப்பும் நாதம்.

இவையெல்லாம் நிறைந்தது சராசரங்கள். அதன் ஒவ்வோர் அணுவி லும் உறைபவன் குமரன்.

வேலை யன்பு கூர
வந்த ஏக தந்த
யானை கண்டு
வேடர் மங்கை ஓடி
அஞ்ச அணைவோனே.
வீரமங்கை வாரிமங்கை
பாரின்மங்கை மேவுகின்ற
மேரு மங்கை யாள வந்த
பெருமானே.

வீரலக்ஷ்மியும், மகா லக்ஷ்மி யும், பூமிதேவியும் உறைகின்ற உத்தரமேரூரில் வாழ்கின்ற பெரு மானே என்று இந்தத் தலத்தைச் சிறப்பிக்கிறார்.



• உத்ஸவ முருகன்

இந்தத் தலம் என்பது உத்தர மேரூர் என்று புகழ்பெற்ற ஊர். காஞ்சியிலிருந்தும் போகலாம். செங்கல்பட்டிலிருந்து 30 கி.மீ. தொலைவில் உள்ளது.

# உத்தரமேரூர் குமரன்

## ஆனந்தி

உத்தரமேரூர் மிகச் சிறந்த வைணவத் தலம் என்பது எல்லாருக்கும் தெரியும். கல்வெட்டுக்களால் ரொம்பப் புகழ், வைகுண்டப் பெருமான் ஆலயத்துக்கு. கலைக் களஞ்சியத்தைப் புரட்டிப் பார்த்தால் ரொம்ப சுவாரஸ்யமான செய்திகளைத் தெரிந்து கொள்ளலாம்.

உத்தரமேரூர் இன்று இருக்கும் இடத்தில் பண்டை நகரம் ஒன்று புதைந்து கிடப்பதாகக் கருதப்படுகிறது. சோழ, பல்லவ அரசர்களின் கல்வெட்டுக்கள் இந்த ஊரில் கண்டெடுக்கப்பட்டன. மேற்கில் உள்ள ஏரிக்கு வைரமேகத் தடாகம் என்று பெயராம்.

வாரியம் என்ற சொல்லை இப்போது அடிக்கடி கேட்கிறோம் அல்லவா? இந்தச் சொல் உத்தரமேரூர் கல்வெட்டில் இருக்கிறது. முதலாவது பராந்தக சோழனின் பன்னிரண்டாவது ஆண்டில் ஐவர் அடங்கிய வாரியம் என்ற செயற்குழுவின் நியமன முறை குறிக்கப்பட்டுள்ளது. குடவோலைத் தேர்தல் முறை அப்போது இருந்தது. தகுதியுள்ள ஊர்ப் பெரியவர்களின் பெயர்களை எழுதிக் குடத்தில் போட்டு ஒரு சிறு குழந்தையை விட்டு எடுக்கச் செய்வது. 922ல் பொன் வாரியம் என்னும் ஒரு குழு அமைக்கப்பட்டது. ஊர் மக்கள் எட்டுப் பேர் உறுப்பினர்.

இந்த ஊரில் ஏழு கோவில்கள் இருந்தனவாம். இங்கே விராட ராஜன் வந்து அரசாண்டதாக ஒரு செய்தி. ராஜேந்திர சோழ சதுர்வேதி மங்கலம் என்ற பெயருடன் ஒரு காலத்தில் விளங்கியிருக்கிறது

இந்த ஊர்.

அருணகிரி நாதர் சான்றுபகர்கிறார். ''ஆனைமத்தக வோனும் ஞான முற்றியல் வோரும் ஆயிரத்திருநூறு மறையோரும் வாழும் உத்தர மேரூர் மேவி'' என்று பாடுகிறார்.



• சங்காபிஷேகத்துக்கு ஆயத்தங்கள்

முருகப் பெருமானின் திருக்கோயில் பிற்காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும். தவம் செய்யும் கோலத்தில் கிட்டத்தட்ட ஆறடி உயரமுள்ள நெடிய குமரன். கருவறையில் முருகப் பெருமானுக்கு வலது பக்கத்தில் சிவலிங்கம். முருகனின் கை சற்றுச் சாய்வாக இருப்பதைச் சுட்டிக் காட்டினார் குருக்கள். தனியாகத் தந்தையைப் பூஜிக்கிறார்! சூர சம்ஹாரத்துக்கு முன்பு உள்ள தவக் கோலம் என்று விளக்கினார் குருக்கள். உற்சவர் தம்பதியாகக் காட்சித் தருகிறார். சுக்ரவார அம்மனின் பெயர் "கஜவல்லீ" வள்ளியும் தேவகுஞ்சரியும் ஒன்றாக இணைந்த வடிவம்.

மறையொலி செவிகளை நிரப்புகிறது. பீடத்தின் மீதும் தரையிலும் சங்குகளில் தீர்த்தம் வைத்து ஜபித்துக் கொண்டிருக்கிறார்கள். கோவில் அமைதியாகவும் அழகாகவும் இருக்கிறது. பல்வேறு மணங்கள் நமக்குப் புத்துணர்வு அளிக்கின்றன. அர்ச்சனை செய்துவிட்டுத் தரும் விபூதியின் மணம், புஷ்பங்களின் சுகந்தம், பழங்களின் வாச்னை எண்ணெய் விளக்கின் புகை மணம் என்று கோவிலுக்கென்றே உரிய புனித மணங்கள். இப்போதெல்லாம் சாம்பிராணியின் மணம் மாத்திரம் நுகரக் கிடைப்பதில்லை. இது ஒரு இழப்புத்தான்.

முருகப் பெருமானின் நெடிய திருக் கோலத்தைக் கண்டு மகிழ்கிறோம். ஒரு குழந்தை. ஐந்து வயதிருக்கும். தாயார் கொடுத்த எண்ணெயை அகல் விளக்கில் மெல்ல சிந்தாமல் விடுகிறான். இந்தக் குழந்தை கொடுத்து வைத்தவன். எத்தனை குழந்தைகளுக்கு இந்த மாதிரி பழக்கம் ஏற்படுகிறது! குழந்தையிடம் கொடுத்து எண்ணெய் வார்க்கச் சொன்ன தாயாருக்கு ஒரு "ஜே" போடலாம்.

உற்சவ மூர்த்திகள் எல்லாம் அழகாக இருக்கின்றன. எந்தப் புண்ணியவான் செய்து வைத்த மூர்த்திகளோ? கஜவல்லி நான்கு கைகளும் ஒரு முகமும் கொண்ட குமரன்-வள்ளி தேவசேனாசமேதராக, நடராஜர்-சிவகாமி அம்மை, மயில் வாகனத்தின் மீது அமர்ந்த ஆறுமுகப் பெருமான். எப்படித்தான் இந்த மூர்த்திகளைச் செய்தார்களோ? நமது நாட்டுக் கோவில்கள் ஒவ்வொன்றும் ஒரு கலைக் கருவூலம்.

பிராகாரத்தில் உள்ள கணபதியைத் தரிசித்து மகிழ்கிறோம். இவர் சின்னக் குழந்தையைப் போல நான்கு கைகளிலும் கொழுக்கட்டையை வைத்துக் கொண்டிருக்கிறார். ஆயுதங்கள் இல்லாத பால கணபதி துதிக்கையிலும் கொழுக்கட்டை. சந்தோஷமாக வீற்றிருக்கிறார் விநாயகப் பெருமான். தவம் செய்யும் தம்பியின் பசியாற்றக் கொண்டு வந்தாரோ!

திருக் கார்த்திகை விழா இங்கு வெகு விமரிசையாக நடந்து வருகிறது.

கோவிலைச் சுற்றிச் சிறு குன்றுகள் இருக்கின்றன. இந்தக் குன்றுகளை விட்டு விட்டுக் குமரன் சமதரையில் உயரமான பீடம்கூட இல்லாமல், நமக்காக வந்து நிற்கிறார்.

அபிஷேகமும் அலங்காரமுமாக தவக் கோலத்தில் ருத்ராக்ஷமும், சடைமுடியும், நாகாபரணமுமாக சுப்ரமண்ய சுவாமியைத் தரிசிக்கக் கிடைத்தது.

**மு**ருகனைப் பற்றிப் பாடும்போதெல்லாம் அருணகிரிநாதர் மாமனையும் பாடாமல் இருப்பதில்லை. ஆழியில் துயில்

வோனும் மா மலர்ப் பிரமாவும் வாழும் உத்தரமேரூர் என்று பாடுகிறாரே.

முருகனுக்குப் பக்கத்திலேயே உள்ள சுந்தர வரதராஜப் பெருமானையும் தரிசித்து விடலாம்.

அஷ்டங்க விமானம் என்ற அமைப்பு கொண்ட கோயில். மூன்று தளங்களில் ஸ்ரீவாசுதேவன் வரந்தரும் வரதனாக ஒன்பது கோலங்களில் தரிசனம் தருகிறார். இந்தக் கோவில் அமைப்பை ஒட்டியே பெஸன்ட் நகரில் அஷ்டலக்ஷ்மி கோவில் கட்டப்பட்டிருக்கிறது என்கிறார்கள். இந்த மாதிரி அமைப்புள்ள ஒரு அரிய கோவிலை திருக்கோஷ்டியூரில் காணலாம்.

சுந்தரவரதரின் நின்ற திருக்கோலத்தைப் பார்ப்பதா, உற்சவமூர்த்தியின் அழகையும் அலங்காரத்தையும் பார்த்து வியப்பதா என்று புரியவில்லை. ஸ்ரீதேவி பூதேவி சமேதராக நிற்கும் இவர் சுந்தரவரதன் தான். சந்தேகமே இல்லை.

பிராகாரத்தில் வலம் வரும்போது ஒவ்வொரு பக்கமும் பகவான் காட்சி தருகிறார். அச்சுதவரதன், அநிருத்தவரதன் கல்யாண வரதன், ஆண்டாள் எல்லாரும் சேவை சாதிக்கிறார்கள். மேல் தளத்துக்குப் போனால் வைகுண்ட வரதர் இருந்த கோலம். கிருஷ்ணார்ச்சுனர், இன்னொரு பக்கம் யோகத்தில் ஆழ்ந்திருக்கும் நரசிம்ம மூர்த்தி, திரும்பினால் லக்ஷ்மி வராஹ மூர்த்தி. அதற்கும் மேலே சயனம் செய்யும் கோலத்தில் ரங்கநாத வரதர். இப்படியாக ஒன்பது விதமாக தரிசனம் தந்து ஜீவாத்மாக்களைத் தம்மிடம் ஈர்க்கப்பார்க்கிறார் அந்தப் பரமாத்மா. அது அவ்வளவு சுலபமா அவருக்கு. நம்மைத்தான் மாயத்திரை மூடியிருக்கிறதே.

இரண்டு கோவில்களிலும் பூஜைகள் நிறைவாக நடைபெறுவதைப் பார்த்து மனம் நிறைகிறோம்.

ஸ்ரீ சுந்தர வரதருக்கு ஆராதனை செய்து தந்த கற்கண்டைச் சுவைக்கிறோம். சற்று நேரமாவது மனமும் நாவும் இனிக்கும் படியான அனுபவத்தில் திளைக்கிறோம்.

"இந்த ஊரைச் சுற்றி மங்கலம் என்ற பெயருடைய ஊர்கள் இருக்கின்றன. இந்த ஊர் ரொம்ப சிறப்பு வாய்ந்த தலம். மங்களமான க்ஷேத்ரம்" என்றார் முருகன் கோவில் குருக்கள். அந்த மங்களத்தில் நமது நாடு முழுவதும் திளைக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம். முருகன் கோவில் பிராகாரத்தில் கோபுர வாசலில் உள்ள நாகலிங்க மரம் பூத்து மணம் வீசுகிறது. வில்வம்தான் தல விருட்சம் என்றார் குருக்கள்.

கோபுர வாசலில் உள்ள குளம் பாசி மூடி இருக்கிறது. உத்தரமேரூர் என்ற புகழ் பெற்ற வரலாற்றுப் பிரசித்தி பெற்ற, மங்கலங்களால் சூழப்பட்ட ஊரில் வசிப்பவர்கள் திருக்குளத்தைச் சற்றுக் கவனித்தால் மங்கலம் கூடுமே.

படங்கள்: ஸ்ரீஹரி

• வரதராஜ பெருமாள் கோயில்





# கிலி கிளப்பிய கிளைடர்!

எங்கெங்கு காணினும் சிறப்புக் காவல் படையினர்தான்! எங்கே? இமாசலப் பிரதேசத்தில் இருக்கிற கோடை வாசஸ்தலமான மணாலியில்!

பிரதமர் வாஜ்பாய், தம பிரதமர் பொறுப்பின் பிரஷரிலிருந்து ரிலாக்ஸ் செய்து கொள்ள வந்திருந்த நாள்தான்.

அவர் தங்கியது என்னவோ மூன்று நாட்கள் தான் என்றாலும், வருவதற்குப் பல நாட்கள் முன்பிருந்தே கெடுபிடிகள் ஆரம்பமாகிவிட்டன. மணாலியில் உள்ள முக்கியமான ஓட்டலான 'மணாலி ஹாலிடே இன்'னின் அறைகள் பிரதமருடன் வரும் அதிகாரிகள், பாதுகாப்புப் படையினர் ஆகியோருக்காக ரிசர்வ் செய்யப்பட்டு விட்டன. அவசரம் அவசரமாக ஓட்டல் அலங்கரிக்கப்பட்டது. துப்புரவுப் பணிகள் துரிதப்படுத்தப்பட்டன. புதிய, வெளிச்சமான விளக்குகள் பொருத்தப்பட்டன. ஓட்டல் தொழிலாளர்களுக்கு விசாரணைக்குப் பின், அனுமதி பாஸ் வழங்கப்பட்டது.

இத்தனை நடந்தாலும், பிரதமர் அந்த

• வாஜ்பாய் தங்கிய காட்டேஜ்

ஓட்டலில் தங்கவில்லை. ஓட்டல் வளாகத்தை ஒட்டிய ஒரு காட்டேஜில்தான் தங்கினார். அந்தக் காட்டேஜ் ஹாலிடே இன் ஓட்டலுக்குச் சொந்தமானது இல்லை. பிரதமரின் வளர்ப்பு மகளின் கணவரான ரஞ்சன் பட்டாச்சார்யாவுக்குச் சொந்தமானது. காட்டேஜில் பிரதமர் தங்கிய போதும், ஓட்டலிலிருந்துதான் உணவு சமைத்து அனுப்பி வைக்கப்பட்டது.

ஒருநாள் பகல் நேரத்தில், காட்டேஜின் மேலே வானில் ஒரு சிறு விமானம் தென்பட, பாதுகாப்புப் படையினர் உஷாரானார்கள். 'கமாண்டோக்கள்' சுட்டுத் தள்ளி விடுவோம்' என்று எச்சரிக்கை விடுத்தனர். அப்புறம்தான் அது விமானம் இல்லை; கிளைடர் என்று தெரிந்தது. அதனை ஓட்டி வந்தவர் ஒரு பயிற்சி பைலட். அவர் தரை இறங்கியவுடன் ஓடிச் சென்று, கைது செய்தது கமோண்டோ படை.

''பிரதமர் இருப்பது தெரியாமல் அந்தப் பக்கம் வந்து விட்டதாக அந்தப் பயிற்சி பைலட் விளக்கம் கொடுத்தபின்தான் அவர் விடுவிக்கப்பட்டார்!

ஆனால், இத்தனை அமர்க்களமும் இந்த வருடம்தான். 1985ம் ஆண்டிலிருந்து, ஆண்டுதோறும், கோடை காலத்தில் மணாலிக்கு வந்து, இந்தக் காட்டேஜில் சில நாட்கள் தங்கிவிட்டுப் போவது வாஜ்பாயின் வழக்கம். சென்ற ஆண்டு அவரால் வரமுடியாது போய்விட்டது. காரணம் கார்கில் போர்!

பிரதமர் மணாலியிலிருந்து புறப்பட்டுப் போன பின் அங்கு சென்ற பத்திரிகையாளர்களிடம் காட்டேஜ் ஊழியர் சுக்ராம் சொன்ன தகவல்:

"பிரதமருக்கு மீன் சமைத்துப் போட்டேன். மிகவும் ருசித்துச் சாப்பிட்டார்!"

— ராம்

ந



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் உங்களுக்கு 'லக்'கான வாரம். நிறைய பேர் பாராட்டுவாங்க. புகழ்ச்சிக்குக் குறையிருக்காது. பொருளாதார விஷயத்துலயும் ஓ.கே.தான். வீட்ல நல்ல காரியம் நடக்கலாம். எதிரிகள் விலகிப் போவாங்க. அரசியல்வாதிகளுக்கு நல்ல நேரம். சினிமா, நாட்டியம், சங்கீதத் துறைகளைச் சேர்ந்தவங்க வெற்றி நடை போடுவாங்க. பெண்கள் புது நகைகள், ட்ரெஸ்கள் வாங்க சான்ஸ் இருக்கு. பேச்சுல மட்டும் நிதானத்தைக் கடைபிடிங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க திறமைக்கு இப்ப நல்ல மதிப்பு. ஜாலியான சம்பவங்கள் மனத்தை நிரப்பும். கலைத்துறை, சினிமா, சங்கீதத் துறைவாசிகளுக்கு ஆரோக்கியமான நிலைமைதான். இந்த வாரம் உங்களுக்கு எதிர்ப்பே இருக்காது. வீட்ல அம்மா நலன்ல அக்கறை தேவை. சின்னச் சின்ன இடைஞ்சல்கள் வரும். பயணத்தை ஒத்திப் போடுங்க. ரொம்ப அலையாதீங்க. உஷ்ண சம்பந்தமான நோய்கள் வரலாம்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

ஜாலியான சம்பவங்கள் இப்ப நிகழும். உங்க திட்டங்கள் நிறைவேறும். பாராட்டுக்கும் வரவேற்புக்கும் பஞ்சமிருக்காது. சிலருக்குப் பதவி உயர்வு வரலாம். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதற்கான வாய்ப்பு தேடி வரும். பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. எதிரிகள் ஓடி ஒளிவாங்க. சிலருக்கு திடீர் அதிர்ஷ்டம் உண்டு. அரசியல்வாதிகள் துணிச்சலான முடிவு எடுப்பீங்க. அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கும் பஞ்சமில்லை. என்ஜாய் பண்ணுங்க.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

இந்த வாரம் உங்களுக்கே ஒரு உற்சாகம் தெரியும் பாருங்களேன். சினிமா, சங்கீதம், நாட்டியம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி மேல் வெற்றிதான். என்ஜினியரிங், போலீஸ், ராணுவத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு நல்ல முன்னேற்றம் உண்டு. எதிரிகள் ஓடி ஒளிவாங்க. கோர்ட் விவகாரங்கள்ல சாதகமான திருப்பம் வரும். வீட்டுல சுப காரியம் நடக்கும். வேலை இல்லாதவங்களுக்கு வேலை வாய்ப்பு தேடி வரும். புதியவங்க கிட்ட பழகும்போது மட்டும் எச்சரிக்கையா பழகுங்க. உடல் நலன்லயும் கொஞ்சம் கவனம் வையுங்க.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க எண்ணங்கள் எளிதில் நிறைவேறும். வெளிநாட்டுத் தொடர்பு நன்மையா அமையும். அரசு விவகாரங்கள்ல அனுகூலமான நிலை வரலாம். புகழ் பாராட்டுக்குப் பஞ்சம் இருக்காது. நண்பர்கள், உறவினர்கள் உதவ வருவாங்க. பொருளாதாரம் சீராக இருந்து வரும். இருந்தாலும் சிக்கனம் அவசியம். பயணத்தைத் தவிர்ப்பது நல்லது.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

எச்சரிக்கையா இருங்க. சின்னச் சின்னப் பிரச்னைகள் உங்களைத் தேடி வரலாம். அடக்கி வாசிங்க. உடல் ஆரோக்கியத்துலயும் கவனம் தேவை. மனசுல குழப்பமான நிலை இருக்கும். எந்த விஷயத்துலயும் ஒருமுறைக்கு இருமுறை சிந்தித்துச் செயல்பட்டால் நல்லது. சேமித்த பணம் கரைய வாய்ப்பிருக்கு. கவனம் தேவை. சினிமா, சங்கீதம், நாட்டியம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு திறமை வீண் போகாது. அரசியல்வாதிகள் எச்சரிக்கையா இருப்பது அவசியம். இந்த

ட • க் • கு • மெ • ன் •

# அக்னிசர்மா பக்கம்

## ஏப்ரல் 26 முதல் மே 2 வரை

வாரம் மட்டும் வெளியூர் ட்ரிப்பை கேன்சல் பண்ணிடுங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

இந்த வாரம் பெரிய வங்களோட தொடர்பை ஏற்படுத்திக்குங்க. கெட்டவங்களோட சகவாசத்தை நீக்கிடுங்க. உடல் ஆரோக்கியத்துல கவனம் தேவை. அரசியல், நிர்வாகம், ரசாயனம், ஆன்மீகம் போன்ற துறைகளை சேர்ந்தவங்களுக்கு யோகம்தான். கொடுக்கல் வாங்கல்ல லாபம் இருக்கும். பிற மொழிக்காரங்க உதவுவாங்க. ஏற்றுமதி இறக்குமதில லாபம் இருக்கு. வீட்ல விசேஷம் நடக்க சந்தர்ப்பம் இப்ப தேடி வரும். எதிரிகள் ஓடிப் போவாங்க.

**மீன ராசிக்காரரான பழனிபாரதி வீட்டுல ஏதோ விசேஷம் நடக்கப் போவுதாமே?**

**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்களோட முக வசீகரம் கூடும். புதிய பதவிகள் பட்டங்கள் தேடி வரும். கலைஞானம் அதிகரிக்கும். சங்கீதம், சினிமா போன்ற கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு நல்ல முன்னேற்றம் நிச்சயம். அலங்காரப் பொருள்கள் வீட்டை நிரப்பும். வாகனம் வாங்க ப்ளான் போட்டவங்க இப்ப வாங்குவீங்க. சுப செலவுகள் அதிகரிக்கும். பொருளாதாரப் பிரச்னை இருக்காது. அதுக்காக தாராளமா செலவழிக்காதீங்க. சிக்கனம் அவசியம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை அவசியம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மனகல உற்சாகம் அதிகரிக்கும். நண்பர்கள் உறவினர்கள் உதவுவாங்க. அலுவலகத்தில வேலை பார்ப்பவங்களுக்குப் பதவி உயர்வு இருக்கலாம். எதிர்ப்புகள் குறையும். பல இடங்கள்ல இருந்து வருமானம் வரும். குடும்பத்தில் சந்தோஷமான நிகழ்ச்சிகள் நடக்கும். சின்னச் சின்னப் பிரச்னை வரலாம். வந்தாலும் உடனே தீர்த்துடுவீங்க. புதியவங்க கூட பழகும்போது மட்டும் எச்சரிக்கை தேவை. பத்திரிகைத் துறையில வேலை பார்ப்பவங்க வாயைக் கட்டுறது நல்லது.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க திறமை, உழைப்பு வீண் போகாது. வியாபாரிகள் அகலக் கால் வைப்பதை தவிர்த்துடுங்க. சின்ன இடர்பாடுகள் வரலாம். பதற்றத்தைத் தவிர்த்துடுங்க. நிதானம் அவசியம். வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வரலாம். கணவன் மனைவிக்குள்ள சலசலப்பு இருந்துச்சுன்னா இப்ப குறையும். திறமை, உழைப்பு வீண் போகாது. அதற்கான பயனைப் பெறுவீங்க. வீண் அலைச்சலைத் தவிர்த்துடுங்க. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு சாதகமான சூழ்நிலை இருக்குது. நல்லா பயன்படுத்திக்குங்க.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க திறமை, ஆற்றல் இந்த வாரம் பளிச்சிடும். அரசியல்வாதிகள் மதிப்பு உயரும். புகழ், பாராட்டுக் கூடும். புதிய பதவிகள் பட்டங்கள் வந்து சேரும். இதனால ரொம்ப சந்தோஷமா இருப்பீங்க. கோர்ட்டு விவகாரங்கள்ல உங்களுக்குச் சாதகமா தீர்ப்பு வரலாம். எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. பயணத்தால நலம் கிடைக்கும். சினிமா, நாட்டியம் போன்ற கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு உற்சாகம் பிறக்கும். பொதுநலம், சமூக நலப் பணியாளர்களுக்கெல்லாம் செல்வாக்கு அதிகரிக்கும். வெளிநாட்ல இருந்து நல்ல தகவல் வரும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்கள் அறிவாற்றல், திறமை வீண் போகாது. வீட்ல நல்ல காரியம் நடக்கும். பொருளாதாரப் பிரச்னை இருக்காது. பணநடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. உங்க அழகு கூடும். எழுத்து, பத்திரிகைத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு சின்னச் சின்னப் பிரச்னை வந்து போகும். பேச்சுல நிதானம் தேவை. வியாபாரிகள் அகலக் கால் வைக்காம இருந்தா நல்லது. எதிரிகள் ஓடிப் போயிடுவாங்க. இருந்தாலும் எச்சரிக்கை அவசியம். ●

பா • ர் • ந • ட • க் • கு • ம்!



கடிகாரத்தில் சின்னமுள் கொஞ்சம் கொஞ்சமாக மேலேறிக் கொண்டிருந்தது. அதைப் பார்த்தபடியே தன் கடந்த காலத்தை சுவாதியிடம் தொடர்ந்து விளக்கிக் கொண்டிருந்தாள் ஜானகி.

''என்னை ஒரு ஹோட்டலுக்கு அழைத்துக் கொண்டு போனாள் உங்கம்மா. கட்டாயப்படுத்தித்தான். அங்கு போனதும் ''பில்லை நீ கொடுக்கப் போறியா? இல்லை நானா?'' என்றாள்.

வேலைக்குப் போகவில்லையென்றாலும் வீட்டில் அப்பா எனக்குப் பாக்கெட் மணி கொடுக்கத் தவறியதில்லை. எனவே என் பர்ஸிலும் கணிசமாகப் பணம் இருந்தது. சத்யா மேடத்தோடு நான் எங்கும் வெளியே போனதில்லை. அதுதான் முதல்தடவை. ''நானே கொடுக்கிறேன்'' என்றேன்.

''ஜானகி, யார் இப்போ பில்லை செட்டில் செய்யப் போகிறோம் என்பது பண இருப்பையோ, பெருந்தன்மையையோ காட்டும் சந்தர்ப்பமில்லை'' என்ற உங்கம்மா, ''இங்கிருந்து கிளம்பும்போது 'இனி நான் சந்தோஷமாக இருப்பேன்'னு உனக்குத் தோணினால் பில்லை நீ கொடு. வீட்டுக்குப் போய் வழக்கம் போலவே முகத்தைத் தூக்கி வச்சுக்கப் போறேன்னு பட்டால் சொல்லு. பில்லை நான் கொடுக்கிறேன்'' என்றார்.

இனி என் வாழ்க்கையில் ஏது சந்தோஷம்னு நினைச்சேன். எனவே உங்கம்மாதான் பில்லுக்குப் பணம் கொடுக்கப் போறாங்கன்னு தெரிஞ்சதாலே, ''காப்பி மட்டும் போதும்'' என்றேன்.

# 14

காப்பிக்கு ஆர்டர் கொடுத்த உங்கம்மா அடுத்த நொடியே என்னைப் பார்த்து சரசரன்னு சில கேள்விகள் கேட்டாங்க.

''இப்போ என்ன உன் வாழ்க்கையிலே நடந்து போச்சுன்னு எப்பவும் சோகமாக இருக்கே? ஓகே, விபத்தின் காரணமாக உன் கால் எலும்பு முறிஞ்சு போய் ஆடமுடியாமப் போயிடுச்சு. அவ்வளவுதானே. சுதா சந்திரன் விபத்திலே ஒரு காலையே இழந்த பிறகும் மேடையேறி நடனம் ஆடலியா?''

''மேடம், அது எனக்கும் தெரியும். அவங்க விபத்துக்கு முன்னேயே பலமுறை மேடையிலே ஆடியிருக்காங்க. ஆனால் நான் இனிமேல்தானே பரதம் கத்துக்கவே ஆரம்பிக்கணும். சில டான்ஸ் டீச்சர்கள், டாக்டர்கள் ஆகியோரை கன்சல்ட் பண்ணிப் பார்த்துட்டேன். இனிமே எனக்கு ஆட வரும்னு தோணல்லே.''

''அப்படின்னா மாற்றுப் பாதையைத் தேடிக்க வேண்டியதுதானே?''

''நோ. பல வருடங்களாக வளர்த்து வந்திருந்த என் லட்சியத்தை அப்படியெல்லாம் மாத்திக்க என் மனம் இடம் கொடுக்காது'' என்றபடி துக்கம் தாங்காமல் மேஜை

அருண் சரண்யா



யின் மீது சாய்ந்து கொண்டேன்.

"கொஞ்சம் தெளிவாய் யோசி ஜானகி. எது உன்னுடைய சின்ன வயது லட்சியம்? எதன் காரணமாக நீ டான்ஸர் ஆகணும்னு நினைச்சே? பரத அபிநயங்கள் பிடிச்சதாலேயோ? நம் கர்நாடக இசைப் பாடல்கள் அதற்குப் பக்கபலமாய் இருந்து கொடுத்த இனிமையாலேயா? அல்லது அப்போதுதான் மேடையேறிப் பலரது கைதட்டல்களை வாங்கிக் கொள்ள முடியும் என்ற காரணமா? அல்லது பெரும்புகழ் கிடைத்தால் தான் வெளிநாடுகளுக்கெல்லாம் போய் பேரும், புகழும் சம்பாதிக்கலாமென்றா? வெயிட்.. அவசரப்படாதே. நன்றாக யோசி. காப்பியைக் குடித்துவிட்டுத் தெம்பாக யோசி."

யோசித்தேன். முதலில் குழப்பமும், பிறகு

தெளிவும் பிறந்தன.

"புகழும் மேடை அங்கீகாரமும்தான் என் லட்சியத்துக்கு அடிப்படை" என்றேன்.

"அப்படின்னா வாய்ப்பாட்டு இருக்கு, வயலின் இருக்கு, வீணை இருக்கு. இதிலே எதையாவது நீ கத்துக்கிட்டு அதே புகழையும், மேடை அங்கீகாரத்தையும் பெறலாமே."

ஐந்து நிமிடங்கள் கழித்து முகத்தில் தெளிவோடு பில்லுக்கான பணத்தைக் கொடுத்தது நான்தான். அடுத்த நாளே நான் கற்றுக் கொள்ளத் தொடங்கிய வயலின் பயிற்சி, இன்று ஒரு சிறந்த வயலின் கலைஞர் என்கிற பெயரை எனக்கு வாங்கித் தந்திருக்கு."

**பொ**ன்மொழிகளை உதிர்ப்பதும், ஆலோசனை கூறுவதும் அப்படியொன்றும் பெரிய விஷயமில்லைதான். இருந்தும் அம்மாவின் வழிகாட்டலை எல்லோரும் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டார்கள் என்றால் என்ன காரணம்? எதிராளியிடம் ஆத்மார்த்தமான ஈடுபாடு அம்மாவுக்கு இருந்ததும், நடைமுறைக்குப் பயன்படும்படியான யோசனைகளை அவள் தந்ததும்தான் என்பது சுவாதிக்குப் புரிந்தது.

மேலும் யோசித்தபோது நேரில் இல்லாமலேயே, தன் முகத்தைக் காட்டாமலேயே அம்மா தன்னையும் இயக்கிக் கொண்டிருக்கிறாள் என்பது புரிந்தது. அந்த விதத்தில் ஜானகிக்கு அவள் சொன்ன விளக்கங்கள் தனக்கும் பயன்படுமா என்று யோசிக்கத் தொடங்கினாள்.

தன் சிறுவயது லட்சியம் என்ன? விமானப் பணிப்பெண் ஆவதுதானா? இல்லை. 'பறப்பதுதான்'. இரண்டும் ஒன்றுதானே? இப்போது யோசித்தபோது இல்லை என்று தோன்றியது. மதுவை வழங்குவது, மேக்கப் போட்டுக் கொள்வது, தவறு செய்பவர்களையும் இன்முகத்துடன் சகித்துக் கொள்வது இதுபோன்ற விலைகளைத் தன் லட்சியத்தை அடையக் கொடுக்க வேண்டுமா என்ன? பின் என்ன செய்ய? 'பறப்பதையே தொழிலாகக் கொள்ள வேண்டும். அதே சமயம் ஏர்ஹோஸ்டஸாகவும் இருக்கக் கூடாது' என்றால் எப்படி?

திடீரென்று அந்தப் பொறி கிளம்பியது. நடிக்க வருபவர்கள் இயக்குனர்களானதாக சொல்வார்களே, அதுபோல் விமானப் பணிப்பெண்ணாக நினைத்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு பைலட்டாகிவிட்டால்? நினைப்பே இனித்தது. ஒரு பெரிய விமானத்தைத் தான் இயக்கினால்?! அப்பாவால் நிலத்தைப் பார்த்து மட்டுமே நடக்கப் பயின்ற நான் நூற்றுக் கணக்கான பயணிகளை சுமந்து கொண்டு ஜில்லென்று மேலே பறந்தால்? இதையெல்லாம் அம்மாவிடம் உடனே பகிர்ந்து கொள்ள வேண்டுமென்ற துடிப்பு ஏற்பட்டது. ஆனால் அம்மாவிடமிருந்துதான் தகவல் எதுவும் வரக் காணோமே.

சரி, அதற்காகக் காலத்தை வீணடிப்பானேன்? பைலட் ஆவதற்கான வழிமுறைகளையெல்லாம் நாமே தெரிந்து கொண்டால்? யாரைக் கேட்க? டக்கென்று ராஜ்குமார் நினைவுக்கு வந்தார். ஒரு பத்திரிகை ஆசிரியருக்கு இதெல்லாம் நிச்சயம் தெரிந்திருக்கும்.

**"வா**ம்மா சுவாதி, உன்னை வீட்டுக்குக் கூப்பிடாமல் இருந்துட்டமேன்னு ஃபீல் பண்ணிக்கிட்டேயிருந்தேன். இன்றைக்கு கட்டாயம் நீ என் வீட்டுக்கு வரே. கவலைப் படாதே, மிஸ் கோமளாகிட்டே நானே தெரிவிச்சிடறேன்" என்ற ராஜ்குமார் தன் வீட்டுக்கு போன் செய்தார்.

"வாணி, என்னோட, மதிய சாப்பாட்டுக்கு ஒரு வி.ஐ.பி. வரப்போறாங்க. தடபுடல் சமையல் இல்லேன்னாலும் ஒரு ஸ்வீட்டும், ரெண்டு காய்கறியுமாவது இருக்கணும். வரப்போவது யாரா? கொஞ்சம் சஸ்பென்ஸ் வச்சுக்க விடமாட்டீங்களே. சரி சொல்லிடறேன். சத்யாவின் மகள்தான் என்னோடு வரப்போறா. ஓகே ஜமாய்" என்று ரிசீவரை வைத்துவிட்டுச் சிரித்தார்.

"ஒண்ணென்ன, ரெண்டு வெரைட்டி

**வீரப்பன் பயன்படுத்துவது என்ன மசாலா?**

**"கா**ட்டுக்குள்ளே சந்தனக் கடத்தல் வீரப்பனைத் தேடிக் கொண்டு போன சமயம், பல இடங்களிலும் சக்தி மசாலா காலி பாக்கெட்களை நான் பார்த்தேன். அவை எல்லாம் வீரப்பன் உணவு சமைப்பதற்குப் பயன்படுத்தியவை. ஆக, நாட்டில் வாழும் மனிதர்கள் மட்டுமில்லாமல், காட்டுக்குள் வாழுகிறவர்கள் கூட சக்தி மசாலா பயன்படுத்துகிறார்கள்"- இப்படிக் கூறியவர் யார் தெரியுமா? சென்னை நகர காவல்துறை ஆணையாளர் காளிமுத்து

ஸ்வீட்டே தயார் செய்து வைக்கப் போவ தாக வாணி சொல்லிட்டா'' என்றார்.

'அந்த வாணிக்கு என் அம்மாவின் மீது ஒரு நல்ல கருத்து இருந்திருக்க வேண்டும்.'

வந்த விவரத்தை சுவாதி கூற, ராஜ் குமாருக்கு ஒரே ஆச்சரியம். "பைலட் ஆகப் போறியா? என்னதான் முன்னேற்ற சிந்தனையே



தான்!

சக்தி மசாலா நிறுவனம், ஓமான் நாட்டி விருந்து இறக்குமதி செய்யும் பேரீச்சம் பழம், பேரீச்சை சிரப் அறிமுக விழாவில் குஷ்பு அறிமுகம் செய்ய, அவற்றைப் பெற்றுக் கொண்டு உரையாற்றினார் காளிமுத்து.

தகவல்: மௌலி

• குஷ்பு

தானே? நீங்களும் உட்காருங்க. சேர்ந்தே சாப்பிடலாம்'' என்று சுவாதி கூறி, ராஜ்குமார் அதை வழிமொழிந்தபோதும் வாணி அதற்கு உடன்பட ஒப்புக் கொள்ள வில்லை.

இப்போது சுமார் நாற்பது வயதிருக்கும் என்று மதிப்பிட முடிந்தாலும், வாணி இளமையில் அழகாகவே இருந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. ஏதோ ஒரு நிரந்தர சோகம் தெரிந்தது

இல்லாத ஒரு மூளைகெட்டவனுக்கு மகளாகப் பிறந்தாலும், சத்யாவின் ரத்தமும் உன் உடலிலே ஓடுது இல்லையா? அதனாலே தான் இந்த வித்தியாசமான ஐடியா உனக்குத் தோணியிருக்கு. எனக்கு உடனடியாக விவரம் தெரியல்லே. ஆனால் இந்தத் தகவல் களை மாலைக்குள்ளே கிடைக்க வைக்க முடியும் என்னாலே. ஒரு அரைமணி நேரம் பொறுத்திரு. வீட்டுக்குக் கிளம்பலாம்'' என்றார்.

'பண்டிட்ஜி, பண்டிட்ஜி' என்று மூசோரியிலும், காசியிலுமாகப் போற்றப்பட்ட அப்பா எங்கே, "மூளை இல்லாதவன், முரடன்" என்றெல்லாம் இங்கே இகழப்படும் அதே அப்பா எங்கே? இவ்வளவு நேரெதிரான இமேஜுகள் ஒருவருக்கே இருக்க முடியுமா? அப்படியானால் அம்மா எந்த விதத்திலேயும் குற்றவாளி இல்லையா, தன்னைப் பதினெட்டு வருடங்கள் எட்டிப் பார்க்காமல் இருந்தது உட்பட?!

ராஜ்குமார் இன்னும் திருமணமாகாதவர் என்பதும், வாணி அவரது மனைவி அல்ல; அந்த வீட்டைப் பொறுப்பாக கவனித்துக் கொள்பவள் மட்டுமே என்பதே லேசான அதிர்ச்சியாக இருந்தது சுவாதிக்கு.

என்றாலும் பார்த்துப் பார்த்து அந்தப் பெண்மணி பரிமாறிய பாங்கு சுவாதியை மிகவும் நெகிழச் செய்தது. "மூணு பேர்

அந்த முகத்தில். பரிமாறும்போது அடிக்கடி கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

வாஷ்பேசினில் கைகழுவி விட்டு வரும் போது மெல்லிய பேச்சுக்குரல் கேட்டது.

"எதுக்கு வாணி அடிக்கடி கண்கலங்கிக் கிட்டிருக்கே?" என்று ராஜ்குமார் கேட்க, "என்ன சார் செய்ய, இந்தப் பெண்ணின் அப்பாவும், அம்மாவும் பிரிய நான்தானே காரணம்கிறதை நினைத்தால் துக்கம் தாங் கல்லையே" என்ற வாணி தன் நாக்கைக் கடித்துக் கொண்டாள். தாங்கள் பேசியதை சுவாதி கேட்டுவிட்டாள் என்பதை அவள் கவனித்துவிட்டதே காரணம்.

சில நிமிடங்கள் சங்கடத்தில் கரைந்தன.

ராஜ்குமார் சுவாதியை அழைத்தார். "சுவாதி, இப்படி வந்து உட்கார். உனக்குத் தெரிந்திருக்க முடியாத, அதே சமயம் நீ தெரிந்து கொள்ள வேண்டிய பல பழைய சம்பவங்கள் உண்டு. அதையெல்லாம் உன்னிடம் சொல்ல வேண்டிய நேரம் இப்போ வந்துடுச்சு."

என்ன சொல்லப்போகிறார் என்பது சரியாகத் தெரியாவிட்டாலும், அது தன் பெற்றோரின் சந்திப்பு மற்றும் பிரிவைப் பற்றியது என்பதும், இந்த வாணிக்கும் அதில் ஏதோ முக்கியப் பங்கு உண்டு என்பதும் புரிய, சுவாதி எதிர்பார்ப்புடன் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டாள்.

(தொடர்ந்து பறக்கும்)

# முற்றும்

**பா. ராகவன்**

சகிக்க முடியாத துக்கம் நெஞ்சை அடைத்தது. பிரிவு போலொரு சோகம் வேறில்லை.

பதினான்கு வயதில், அவனுக்கு மீனா, மீனா என்றொரு காதலி இருந்தாள். பள்ளிக்கூட ஆசிரியரான அவள் அப்பாவுக்கு மாறுதல் வந்து, டெம்போவில் சாமான்களுக்கு நடுவே அவளும் ஒரு பொருள் போல் அமர்ந்து ஊரை விட்டுப் போகிற போது முதன் முதலில் பிரிவின் சோகத்தை அனுபவித்தான். அன்றைக்கு ஏரிக்கரையில் பொழுது கழிந்தது. தனக்கே வெட்கமுண்டா கும் அளவு அழுது முடித்தான். மறுநாளிலிருந்து சகஜமாகி விட்டான். காரணம், புனிதமானது. இன்னொரு தோழி வளர்மதி அன்றிலிருந்து தேவதையாகத் தெரிய ஆரம்பித்தாள்.

பிறகு என்னென்னவோ சோகங்கள். பரீட்சைக்குப் பணம் கட்ட முடியாமல் பட்ட அவஸ்தை! சீஸன் டிக்கெட்டின் இறுதிநாள் முடிந்து விட்டதை கவனிக் காமல், ரயில்வே ஆபீசரிடம் மாட்டி, எழும்பூர் கோர்ட்டில் கூண்டேறிய அவமா னம்! (கையில் காசிருந்தால் ஒருவேளை தப்பித்திருப்பான்)

'சித்துணி சித்துணி செத்தாயோ?' என்று நீட்டி முழக்கிப் பாட்டாகவே கதை சொல்லிச் சோறூட்டிய பாட்டி, படுத்த படுக்கையாய், பேச்சற்றுக் கிடந்தது இன்னொரு துக்கம்! அவனளவில் அவன் ஒரு நல்ல கேரக்டர். பாட்டியைக் கூர்ந்து கவனித்ததாலேயே அவனொரு கலைஞனாகவும் ஆகிப் போனான். பாட்டி காலத்துக்குப் பிறகு தான் அவனது அம்மா ஹிஸ்டீரியா இல்லை என்பதும் திருமணமாயிற்று.

வேலையில்லாமல் கொஞ்ச நாள் திரிந்து வந்தது, நல்ல காலம் பிறந்து – திருமணமாகி ஆரம்ப உரசல்களால் அவதிப்பட்டது, நண்பர்களின் துரோகம், அலைக்கழிக்கிற வாழ்க்கை, அவ்வப்போது சிரிக்கிற விதி – எப்படியோ சகித்துக் கொள்ள முடிந்திருக்கிறது. இதுதான், இதைத்தான் தாங்க முடியவில்லை. பிரிவு!

"வரட்டுமா?"

காதில் மெலிதாகக் கேட்கிறது குரல். 'வேண்டாம், வேண்டாம், போகாதே' என்று எத்தனை உரக்கக் குரலெடுத்து அலறியும் தனக்கே கேட்க வில்லை.

கண்கள் ஈரமாகியிருந்தன. மனைவி, அவன் கையைப் பற்றி மெல்ல அழுத்தினாள். அதிர்ச்சிகளை உள்வாங்கிக் கொள்வதி லும் சரி; ஜீரணிப்பதிலும் சரி – (அல்லது ஜீரணிப்பதாகக் காட்டிக் கொள்வதிலும்) பெண்களுக்கு ஈடு கிடையாது.

'நான் தோற்றேன்! என்னால் முடியவில்லை' என்று கதற முயன்றான். என்னென்னவோ பேச, என்னென்னவோ செய்ய, எதையெதையோ சாதிக்க நினைத்திருந்ததெல்லாம் நினைவில் முட்டி மோத –

"கிளம்புகிறேன்!" – மீண்டும் கேட்கிறது குரல்.

"வேண்டாம்! ப்ளீஸ்..." – கேவலாக வெடிக்கிறது அழுகை.

பற்றியிருந்த அவன் மனைவியின் கரம் விலக, சட்டென்று பிரிந்தது – உயிர். ●

*One & Only*

# போராட் நேரம் புதிராய் ஒரு பாடம்!

**சி.பி.ஐயில் உயர் பதவி வகித்து ஓய்வுபெற்றவர் கே. ஏ. ராஜகோபாலன். அவரது காவல்துறை அனுபவங்களை 'என் காவல் சுவடுகள்' என்ற தலைப்பில் புத்தகமாக எழுதியுள்ளார். (தமிழில்: ராணிமைந்தன்; திருமகள் நிலையம் வெளியீடு) ஏகப்பட்ட சுவையான அனுபவங்கள் இடம் பெற்றுள்ள அந்தப் புத்தகத்திலிருந்து ஒரு பகுதி:**


• கே. ஏ. ராஜகோபாலன்


• கி.ஆ.பெ.

● திருச்சியில் ஆகாஷ்வாணி/ஆல் இந்தியா ரேடியோ என்ற பெயரை திருச்சி வானொலி நிலையம் என்று மாற்றக் கோரி முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் மறியல் போராட்டத்துக்குத் தலைமைதாங்கி நடத்திக் கொண்டிருந்தார். வானொலி நிலையம் முன்பு தினமும் மறியல் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஆயிரக்கணக்கானோர் பங்கேற்றார்கள். அவ்வளவு பெரிய போராட்டத்தை எனது ஐந்து சப் இன்ஸ்பெக்டர்கள் மற்றும் நூறு காவலர்களைக் கொண்டே நான் சமாளிக்க வேண்டியிருந்தது. சட்டம் ஒழுங்கைப் பராமரிக்க வேண்டிய கடமை எனக்கிருந்தது.

போராட்டக்காரர்களின் கோரிக்கையை மத்திய அரசு கண்டுகொள்ளாமல் இருந்ததால் மறியலின் அடுத்தக் கட்டமாக, நிலைய ஊழியர்களை வேலைக்குச் செல்ல விடாமல் தடுத்து நிறுத்தும் போராட்டத்தை கி.ஆ.பெ. அவர்கள் துவக்க முடிவு செய்தார்.

நாங்கள் மிகவும் கவனமாகச் செயல்பட வேண்டியிருந்தது. எங்களது நடவடிக்கை ஏதும் அவர்களிடையே வன்முறையைத் தூண்டி விடக்கூடாது என்று மிகவும் பொறுமையாகக் காத்திருந்தோம். இந்தப் பொறுமையைப் பொதுமக்கள் பாராட்டினார்கள். ஊழியர்களை உடல்ரீதியாகத் தடுக்கும் போராட்டத்தன்று நான் கி.ஆ.பெ. அவர்களின் இல்லத்துக்குப் போய் அவரோடு விவாதித்தேன். போலீஸ் – போராட்டக்காரர்களுக்கிடையே மோதல் ஏற்படாமல் இருக்க ஒத்துழைப்பு நல்குமாறு கேட்டுக் கொண்டேன். அதற்கு அந்த மாபெரும் தமிழறிஞர் உடனே ஒப்புக் கொண்டார்.

'போராட்டக்காரர்கள் ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு வந்து சேர்ந்ததும் அங்கு காவலர்கள் ஒரு தடுப்பு வளையம் போல நின்றிருப்பார்கள். அங்கே அந்த வளையத்தை மீறிப் போகாமல் இருக்கும்படி போராட்டக்காரர்களுக்கு உத்தரவிடுங்கள்' என்று நான் கேட்டுக் கொண்டதற்கிணங்க அப்படியே முத்தமிழ் அறிஞர் உத்தரவிட்டார்.

**வா**னொலி நிலையத்துக்கு அருகே மக்கள் கூடிவிடாதபடி தொலைவிலேயே அவர்களைத் தடுத்து நிறுத்தி கி.ஆ.பெ. தலைமையில் மிகச் சிலரை மட்டுமே உள்ளே அனுமதிப்பது என்று ஏற்பாடு செய்திருந்தேன். இவ்வளவு செய்திருந்தும் கி.ஆ.பெ. வந்து சேர்ந்ததும் ஒரு காவலர் என்னை நோக்கி விரைந்து வந்து 'வெஸ்ட்ரி பள்ளிக் கூடம் பகுதியில் போராட்டக்காரர்களின் எண்ணிக்கை வேகமாக உயர்ந்து கொண்டே போகிறது. போலீஸ் வளையத்தை எந்த நேரமும் உடைக்கும் அபாயம் இருக்கிறது' என்று தகவல் சொன்னார். உடனே நான் சுமார் இருபது காவலர்களை அழைத்துக்



''ரொம்ப சந்தோஷம் சார்; உங்க மகன் கல்யாணப் பத்திரிகையில இன்னார் சமையல்னு என் பேரைக் கூடப் போட்டிருக்கீங்களே...''

''அப்படியாவது பந்திக்குக் கூட்டம் குறைவா வருதா பார்ப்போம்!''

— வாசன்

கொண்டு அந்த திசை நோக்கி ஓடினேன். அப்போது பயிற்சிக்கால உதவிக் கண்காணிப்பாளர் மோகன் என்னைப் பார்த்து, தன் சுட்டு விரலை அசைத்து 'இன்ஸ்பெக்டர்! இங்கே வாங்க!' என்றார். இதை என் உதவியாளர்கள், பொதுமக்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர் அப்படி விரல் காட்டி என்னை வரச் சொன்ன விதம் எனக்குப் பிடிக்கவில்லை. அவர் அப்போதுதான் பயிற்சிக்காலத்தில் இருக்கிறார். கூட்டத்தைக் கட்டுப்படுத்தும் முறைபற்றி அவருக்கு என்ன தெரியும்? போலீஸ் அகாடமியில் படித்த 'தியரி'யை மட்டும் வைத்துக் கொண்டு அப்படிப்பட்ட சூழ்நிலையில் செயல்பட முடியாது.

எனவே என்னை அப்படிச் சுட்டு விரல் அசைத்து, அதிலும் ஒரு முக்கியமான வேலையாக ஓடிக் கொண்டிருந்தபோது ஏதோ ஒரு கடைநிலை ஊழியரைக் கூப்பிடுவது போல அவர் அழைத்து எனக்குக் கோபத்தை உண்டாக்கியது. நான் ஓடிக் கொண்ட கழுத்தை மட்டும் திருப்பி 'சீ... போ' என்பது மாதிரி சைகை காட்டிவிட்டு என் பணியைக் கவனிக்கப் போய் விட்டேன். மோகன் அத்துடன் விட்டுவிட்டார். சில நிமிடங்களில் பெருகி வந்த அந்தக் கூட்டத்தை அடக்கி விட்டுத் திரும்பி வந்தேன். அப்போதைய டி.ஐ.ஜி. தாற்காலிக பொறுப்பில் இருந்த கே.ஆர். ஷெனாய் நடந்ததையெல்லாம் மௌனமாகப் பார்த்திருக்கிறார். கி.ஆ.பெ. அவர்களைக் கைது செய்து சப் ஜெயிலில் அடைத்து விட்டுப் போராட்டக்காரர்களைக் கலைத்து விட்ட பின் நான் டி.ஐ.ஜியிடம் சென்று எல்லாம் நல்ல படியாக முடிந்தது' என்று தெரிவித்தேன்.

ஷெனாய் அவர்களை எனக்கு முன்னமேயே தெரியும். சென்ற உலகப் போரின் போது நாங்கள் இருவரும் ராயல் இந்தியன் நேவியில் இங்ஸ் கமிஷன்ட் அதிகாரிகளாகப் பணியாற்றியவர்கள். எனவே ஒரு சுயமரியாதையுள்ள காவல்துறை அதிகாரி எப்படி நடந்து கொண்டிருப்பாரோ அப்படியே நான் மோகன் விவகாரத்தில் நடந்து கொண்டிருப்பது பற்றி என்னைப் பாராட்டுவார் என்று பெரிதும் எதிர்பார்த்தேன். ஆனால் அவரோ என்னைக் கடிந்து கொண்டார். ஒருவேளை தன் ஐ.பி.எஸ். பிரிவைச் சேர்ந்த மோகனை விட்டுக் கொடுக்கக் கூடாது என்பதற்காகவும் இருக்கலாம்.

'ராஜகோபால், நீங்கள் உங்கள் உயர் அதிகாரியிடம் நடந்து கொண்ட முறைக்காக அவரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்' என்றார் ஷெனாய்.

'நிச்சயம் கேட்கிறேன். அவரைவிடப் பணியில் மூத்த அதிகாரியான என்னிடம் அவர் நடந்து கொண்ட முறைக்காக அவரும் என்னிடம் மன்னிப்புக் கேட்பதானால்' என்றேன் பனிச்சென்று.

என் மனநிலையும், நான் சொன்னதில் இருந்த நியாயத்தையும் புரிந்து கொண்டவராய் 'இரண்டு பேரும் வாருங்கள். ஒருவருக்கொருவர் மன்னிப்பு கேட்டுக் கொள்ளுங்கள். 'ராஜு'! (என்னை) நீங்கள் முதலில் கேட்டு அவரோடு கைகுலுக்குங்கள்' என்றார். இருவரும் அப்படியே செய்தோம்.

இது நடந்து பத்து ஆண்டுகளுக்கு மேல் ஓடி விட்டது. மோகன் டெல்லி மத்தியப் புலனாய்வுத் துறையில் டி.ஐ.ஜியாக நியமிக்கப்பட்டு அங்கே வந்த போது நான் ஏற்கெனவே அங்கிருந்தேன். பணியில் சேர்ந்த பின் ஒவ்வொரு பிரிவாக வந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட மோகன், ஒரு அறையில் இன்னொரு டிஐஜியுடன் நான் ஒரு வழக்கு தொடர்பாக விவாதித்துக் கொண்டிருந்த போது அங்கே வந்தார். அந்த டி.ஐ.ஜி. என்னை மோகன் அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

'அவர் ஒன்றும் எனக்குப் புதிது அல்ல. நான் உதவி கண்காணிப்பாளராக இருந்த போது ஒருசில பாடங்களை அவர் எனக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறார்' என்று சொல்லிக் கொண்டே என் கைகளைப் பிடித்து என்னிடம் குசலம் விசாரித்தார். அது அவரது பெருந்தன்மையைக் காட்டியது.

மீண்டும் கி.ஆ.பெ.வின் போராட்டத்திற்குப் போவோம். போராட்டத்தின் கடைசி நாள் அரசியல்வாதிகள், காவல்துறை இருவருக்குமே வெற்றியாக அமைந்தது. காவல் துறையின் கடுமையான பணியை கி.ஆ.பெ அவர்களே வெளிப்படையாகப் பாராட்டினார். கி.ஆ.பெ அவர்களின் மகன் ராஜாராம் நன்றி தெரிவித்து எனக்கு எழுதிய கடிதத்தில், 'உங்களைப் போன்ற அதிகாரிகள் அதிகமாகத் தேவைப்படுகிறார்கள். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றுடன் நீங்கள் பணியாற்றியவிதம் காவல் துறையின் பெருமையை வெகுவாக உயர்த்தியிருக்கிறது' என்று குறிப்பிட்டிருந்தார். ●

நீதிபதி : ஊழல் வழக்கில் உங்களோடு சேர்த்து உங்க மனைவிக்கும் தண்டனை வழங்கப்பட்டிருக்கிறது. அது பற்றி ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?

அரசியல்வாதி : அவளை வேறு ஜெயில்ல போட்டால் நல்லது!

— அம்பை தேவா





''நீங்க ஏன் கட்சி மாறி வோட்டுப் போட்டீங்க?''

''சத்தியமா நான் கட்சி மாறலை தலைவரே, நம்ம கட்சியிலதான் இருக்கேன்!''

— சீர்காழி வி. ரேவதி

# தலைவா! தலைவா!

''தலைவர் எதுக்கு குத்துச் சண்டை வீரர்களைக் கூட்டிட்டு கவர்னரைப் பார்க்கப் போறாரு?''

''தன்னோட பலத்தை நிரூபிக்கப் போறாராம்!''

— மகாராம் திருப்பதி





''தலைவரின் இறுதி ஊர்வலத்தை டீ.வி.யில் காட்டுறாங்களாம்...''

''லைவ்வாகவா?''

— எஸ். மோகன்

''என்னது... தலைவர் வீட்டுல 'ஸ்டோரி டிஸ்கஷன்' நடக்குதா?''

''ஆமா... இடைத் தேர்தல்ல தோத்ததுக்கு கதை உடணுமே!''

— தஞ்சை தாமு



**ரோ**டு க்ளீனா இருக்கு.
வெதர் ரொம்ப கூலா இருக்கு.
ப்ரெட் ரொம்ப ஸாஃப்ட்டா இருக்கு
இந்த ஸ்ட்ரீட் ரொம்ப ஸ்மூத்தா இருக்கு

– நமது அன்றாட உரையாடலில் இது போன்ற வர்ணிப்புகள் நிறைய உண்டு.

இது போல எல்லா விஷயத்தையும் இங்கிலீஷ்லயே பேசணும்னு ரொம்பப் பேருக்கு ஆசையா இருக்கு! ஆனா பேசிப் பழக்கமில்லாததனால, ஏதாவது தப்பாயிடு மோன்னு பயமா இருக்கு!

பயத்தைத் தூக்கியெறிஞ்சுட்டு இப்ப கொஞ்சம் கவனிங்க...




ரோடு, க்ளீனா இருக்கு. இந்த வாக்கியத்துல ரோடு, க்ளீனா இந்த ரெண்டுமே இங்கிலீஷ் வார்த்தை தானே?

இந்த 'இருக்கு'ங்கற வார்த்தையை மட்டும் இங்கிலீஷ்ல மாத்திட்டா போதுமே.

'Is'ன்னா இருக்குன்னு அர்த்தம்.

இந்த isங்கற வார்த்தையை மட்டும் use பண்ணினா போதும்.

The road is cleanன்னு ஈஸியா வாக்கியத்தை அமைச்சுடலாம்.

இப்போ, இரண்டாவது வாக்கியத்தை எடுத்துக்கலாம். Weather ரொம்ப coolஆ இருக்கு.

இந்த வாக்கியத்துல 'ரொம்ப'ங்கற வார்த்தை மட்டும் extraவா இருக்கு இல்லியா?

"ரொம்ப"ங்கறதை veryன்னு சொல்லலாம். எல்லாத்தையும் இப்போ சேர்த்து சொல்லிப் பார்க்கலாமா?

The weather is very cool.
(த வெதர் ஈஸ் வெரி கூல்)

**அ**டுத்த வாக்கியம் என்ன?

Bread ரொம்ப ஸாஃப்ட்டா இருக்கு;

இதை The bread is very softனு சொல்லணும். 'ரொட்டி ரொம்ப மிருதுவா இருக்கு'ங்கறது இதோட அர்த்தம்.

# ஆங்கிலமே அருகில் வா!

வி. ராஜகோபாலன்

இந்த ஸ்ட்ரீட் ரொம்ப ஸ்மூத்தா இருக்குங்கறதை This street is very smoothனு சொல்லணும்.

இங்கிலீஷ் வாக்கியங்களை அமைக்கறது ரொம்ப ஈஸியா இருக்கு இல்லியா?

இனிமே நீங்க ஒரு பொருள் எப்படி இருக்குன்னு இங்கிலீஷ்லயே சொல்ல (பேச) ஆரம்பிச்சுடுவீங்கன்னு நினைக்கிறேன்.

என்ன நான் நினைக்கிறது சரிதானே?

சரி, இப்போ நான் சில வாக்கியங்களைச் சொல்றேன். எல்லாத்தையும் நீங்க மடமடன்னு இங்கிலீஷ்ல சொல்லுங்க பார்க்கலாம்.

- ஆப்பிள் ஃப்ரெஷ்ஷா இருக்கு.
- டீ ரொம்ப ஹாட்டா இருக்கு.
- இந்த ரூம் ரொம்ப பிரைட்டா இருக்கு.
- காபி ரொம்ப ஸ்ட்ராங்கா இருக்கு.

இது என்ன ஸார், ரொம்ப சிம்பிள்.

சும்மா ஊதித் தள்ளிடுவீங்க இல்லியா?




**ச**ரி, answer ரெடியா?

- The apple is fresh
- The tea is very hot
- The room is very bright
- The coffee is very strong




Hotன்னா 'சூடான'ன்னு அர்த்தம்

"Hot samosa"ன்னா சூடான சமோசா, சரி, hot chillyன்னா சூடான மிளகாயா? இல்லை. காரமான மிளகாய். Hotங்கற வார்த்தைக்குக் காரமானன்னு இன்னொரு அர்த்தமும் உண்டு.

இப்போ இங்கிலீஷ்ல பேச முடியுங்கற confidence வந்திருக்குமே?

**ச**ரி, நான் இப்போ இன்னும் ஐந்து வாக்கியங்களைச் சொல்றேன். நீங்க கொஞ்சம் try பண்ணினா எல்லாத்தையும் இங்கிலீஷ்லயே சொல்ல முடியும்.

1. தலையணை உறை ரொம்ப அழுக்கா இருக்கு.
2. மோர் புளிப்பா இருக்கு.
3. அந்தத் தெரு ரொம்ப குறுகலா இருக்கு.
4. தண்ணீர் ரொம்ப கலங்கலா இருக்கு.
5. ரங்கநாதன் தெரு எப்பவும் ரொம்பக் கூட்டமா இருக்கு.

**எ**ல்லாத்தையும் இங்கிலீஷ்ல எப்படிச் சொல்லணும்னு யோசிச்சு வையுங்க.

அடுத்த வாரம் பார்க்கலாம்.

## Weather / Climate

**சீ**தோஷ்ண நிலை பற்றிக் குறிப்பிட climate, weather என இரண்டு வார்த்தைகள் உள்ளன. பொதுவாக ஒரு பகுதியில் (நாட்டில்) வழக்கமாக நிலவும் சீதோஷ்ண நிலையை climate என்கிறோம்.

சீதோஷ்ண நிலையில் அடிக்கடி ஏற்படும் மாற்றங்களைத் தெரிவிக்க weather என்றும் சொல்கிறோம்.

வானிலை அறிக்கைக்கு weather report என்றும் வானிலை முன்னறிவிப்பை Weather forecast என்றும் சொல்கிறோம் அல்லவா?

மறக்காதீர்கள்– weather தற்காலிக வானிலை. climate ஒரு பகுதியின் சீதோஷ்ண இயல்பு.




# 'டச்' பண்ணிய 'நச்'!!

**அருமை**

✉ தலையங்கம் அமர்க்களம். நீங்கள் எழுதியது போல் வாஜ்பாய் செயல்பட்டால் நாட்டிற்கும் நல்ல காலம். கார்ட்டூன்களும் அருமை. குறிப்பாக மமதாவின் மகா(?) கூட்டணியைக் கிண்டலடித்துப் போட்ட கார்ட்டூன்.

சீர்காழி, கே.ஆர். வெங்கடேஷ்.

**பொலிவு**

✉ டாக்டர் ஜே.என். ரெட்டி அவர்களின் மறக்க விட மாட்டோம் படித்தவுடன் மனத்தில் புதிய பொலிவும், தன்னம்பிக்கையும் ஏற்பட்டது.

சாந்தியாகுளம், க. பாக்யமலர்.

**டச்**

✉ இரண்டு புத்தகத்தின் முதல் பக்கங் களிலும் நீங்கள் அடித்த நட்சத்திர 'நச்' எங்கள் மனசை ரொம்பவே 'டச்' பண்ணிடுச்சு தலைவா!

எடுத்தனூர், எம். மகேந்திர முருகன்.

**புரிந்தது**

✉ ஏப்ரலில் ஒரு தீபாவளி அட்டைப் படக்கட்டுரை படித்தேன். தானுவின் பேட்டியிலிருந்து ஒன்று புரிகிறது. படத்தை ரொம்பவும் ரசிப்புத் தன்மையோடு எடுத்திருக்கிறார்கள் என்பதுதான் அது.

மொரட்டுப்பாளையம், கு.நா. இராஜேஸ்வரன்.

**ஈர்ப்பு**

✉ தாம்பத்தியத்தின் மகத்துவத்தை நகைச்சுவையுடன் பிரதிபலித்த மாதுரியின் 'ஒன்ணும் ஒண்ணும் பதினொண்ணு!' சிறுகதை மனத்தை ஈர்த்தது.

போடிநாயக்கனூர், எம். பாலசுப்ரமணியன்.

**நியாயம்**

✉ கவிஞர் மேத்தாவின் காச் மூச்சில் ''இந்தியாவின் அதிசயம் தாஜ்மஹால் அல்ல. எது நடந்தாலும் தாங்கிக் கொண்டு உயிரோடு உலவுகிறார்களே, இந்த இந்திய மக்கள்தான் இந்தியாவின் அதிசயம்'' என்ற வரிகள் நியாயமான குமுறலின் வெளிப்பாடு.

கடலூர், வானவில் மூர்த்தி.

**கிச்கிச்**

✉ 'சிரிப்புச் சிகிச்சை' மாத்ருபூதத்தின் ஜோக்குகள் 'கிச்சு கிச்சு' மூட்டின. பேச்சு பாதி - மருந்து மீதி என்பதே ஒரு டாக்டரின் வெற்றிக்கு வழிகோலும் என்பதை உணர முடிந்தது!

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

**வித்தியாசம்**

✉ காதலிக்கெழுதும் கடிதத்தில்கூட, நம் நாட்டு அரசியல் நிகழ்வுகளை அச்சு பிசகாமல் கோர்த்து, அதனையே காதல் கடிதமாகவும் மாற்றிய யுகபாரதி வித்தியாசமான கவிஞர்தான்!

நல்லத்துக்குடி, கே.வி. சூர்யா.

**கானல்**

✉ செல்லுலாய்ட் ஜொலிப்பு என்பது நிரந்தரமானது அல்ல. அது வெறும் கானல் நீர்தான் என்பதை சஃபிக் சையதின் வாழ்க்கை உணர்த்தியது!

விஜயவாடா, தெனாலி ராஜன்.

**ரசனை**

✉ 'ஸுநாதனிக்கொரு காதல் கடிதம்' - பா. ராகவனின் சிறுகதை பிரத்யேக ரசனையுடன் வித்தியாசமான ரசிப்புடனும் லா.ச.ராவிற்கு நன்றி செலுத்தும்விதமாகவும் எழுதப்பட்டிருந்தது.

நெய்வேலி, சாந்தி சுந்தர்.

வட்டமேஜை




# இசையா அமைக்கிறார்கள், இசை?

உள்ளத்தில் அசைபோட வைப்பது இசை. நமது கலாசார, பண்பாட்டு மேன்மைகள் குறையாமல் இசையிலும் சரி, பாடல் வரிகளிலும் சரி, புதுமைகள் புகுத்தப்பட்ட காலத்தில் நான் உச்சியில் இருந்தேன் என்ற பெருமை ஒருபுறமிருந்தாலும், இன்றைய நிலையைப் பார்க்கும்போது நெஞ்சு நோகிறது. கோபம் வருகிறது!

இருபத்து நான்கு வயதில் தொடங்கி இன்று எழுபத்தெட்டாவது வயது வரை இசையோடு தொடர்பு கொண்டிருக்கும் நான், இன்று வரும் திரைப்பாடல்கள் இசையமைக்கப்படும்விதம் கண்டு வேதனை கலந்த கோபத்தால் உள்ளுக்குள்ளேயே வெந்து கொண்டிருக்கிறேன்.

வரிகளைச் சாப்பிட்டு ஏப்பம் விடுகின்றன, வாத்தியங்கள். பாடலைக் கேட்பவன் எழுந்து ஆட வேண்டும். அதுதான் இன்றைய இசையமைப்பாளர்களின் ஒரே நோக்கம்.

'மக்கள் ரசனை மாறி விட்டது. அவர்களுக்கு ஏற்ப நாங்கள் தருகிறோம்' என்று சப்பைக்கட்டு கட்டுபவர்கள் என் கோபத்தை மேலும் கிளறுகிறார்கள்.

ரசனை மாறிவிட்டது என்றால் டி.எம்.எஸ். கச்சேரி ஈயடிக்க வேண்டும். இன்றைக்கும் இந்த டி.எம்.எஸ். பாடிக் கொண்டிருக்கிறான், ஐயா! வந்து பாருங்கள், என் பாடல்களுக்குக் கிடைக்கும் கைதட்டலை!

நான் பாடத் தொடங்கியதும் அரங்கம் அமைதியாகி பாடலோடு ஒன்றிப் போகிறதே! மக்கள் ரசனை மாறியா விட்டது?

பாடல் வரிகள், அவற்றின் சந்தம், அவை சொல்லும் கருத்து, இதில் எதுவும் கெடாமல் இசையமைக்கப்பட்டிருக்கும் விதம், இவற்றை ஊன்றிக் கவனித்து உற்சாகமடையும் ரசிகர்கள் அன்றைக்குப் போலவே இன்றும் இருக்கிறார்கள்.

இருந்தும் சந்தம் தொலைந்து போய், 'சத்தம்' மட்டும் பிரதானமாகியிருக்கிறதே; யார் காரணம்?

பாடலின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள இயலாமல் வாத்தியங்கள் சவாரி செய்கின்றனவே, யார் காரணம்?

நான் மட்டும் கோபப்பட்டு என்ன புண்ணியம்? ரசிகப் பெருமக்களுக்குக் கோபம் வந்தால்தானே தீர்வு கிடைக்கும்?

சந்திப்பு: ராணிமைந்தன்
படம் : வெங்கடேஷ்



"உடனடியாக வீடு கட்டவோ அல்லது விரைவான முதலீட்டு லாபமோ"
எப்படியானாலும் இது ஒரு புத்திசாலித்தனமான முதலீடு.

# இந்த வீட்டு மனையை வாங்கச் சரியான நேரம்

## (கீழே கொடுத்துள்ள 5 காரணங்களுக்காகவே)

# சிந்து நகர், சென்னை–600 056

சவீதா டெண்டல் காலேஜ் அருகில் – CMDA அப்ரூவ்டு மனைகள். (நெ. 65/99.)

அமைந்துள்ள இடம் 

மாநகருக்கு மிக அருகில் 

பாதுகாப்பு 

முதலீடு செய்யும்
பணத்துக்கு தகுந்த மதிப்பு 

வேகமாக உயரும்
நில மதிப்பு 

### சிறப்பு அம்சங்கள்

● உடனே வீடு கட்டலாம் / அருகில் வீடுகள். ● கோயம்பேட்டிலிருந்து 10 நிமிட பயணம். ● அண்ணா நகரிலிருந்து 15 நிமிட பயணம். ● சுலபமான மூன்று வழிப் பாதைகள். கிண்டி, செயிண்ட்தாமஸ் மவுண்ட் போரூர் 100 அடி சாலை. அரும்பாக்கம், கோயம்பேடு, மதுரவாயில் 100 அடி சாலை / அம்பத்தூர், ஆவடி 60 அடி சாலை. ● சென்னை-பெங்களூர் (NH4) தேசிய நெடுஞ்சாலை. ● கோயம்பேட்டில் அமைந்துவரும் பிரம்மாண்ட பஸ் நிலையம். ● தாம்பரம்-வானகரம் புறவழிச் சாலை. ● மாநகரின் அனைத்து பகுதிகளுக்கும் தாராளமான பஸ் வசதி. ● மெடிக்கல், டெண்டல், இஞ்சினியரிங், கேட்டரிங் ஆர்ட்ஸ் கல்லூரிகள் மிக அருகில். ● சுவையான / மிருதுவான நிலத்தடிநீர். ● **சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம். ● உடனடி பத்திரப் பதிவு.**

### BLBயின் உறுதி செய்யப்பட்ட சேவை (விற்பனைக்கு பின்)

● 5 வருடங்களுக்கு மனை பாதுகாப்பு சேவை. ● பத்திரப் பதிவுக்கு பின் தனிப் பட்டா ஏற்பாடு (பட்டா செலவு தனி.) ● வீடு கட்டும் பட்சத்தில் BLB மூலமாக கட்டுமானப் பணி ஏற்பு. ● வீடு கட்ட கடன் வசதி ஏற்பாடு.

**தவணை முறை கிடையாது**

மனையை பார்வையிட இலவச வாகன வசதி தினமும்
காலை 7.00 மணி, 11.00 மணி மற்றும் மாலை 3.00 மணி

**PH : 4357721 / 31 *TEL-FAX.* 4353183 ● CELL : 98400-44018**




# BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats", Rathna Nagar, Off : Anna Salai,
**Teynampet, Chennai - 600 018.**
(Behind Apollo Cancer Hospital)

## வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka